தஞ்சை ஸரஸ்வதி மஹால் வெளியீடு – 127.

# தனிப்பாடற்றிரட்டு

## (பொழிப்புரையுடன்)

## இரண்டாம் பாகம்



பதிப்பாசிரியர் :

வித்துவான் ச. பாலசுந்தரம்,
தமிழ்ப் பேராசிரியர்,
கரந்தைப் புலவர் கல்லூரி, தஞ்சாவூர்.



தஞ்சை ஸரஸ்வதி மஹால் நிர்வாகக் கமிட்டியினருக்காக
கௌரவக் காரியதரிசி,
**நீ. கந்தசாமிப் பிள்ளை**
அவர்களால்
**வெளியிடப்பட்டது.**



சகம் 1891] விலை ரூ. 6-50 [கி. பி. 1969

# PREFACE

From among the many manuscripts which still lie unearthed in the shelves of the Sarasvati Mahal Library Thanjavur, we are offering some stray verses to the students and scholars of Tamil through this volume. Apart from the coherent and sustained poetical compositions, the great poets of the past gave utterance to a number of incdeintal and occasional stanzas of which some have a great beauty of general thoughts in their isolation. This is because they did not write poetry, but they spoke poetry and breathed poetry. Poetry to them, was not an avocation or a pastime, but a way of living. They "lisped in numbers and numbers came." The T. M. S. S. M. Library has among its codices a considerable collection of such poems which are known as **Thanippadal**. An anthology of 216 such stanzas, which have not been brought to light before, were selected and published by the Library as the first part of Thanippadal Thirattu in the year 1967. It is now followed up with the second part, which, we hope, would be received with appreciation and delight by the public. In order to make it useful to the lay, as well as to the scholarly reader, a simple prose rendering with brief contextual references, wherever available, has been added, as in the previous part, by our learned and experienced editor.

The Administrative Committee is thankful to Pulavar S. Balasundaranar for his having edited the work in such a useful and scholarly manner, adding his lucid prose rendering to the verses.

Our thanks are due to the Curator, Government Oriental Manuscripts Library, Madras for his kind loan of the transcribed copy of the manuscript of the Thanippadal collection in his library and for having permitted us to select from it some verses which were not found in our collection.

We wish to record here what is always present in our mind, namely our gratitude to the Government of Tamil Nadu for their munificent recurring grant for the publications of the Library, but for which such publications would have to remain as a mere wishful thinking. It is our fervent hope that we may widen our publication activities in the future, with the greater encouragement and aid of the Government and with the fuller appreciation and co-operation of scholars.

Thanjavur, 27—11—69.

N. Kandaswamy.
Honorary Secretary.

# முன்னுரை.

*இந்திரற்கும் பிரமற்கும் முதல்வன் றன்னை*
*இருநிலங்கால் தீநீர்விண் பூதமைந்தாய்*
*செந்திறத்த தமிழோசை வடசொல் லாகித்*
*திசைநான்கு மாய்த்திங்கள் ஞாயி றாகி*
*அந்தரத்தில் தேவர்க்கும் அறிய லாகா*
*அந்தணனை அந்தணர்மாட் டந்தி வைத்த*
*மந்திரத்தை மந்திரத்தால் மறவா தென்றும்*
*வாழுதியேல் வாழலாம் மடநெஞ் சம்மே.*

[திருமங்கையாழ்வார்]

செந்திறத்த தமிழோசையால் திகழும் இந்நூல் தஞ்சை சரசுவதிமகால் நூல்நிலைய வெளியீடான தனிப்பாடற்றிரட்டின் இரண்டாம் பகுதியாக வெளிவருகிறது. இதன் முதற்பகுதியில் தனிப்பாடல்களின் தோற்றம், வளர்ச்சி, சிறப்பு, பயன், இலக்கிய மதிப்பு ஆயவை பற்றியும், மகாலில் உள்ள ஏடுகள் பற்றியும், ஏடுகளில் அமைந்துள்ள பாடல்களின் நிலையும், அவற்றைச் செம்மைப் படுத்துவதற்குரிய வருத்தமும் பற்றி ஓரளவு கூறியுள்ளேன், ஆதலின் இவ் இரண்டாம் பாகத்தில் தொகுக்கப்பெற்றுள்ள பாடல்களைப் பற்றிய இன்றியமையாத கருத்துக்களையும், பதிப்பிக்கப்பெறாத பாக்களைப்பற்றியும், பிறரால் பதிப்பிக்கப்பெற்று வெளிவந்துள்ளவை என நீக்கப்பெற்றனவற்றுள் இந்நூல் நிலையச்சுவடிகளில் காணப்பெறும் சிறந்தபாடவேறுபாடுகளைப்பற்றியும் ஒரு சிறிது இம்முன்னுரையிற் கூறவிழைகின்றேன்.

இத்தொகுதியுள் பாடல்கள் பொழிப்புரையுடன் பதிப்பிக்கப்பெற்றுள. இவற்றுள் வெண்பா, கட்டளைக்கலித்துறை, ஆசிரிய விருத்தம், சந்தவிருத்தம் ஆய யாப்பு வகைகளே மிகுதியாக உள. இவற்றைப்பாடிய புலவர்களைப்பற்றியும், பாடப்பெற்ற சூழ்நிலைபற்றியும் தெளிவாக அறியக்கூடவில்லை, எனினும் பாடப்பெற்ற புரவலர்கள், வள்ளல்கள், குறுநில மன்னர்கள் ஆயவர்களுள் ஒருசிலரின் சிறப்புக்களும், பண்புநலங்களும் வரலாறுகளும் ஓரளவு புலனாகின்றன. *M. No 684 D. 335* ஆம்எண்ணுள்ள சுவடியிற் காணப்பெறும் பாடல்களில் வரும் தகுவை (தகுபாடி) வேங்கடபதிராயன், இராசையூர் சின்னத்தம்பிராமன், மாந்தை வயித்தியநாதன், நாச்சியப்பன், குருவபூபதி, மெய்க்கபூபதி, இரிஞ்சிபுரம் சுயம் புலிங்கம், மன்னாருசெட்டி, ஞானமூர்த்தி, சவளிவெங்கண்ணன் சேர்வை, சோமனாதன், கச்சிராசையூர் முத்தப்பன், முத்தப்பபூபதி இவர்களைப்பற்றி மிகுதியாகப் பேசப்பட்டுள்ளது. இவர்களுள் சிலர்மேல் பருவத்திற்கு ஒன்றாக ஒவ்வொரு பிள்ளைத்தமிழும், வாழ்த்துப்பாடல்களும் பாடப்பெற்றுள்ளன. இவற்றால் இவர்களின் பண்புநலன், ஆட்சிச்சிறப்புக்களேயன்றி அவர்தம் முன்னோர் வரலாறுகளும் ஓரளவு புலனாகின்றன முத்தப்பபூபதி, இராசகோபாலன், தானப்பன் மங்கைபாகன் சிதம்பரம் முதலானோர் பற்றிய புறநிலை வாழ்த்துப் பாடல்களால் பற்பல செய்திகள் புலனாகின்றன.

இத்தொகுதியுள் அமைந்தபாடல்களுள் சில இலக்கிய நலமும், சிறப்பும் இல்லாதவையாக உள; யாப்புநலனும் அவ்வாறே பல இடங்களிற் சிதைந்தும் பிறழ்ந்தும் உள, எனினும் பல பாக்கள், இலக்கியச் செறிவும் நயமும் சுவையும் உடையவாக அமைந்து இன்புறுத்துகின்றன.

முதற்பாகத்தைப் போலவே இவ்விரண்டாம் பாகத்தில் அமைந்துள்ள பாடல்களுக்கு விளங்குமளவிற்கு எளிமையும் சுருக்கமும் அமைந்த பொழிப்புரையும், இன்றியமையாத இடங்களுக்கும் அரிய சொற்களுக்கும் குறிப்புரையும் வரைந்துள்ளேன். உரையானது மிகவும் சுருக்கமாக இருக்கவேண்டுமென்ற காரணத்தால், எல்லா நயங்களையும் சுவைகளையும் ஒன்றற்கு மேற்பட்டு விளங்கும் உரைகளையும் எழுதாமல் அறிஞர்களின் பொறுப்பில் விட்டுள்ளேன். எடுத்துக்காட்டாக இப்பகுதி 143-ஆம் பாடலாகிய

" சந்ததமும் போற்றும் சயவர்சோ ஞசலஞர்
கந்தனுட மாமிதனைக் கைப்பிடித்தார் அம்மானை
கந்தனுட மாமிதனைக் கைப்பிடித்தா ராமாகில்
இந்த உலகத்திற் கேற்குமோ அம்மானை
ஏற்குமென்றே கையில்மழு ஏந்தினர்கா ணம்மானை."

என்னும் அம்மானைப்பாடலின் இரண்டாமடிக்கு மானைக்கைப் பிடித்தார் என்பது உரையாகும் அஃதாவது கந்தன் மனைவி வள்ளி; வள்ளி மான்வயிற்றிற் பிறந்தாளாதலின் மான் வள்ளியின் தாய் எனவே கந்தனுக்கு மாமி, மான் என்ருகிறது. சிவபெருமான் மானைக் கையில் ஏந்தியுள்ளாராகலின் இவ்வாறு சமற்காரமாகப் பாடினுர் எனலாம். 'மழு' ஏந்திஞர் என்பதற்கு காய்ந்த மழுவைச் சத்தியத்திற்காக ஏந்திக்காட்டினுர் என்றும் பொருள்கூறலாம்; சத்தியம் செய்வோர், அனலிற் காய்ந்த இரும்பை ஏந்துவது அக்கால மரபாகலின் இவ்வாறே பல பாக்களுக்கு பொருள் காணலாமெனினும் ஒரு பொருளே எழுதப்பெற்றது.

இனி மகாலில் உள்ள ஓலைச்சுவடிகளோடு ஒப்பிட்டுப் பார்ப்பதற்காக தமிழ்நாடு (சென்னை) அரசாங்கக் கையெழுத்துச் சுவடி நூல்நிலையத்திலிருந்து தருவிக்கப்பெற்ற தனிப் பாடற்றிரட்டுச் சுவடியுள் அச்சிடப்பெருத பாடல்கள் பல இருந்தன. அவற்றையெல்லாம் செப்பனிட்டு வெளிப்படுத்துவது தமிழிலக்கிய உலகத்திற்குப் பெரிதும் பயன்தருவதாகும் அத்துடன் இதுவரை வெளிவந்துள்ள பாடல்களுள் சில, தக்க பாடவேறுபாடுகளோடு காணப்படுகின்றன. அவற்றை மீண்டும் வெளிப்படுத்துதலும் நலம்பயக்கும். எடுத்துக்காட்டாக

" வேம்பாகி லும்மினிய சொல்லிக்கு நீபுனைந்த
வேம்பாகி லும்முதவ வேண்டாவோ? — தேம்பாயும்
வேலையிலே வேலைவைத்த மீனவா திண்புயத்து
மாலையிலே மாலைவைத்தாள் மான் "

இவ்வெண்பா இதுகாறும் அச்சாகி வெளிவந்த நூல்களுள் தனிச்சீர் 'மீன்பாயும்' என்றும், மூன்ரும்அடி இறுதிச்சீர் 'தின்புயத்து' என்றும் காணப்படுகினறன. இப்பாடல் பாண்

டியன் மேல் காதல் கொண்ட ஒருத்தியின் வேட்கையைச் செவிலியோ அல்லது தோழியோ கூறுவதாக மடக்கு என்னும் சொல்லணி நயம்பட அமைக்கப்பட்டுளது. இங்கே காணப் பெறும் பாட வேறுபாடுகளுள் 'தேம்பாயும்' என்பதன் பொரு ளும் வரலாறும், திண்புயத்து என்பதன் நயமும் ஓராமல் எழுதியது ஏடெழுதுவோர் புரிந்த பிழையால் நேர்ந்திருக்க வேண்டும். இவ்வாறு "எழுதியவன் ஏட்டைக் கெடுத்தான்" என்னும் பழமொழிக்கு எவ்வளவோ எடுத்துக் காட்டுகள் உள. இனி இவற்றிற் காணப்பெறும் "மீன்பாயும்" வேலை (கடல்) என்றதனால் ஒருபொருட்சிறப்போ, கவிதை நயமோ அல்லாமையோடு வேலையிலே வேலை (வேலாயுதத்தை) வைத்தமைக்கோர் காரணமும் புலப்படாமல் வெற்றெனத் தொடுத்தல் என்னும் குற்றமும் படுகின்றது. இனி மீனவா! எனமுன்னிலைப் படுத்திய போதேநின் என்பது போதரும். தலைவி மாலையிலே (வேப்பமாலையில்) மாலை வைத்தமைக்கு (மாலை = மயக்கம்) காரணம் புலப்படாதொழிகின்றது.

இப்பாடலுள் தேம்பாயும் என்பதற்குப் பொருள் பாண்டி யனுக்குரிய தேசத்தின்மேல் அவன் மண்ணைக் கவரும் பொருட்டுப பாயும் என்பதாம். இதனைத் திருவிளையாடற் புரா ணம் கடல்சுவற வேலெறிந்த படலத்துள் உக்கிர குமாரபாண் டியன், கடலரசன் தன்நாட்டைக் கவர மீதூர்ந்தபோது வேலை எறிந்து அவனை அடக்கினான் எனப்பேசுகின்றது. இவனை 'வடிம்பலம்பநின்றபாண்டியன்' எனச் சங்கநூல்கள் கூருநிற்கும். இவ்வரலாற்றினைக் கலித்தொகையில் வரும்

"மலிதிரை யூர்ந்துதன்மண் கடல் வௌவலின்
மெலிவின்றி மேற்சென்று மேவார்நாடிடம்படப்
புலியொடு வில்நீக்கிப் புகழ்பொறித்த கிளர்கெண்டை
வலியினான் வணக்கிய வாடாச்சீர்த் தென்னவன்"

என்னும் 104–ஆம் பாடற் பகுதியும் சுட்டுவதை அறியலாம் எனவே பாண்டியன் தேயத்தைக் கவரவந்த கடல்மீது தன் வேலைப் பாய்ச்சினான் என்ற கருத்துப்பட "வேலையிலே வேலை வைத்த மீனவா" எனப் பாடப்பெற்றமையின் 'தேம்'பாயும் என்னும் பாடத்தின் சிறப்பைக் காரணகாரியத்தோடு உணர முடிகின்றது. மற்றும், தலைவி பாண்டியன்மீது மையல்கொள்

வதற்கு அவன் திண்ணிய புயமே காரணமாம். திண்மைஎன்ற சொல்லிற்கு அழகு ஆண்மை, உறுதி முதலிய பொருள்களே யன்றி இந்த நிலப்பாரத்தைத் தாங்கிநிற்கும் பெருமையும் உணர்த்தலின் தன்பெண்மைக்கு ஏற்பத் திண்புயத்தின் மாலை யிலே மாலை வைத்தாள் மான் என்றாள். இதனால் 'நின்புயத்து' என்பதைக் காட்டிலும் 'திண்புயத்து' என்ற பாடத்தின் அழகையும் நுண்மையையும் இனிதுணரலாம். இவ்வாறு பொருட் சிறப்புடைய பாடபேதமுள்ள பாடல்களை மீண்டும் நல்ல தொரு பதிப்பாக்கி வெளிப்படுத்துவது நலமாம்.

இனி இவ்விரண்டாம் பகுதியில் கீர்த்தனை வடிவில் பதினைந்துபாடல்கள் உள அவற்றை இயன்றவரை செம்மைப் படுத்தியுள்ளேன் அவை பெரும்பாலும் எளிய சொற்களால் அமைந்திருத்தலின் பொழிப்புரை இன்றி மூலபாடமட்டுமே சாலும்எனக் கருதிப் பதிப்பிக்கப்பெற்றன.

இவ்வாறாக இப்பகுதியில் வந்துள்ள பல்சுவைப் பாக்களுள் பல, இலக்கிய வரலாற்றாராய்ச்சியாளர்க்குப் பெரிதும் பயன்படும் என்பதில் ஐயமில்லை. இதுகாறும் வந்துள்ள பாடல்களுள் சிலவோ பலவோ, தங்களிடம் இருப்பின் அவற்றை அப்பெருமக்கள் அறிவித்து உதவினால், ஒப்பிட்டு அடுத்து வரும் பதிப்பில் செம்மையாக வெளியிடலாம். அவர் கட்குத் தமிழுலகம் பெரிதும் நன்றி செலுத்தி மகிழும்.

முதற் பகுதியைப் போலவே இவ்விரண்டாம் பகுதியை யும் செப்பனிட்டு அச்சாக்கித்தரும் பணியை எனக்களித்த முன்னாள் மதிப்பியற் செயலாளர் திரு *O. A.* நாராயணசாமி அய்யர், பி. ஏ., பீ. எல், அவர்கட்குப் பெரிதும் நன்றியுடை யேன். இந்நூல் அச்சாகி வருங்கால் மகால் நூல்நிலையத்தின் மதிப்பியற் செயலாளராக வந்து வீற்றிருக்கும் தமிழ்ப்பேரறி ஞரும், நூலகக் கலைவல்லுநரும், அருங்கலை விநோதரும், தமிழ்த்தொண்டிற்கே தன்னை ஆளாக்கிக் கொண்டு பணி புரிந்து திகழ்பவரும், எனக்கு அவ்வப்போது இன்றியமையாத பல ஆக்கமான கருத்துக்களை அறிவித்து என்னை ஊக்கியும் உதவியும், அருள் புரிபவரும், என்மதிப்பிற்கும் வணக்கத்திற் கும் உரியவருமான, மூதறிஞர் திரு நீ. கந்தசாமிபிள்ளை அவர் கட்கு என்றும் நன்றியுடையேன். முற்பகுதியைப்போலவே

இவ்விரண்டாம் பகுதி வெளிவருவதற்குப் பல்லாற்ருனும் துணைபுரிந்து, அன்புகாட்டி உதவிவரும் வடமொழிப் பேராசிரியரும், செந்தமிழ்ச்சுவைஞரும், மகால் நூல்நிலைய மேலாளருமான திரு V. கோபாலஅய்யங்கார், எம். ஏ., அவர்கட்குஎன் அன்புகனிந்த நன்றியுரித்தாகும். முன்பகுதிபோலவே, இப் பகுதிக்கும், வேண்டிய துணைபுரிந்து, சுவடிகளை ஒப்புநோக்குதல், அச்சுப்பிழைகளைத் திருத்துதல் முதலியவற்றிற்கெல்லாம் ஒத்துழைப்பு நல்கிவரும் என் அன்பரும் நண்பருமான மகாலின் தமிழ்த்துறைத் தலைவர் புலவர் திரு வீ. சொக்கலிங்கம் அவர்கட்கு என் வாழ்த்தும் நன்றியும் உரியவாகும். யாவற்றிற்கும் மேலாகத் தோன்ருத் துணையாக நின்று இப்பணியை இனிது நிறைவேற்றியருளும் இறைவன் திருவடிகளையும், தமிழ்த்தாயின் பேரருளையும் எண்ணி வாழ்த்தி வணங்குகின்றேன்.

கரந்தை,
*1—11—69.*

**ச. பாலசுந்தரம்,**
பதிப்பாசிரியர்



ஓம்

# தனிப்பாடற்றிரட்டு

## [ இரண்டாம் தொகுதி ]

தோற்றுவாய்

‘ஆறுமுகனுய்க் கையில் வேலேந்தி, மயில்மீது விளங்கும் முருகனைக்கண்டு சேவிக்க ஆயிரம் கண்கள் வேண்டும்’ எனக் காட்சியின்பத்தை ஓர் அடியார் வியந்து கூறுவதிப்பாடல்.

[கட்டளைக் கலித்துறை]

1. **தூவிக் கலாப மயிலுங்கை**
**வேலும் துணைச்சிலம்பும்**

**தாவிக் கவலையுண் தண்டையந்**
**தாளும், சரவணப்பேர்**

**வாவிக் கமலத் திருமக**
**வானன் வடிவுகண்டு**

**சேவிக்க ஆயிரம் கண்வேணும்**
**யாவர்க்கும் தேவர்க்குமே!**

வீற்றிருக்கின்ற சிறகோடு கூடிய தோகையை யுடைய மயிலும், கையகத்து ஏந்தியிருக்கும் வேலும், இரு பாதச்சிலம்பும், அடியார்கள் உருகி வேண்டும்போது தாவிச்சென்று அவர் மனக்கவலைகளை உண்டு நீக்கும் தண்டையணிந்த தாள்களுடன், சரவணப்பொய்கையி

னிடத்தே தாமரை மலர்களில் மகவாய்த் தோன்றிய வனுகிய ஆறுமுகப்பெருமானின் திருவடிவைக்கண்டு வழிபட்டு மகிழ, இவ்வுலகில் எல்லோருக்கும் வானுலகத் தேவர்களுக்கும் ஆயிரங்கண்கள் வேண்டும்.

[இப்பாடலின் இடையடிகள் இரண்டும் பாடம் பிறழ்ந்துள்ளன. ஒருவாறு செப்பனிட்டுப் பொருள்கொள்ளப்பட்டது.]

---

தோற்றுவாய்

தலைவனோடு உடன் போகும் தலைவி ஒருத்தி வழியிற் கண்ட அந்தணச் சான்றோரைத் தன் மனையில் உள்ளார்க்குத் தன் விருப்பத்தைக் கூறுமாறு வேண்டிக் கொள்வது—இது “ தலைமகள் தன்செலவு ஈன்றோட் குணர்த்தி விடுத்தல்” என்னும் துறையைச் சார்ந்தது.

[கட்டளைக் கலித்துறை]

2. **அறமே நிறைந்த வயிரவ**
**நாதன் அணிவரைமேல்**

**திறமே சொலுமந்த ணீர்! பெற்ற**
**தாயரைத் தெண்டனிட்டேன்,**

**புறவோ திமங்கிள்ளை நவ்விக்குப்**
**பால்பெய்து போமதனால்**

**சிறைமேவு முல்லையைக் காக்கச்சொல்**
**வீரென்றன் சேடியர்க்கே!**

ஆட்சியிலும் மாட்சியிலும் அறத்தால் நிறைந்தொளிரும் வயிரவநாதன் என்பானுடைய அழகிய மலையிடத்தே, தவத்தால் விளங்கி வேதத்திறங்களையே கூறிவரும் அந்தணர்களாகிய சான்றோர்களே ! (நீவிர்

என் மனைவழியே செல்லுங்கால்) என்னைப்பெற்ற தாயரைத் தெண்டனிட்டேன் என்றும், யான் வளர்த்த புரு, அன்னம், கிள்ளை, மான் ஆயவற்றிற்குப் பால் முதலிய தவறாது பெய்தளிப்பர் எனினும், வேலிப்புறத்தே வளர்ந்துள்ள முல்லைக்கொடியை மறவாது காக்குமாறும் சொன்னேன் என்றும், எனது தோழியரிடம் சொல்லியருளுமாறு வேண்டுகின்றேன்.

[திறமேசொலும்=இம்மை மறுமை வாழ்வுபற்றிய உறுதிகளைக் கூறும் எனலுமாம. நற்றாயும் செவிலியுமாய இருவரையும் சுட்டித் தாயரை என்றாள். புறவு=புரு. ஓதிமம்=அன்னம். நவ்வி=மான். சிறை=வேலி. முல்லையும் தான் வளர்த்ததாதலின் அப்பாசந்தோன்றக் கூறினாள். எனவே பிறர் மாட்டுள்ள தன் அன்பிற்குக் கரையில்லை என்பது புலப்படுத்தாள்].

---

தோற்றுவாய்

'திருச்செந்தூர் வேலவனை, இன்பக்காலத்தும் துன்பக்காலத்துமன்றி இறக்கும்போதும் மறவேன்; முடிவாகத் தலையோடுபற்றி எரியும்போதும் வேலும் மயிலும் என்பேன்' எனத் தன் முருகபக்தியை ஓர் அடியார் விளக்குவது, இப்பாடல்.

**3. ஆம்போதும் வேலும் மயிலுமென்**
**பேன்அந்திக் காலம்பட்டுப்**

**போம்போதும் வேலும் மயிலுமென்**
**பேன்மெய் பொலிவழிந்து**

**சாம்போதும் வேலும் மயிலுமென்**
**பேன்தலை யோடுபற்றி**

**வேம்போதும் வேலும் மயிலுமென்**
**பேன்செந்தில் வேலவனே!**

திருச்செந்தூரில் கோயில் கொண்டருளும் வேலவனே! இவ்வுலக இன்பமெல்லாம் உளவாகும்போதும் வேலும் மயிலும் (துணை) என்பேன்; அவ்வின்ப நுகர்ச்சி யாவும் இறுதியாகிப் போம்போதும் வேலும் மயிலும் என்பேன்; இந்த உடல் அழகிழந்து மெலிந்து சாகும் போதும் வேலும்மயிலு மென்பேன். இறுதியாகச் சுடலையிலிட்டு எரிக்குங்கால் தலையோடுபற்றி வேகும் போதும் வேலும்மயிலும் என்பேன். ஆதலின் காத்தருள் செய்வாயாக.

[உள்ளம் உணர்வு உயிரேயன்றி அசத்தாகிய தன் உடலும் வேலவனிடம் பத்திகொண்டிருக்கும் நிலையைத் தெளிவாக்குவார் "தலைஓடு பற்றி வேகும்போதும் வேலும் மயிலுமென்பேன்" என்றார்].

---

தோற்றுவாய்

'இறைவன் மகனாகிய கருணைக்கடலாம் பழநி வேலனை மறந்தால், தன் தலைஓடு வெடித்துவிடும்' என்று தன் மாறாத பக்தியை ஓர் அடியார் தெளிவிப்பது இப் பாடல்.

[கட்டளைக் கலித்துறை]

4. காலனை வீழ உதைத்தோன்
மகனைக், கரக்குதனைக்
கீலனைச் சூரனை வேரறத்
தோனைக், கிருபாகரனைப்

**பாலெனுந் தேமொழி வள்ளிபங்**
**காளனைப் பண்பழநி**
**வேலனை யான்மறந் தாற்றலை**
**யோடு வெடித்திடுமே.**

மார்க்கண்டேயனுக்காகக் காலனை அவன் ஊர்தியினின்றும் விழுமாறு உதைத்த சிவபெருமானின் மகனை; கரக்குதனையும் கிலனையும் சூரனையும் அவர்தம் வரபலத்தோடு முற்றும் அழித்தவனை; கருணைக் கடலாயவனை; பால் போலும் இனியமொழி பேசும் வள்ளியம்மையின் கணவனை; புகழ் மேவிய பழநித்தலத்திலே விளங்கும் வேலனை யான் மறவேன். மறந்தால் என் தலையோடு வெடித்துவிடும்.

[கரக்குதனை, கிலனை, எனவரும் சொற்கள் விளங்கவில்லை. கிலகன் என்றோர் அசுரன் புராணங்களில் காணப்படுகிறான். பதுமாசூரனை ஒப்ப இவ்விருவரும் அரக்கராய் முருகனால் வெல்லப் பட்டவர் எனத்தெரிகின்றது. பண்பழனி=பழமையான பழநித் தலம் எனலும் ஆம். என்னால் மறந்திருக்க இயலாதென்பார் "மறந்தால் தலையோடு வெடித்திடுமே" என்றார்].

---

தோற்றுவாய்

கழுகுமலையில் விற்றிருக்கும் முருகப்பெருமானின் பேரருள் வாய்க்கப்பெற்ற நமக்கு, இம்மை மறுமைத் துன்பங்கள் வந்தணுகாவென்று ஓர் அடியார் கூறுவது இப்பாடல்.

[கட்டளைக் கலித்துறை]

5. **ஆதித்தன் முன்னே பனிநிற்கு**
**மோ? என் வினையகலப்**

**போதித்த பிள்ளை கழுகாச**
**லேந்த்ரன், புவனமெல்லாம்**
**வாதித்த சூரனை நிர்த்தூளி**
**யாக்கிநல் வாழ்வையெல்லாம்**
**சாதித்த சேவக னுண்டே**
**நமக்கில்லைச் சத்துருவே.**

வெம்மையான கதிர்களையுடைய சூரியனுக்கு முன்னே சிதறிப்புகையும் பனியானது எதிர்நிற்குமோ? நில்லாது (அதுபோல) நெஞ்சமே! என் பழவினையெல்லாம் நீங்கு மாறு ஞானநெறியைப் போதித்த பிள்ளையனும், கழுகுமலைக்கிறைவனாகிய முருகன், இவ்வுலகத்தையெல்லாம் வாதனைசெய்து வந்த சூரனை அவன் கூட்டத் தோடு துகளறப்போக்கித் தேவர்க்கும் யாவர்க்கும் எல்லா நல்வாழ்வையும் நிலைபெறச்செய்த பேராண்மை யுடைய வீரன் (நமக்கும் துணையாக) இருப்பதனால் நமக்கு எப்படிப்பட்ட பகையும் இல்லை என அறிக.

['போதித்த' என்றதனால் 'ஞானநெறி' எனக்கொள்க. போதம்=ஞானம் 'வாதித்த' எதிர்நின்று கொக்கரித்த என்று மாம். சேவகன் = முருகன். கழுகாசலேந்திரனாகிய சேவகன் உண்டு எனக்கூட்டுக. இப்பாட்டு எடுத்துக்காட்டுவமையணி நயப்படநின்றது.]

---

தோற்றுவாய்

தலைமகளைப்பிரிந்து பொருளீட்டச்செல்லும் தலைவன் இடைவழியிலே தலைவியின் நினைவு காரணமாக நெஞ்சோடு புலம்புவதாக அமைந்துள்ளது இப்பாட்டு. இஃது 'இடைசுரத்தழுங்கல்' என்னும் அகத்துறையைச் சார்ந்தது.

[கட்டளைக் கலித்துறை]

௬. திடங்கொண்ட மார்பினிற் செண்பக
மாறன் செழியன்கொற்கை
வடங்கொண்ட முத்துப் பரக்குறும்
பாலையில், மானனையார்
குடங்கொண்ட குங்குமக் கொங்கையி
லேபட்டுக் கொண்டநெஞ்சம்
படங்கொண்ட பாம்புண் தவளையைப்
போலப் பதைக்கின்றதே.

அஞ்சாமை கொண்ட மார்பினையுடைய செண்பகமாறனாகிய பாண்டியனின் கொற்கைத்துறையில் தோன்றிய வடங்கொண்ட முத்துக்களைப்போல மணல் பரவி விளங்கும் இப்பாலை நிலத்திடத்தே (வந்தபின்னும்) குடம்போலும் வடிவுகொண்ட, குங்குமச் சாந்தணிந்த கொங்கைகளின் இடையே அகப்பட்டுக்கொண்ட என் நெஞ்சமானது, படங்கொண்ட பாம்பானது உண்டு கொண்டிருக்கும் வாயினிடத்துத் தவளையைப்போலப் பதைபதைகின்றது.

[அரவின் வாய்த்தேரைபோல என்பது பழமொழி. ஈண்டு பொருள் வயிற்செல்லும் தன் கடமைக்கும்—இளமை வழிச்செல்லும் காதலுக்கும் இடையே சிக்கிய மனத்தை விளக்கியுள்ள நயம் மகிழத்தக்கது.]

---

தோற்றுவாய்

மலையிடத்துவாழும் ஒருமங்கையைக்கண்டு காமுற்று நெருங்கியபோது, அவள்வெருட்ட நொந்துவந்த ஒரு

காமுகன் கூற்று. இதனுள் தமிழ் நெடுங்கணக்கு வரிசையில் அமைந்த சில எழுத்துக்களைக்கொண்டு பொருளை அமைதுப்பாடிய நயம் சுவையாக உளது.

[கட்டளைக் கலித்துறை]

7. தவ்வரித் தார்புயத் தாரூரர்
சண்டன் தடஞ்சிலம்பில்

கவ்வரி யிற்கய லாகிநின்
றுன்கம லப்பிரியாள்

பவ்வரி யிற்பதி னோரா
மெழுத்தெனும் பாவைநம்மை

வவ்வரி தன்னி லிரண்டாம்
எழுத்தை மறந்தனளே !

பிரமனுடையதும் திருமாலுடையதுமான தலைமாலையை அணிந்த புயத்தினையுடைய ஆரூராராகிய சிவபெருமானின் பெரிய மலையிடத்தே உள்ள, சோலையின் பக்கத்திலே நிற்கும் இலக்குமி போன்றவளாகிய இப் பாவையானவள், நம்மைப் 'போ' வென்று கூறினளே தவிர, 'வா' என்று கூறுவதை மறந்துவிட்டாளே ! என்செய்வது.

[தவ்வரித்தார் = த=பிரமன். அரி = திருமால் இவர் தம் தலையோடுகளைச் சிவன் அணிந்துள்ளான் என்று சிவபாரக்கிரமம் கூறும். "தலைமாலை தலைக்கணிந்து" என்பது அப்பர் தேவாரம். தவ்வு — அரி — தார் எனக்கொண்டு வண்டுகள் பரவித்தாவும் மாலை எனலும் ஆம். சண்டன்=சிவன். கவ்வரியிற்கு அயல்—கா. கா = சோலை. பவ்வரியின் பதினோராம் எழுத்து. போ—போ=முதனிலை ஏவல் (போவாய்) வவ வரியில் இரண்டாமெழுத்து வா—வா=முதனிலை ஏவல் (வருக) கமலப் பிரியாள்=தாமரையிற் பிரியமாக உறைபவள் (இலக்குமி). கமலத்தைப் பிரியாதவள் எனலுமாம்.

———⊹———

தோற்றுவாய்

தண்ணீர் முகந்து வரச்செல்லும் ஒருமங்கையினைக் கண்டு காமுற்ற ஒருவன், அவள் தனங்கள் தன்னை வருத்துவதாகவும், அவை காப்பிட்டிருப்பதனுல் தான் உய்ந்ததாகவும் கூறுகிருன்.

[வேற்ருெலி வெண்டுறை]

8. தடங்கொண்டு விற்கொண்டு சந்த்ரோத
யங்கொண் டிரு தாளங் கொண்டு
குடங்கொண்டு தண்ணீர்க்குப் போறபெண்
ணேயுன்றன் கொங்கை ரெண்டும்
படங்கொண் டிறுக்கிச் சங்கிலி
பூட்டி வைத்திலரேல்
இடங்கொண்டு குத்தி மறுபுறம்
ஆக்குமென் இதயத்தையே.

செல்லும் வழியைக்கண்டு, (புருவமாகியஇரு) வில்லினைக்கொண்டு, (முகமாகிய) சந்திரோதயத்தைக் கொண்டு, (கைகளாகியஇரு) தாளங்களைக்கொண்டு, இடையிலே நீர்க்குடத்தை ஏந்திக்கொண்டு தண்ணீர் முகந்து வருவதற்காகப் போகின்ற பெண்ணே! உன்னுடைய தனங்களிரண்டையும், உன்தோழிமார் வார்க்கச்சினைக்கொண்டு இறுகக் கட்டி, (அதற்குமேல் அணியாகிய) சங்கிலியையும் பூட்டிவையாதிருப்பாராஞல், என் மார்பிடத்தைக் கொண்டு குத்தி, முதுகுப்புறத்தும் சென்று மறுபுறமாக்கியிருக்கும். (அவ்வாருகாமல் உய்ந்தேன் என்ருன்)



தோற்றுவாய்

தான் விரும்பிய ஒருத்தியை அழைத்துவருமாறு சொல்லிவிட்ட தூதுவாளாவந்தமையின், ஓலைத்தூக்கு எழுதும் ஒருவன், 'அதில் தன் வேட்கையெல்லாம் எழுத இடமில்லையே' என வருந்திக் கூறுவதாக அமைந்துள்ளது, இப்பாட்டு.

[கட்டளைக் கலித்துறை]

9. **விழுதுவிட் டோங்கிய குற்றால**
**நாதர் வியன்சிலம்பில்**
**பழுதுபட் டாவி பதைக்குதை**
**யோபஞ்ச பாதகியைத்**
**தொழுதுவிட் டேன்வரச் சொல்லிவிட்**
**டேன்வரச் சொல்லிச்சொல்லி**
**எழுதிவிட் டேன்தெய்வ மேயினி**
**ஓலைக் கிடமில்லையே.**

பிரிந்தாரைக் கூட்டுவிக்கும் தெய்வமே! விழுதுகள் இறங்கி மரங்கள் தழைத்த குற்றாலநாதர் விளங்கும் பெரிய மலையிடத்தே, (அவள் வருகையை நோக்கி நோக்கி என் உடம்பு) நோவுண்டாகப்பட்டு, என் உயிர் பதை பதைக்கின்றதே; என்செய்வேன். ஐயோ! பஞ்ச பாதகியாகிய அவளை அழைத்துவரச் சொல்லித் தூதுவரைத் தொழுது அனுப்பிவைத்தேன். (வரவில்லையாதலின்) வருக! வருக! எனச் சொல்லி ஓலைமுழுவதும் எழுதிவிட்டேன். என்காதல் முழுதும் எழுத, இனி அவ் ஏட்டிலே இடமில்லையே; என்செய்வேன்.

[விழுதுவிட்டோங்குதல் குற்றாலத்திற்கு அடை. 'பழுது பட்டு' என்றதனால் உடல் வருவிக்கப்பட்டது. பஞ்சபாதகி=

பஞ்சமாபாதகங்களையுடையவள். 'பஞ்சு போன்ற பாதங்களையுடையவள்' என இருபொருள் தோன்றக்கூறினன். தெய்வம்= பால்வரைதெய்வம் (விதி). ஓலை=அமங்கலப் பொருள் தோன்ற நின்றது. 'சொல்லிச்சொல்லி' என்றது வேட்கை மிகுதியைப் புலப்படுத்தும்.]

தோற்றுவாய்

இப்பாடல் முதல் சிலபாடல்கள் சீகாழியில் விளங்கும் சட்டைநாத சுவாமியின்மேல் தோத்திரமாக வெண்பா, விருத்தம் கலித்துறை ஆயவற்றால் செய்யப் பெற்றுள. அவற்றுள் பெரும்பாலும் அடிகளும் சொற்களும் சிதைந்துள்ளன. ஒருசில பாடல்களே ஓரளவு பொருள்காணும் வகையில்உள. அவற்றின் செம்மையான பாடங்களைச் செப்பனிட்டுக் கருத்துரையும் கொடுக்கப்பட்டுள்ளது. சிதிலமாகாத ஓலைச்சுவடி கிடைப்பின் பெரிதும் பயன்படும்.

இப்பாடல் சட்டைநாதப்பெருமான் பராசக்தியைப் போல அடியார்க்கெளியனாய் வந்து அருள்புரியுந் திறம் கூறுகிறது-

[கட்டளைக் கலித்துறை]

**10. சிங்கா தனத்திநம் மூகாம்பி**
**என்னத் திருவுருக்கொண்(டு)**
**அங்கா தரவுடன் கொச்சையின்**
**மேவி அடியவர்தம்**
**பங்காக வந்து வரங்கொடுக்**
**கின்ற பரிசறிந்தேன்**
**சங்கார் குழைச்சட்டை நாதா**
**அகதி தயாபரனே !**

சங்கிலால் அமைந்த அழகிய குழையினை உடைய சட்டைநாதப் பெருமானே! ஆதரவற்றவர்கட்கெல்லாம் பெருங்கருணை புரியும் இறைவனே! சிங்காதனத்தில் எழுந்தருளி அடியவரைக்காத்தருளும் மூகாம்பிகை யைப்போல அழகிய அருட்டிருமேனிகொண்டு, பேரருளோடு சீகாழியினிடத்தே எழுந்தருளி அடியார்களின் பங்காக வந்து அவர்க்குவேண்டும் வரங்களையெல்லாம் கொடுத்தருளுகின்ற உன்பெருந்திறத்தை அறிந்தேன். (ஆதலின் போற்றுகின்றேன்)

[சிங்காதனத்தி = சிங்கத்தை ஊர்த்தியாக உடையவள் 'மூகாம்பி' சையமலைக்கருகே விளங்கும் தேவியின் பெயர். (சீகாழியில் உள்ள அம்மைக்கு இவ்வாறு ஒரு பெயர் உண்டு= போலும்) பரிசு=தன்மை, திறம். அகதி=கதியில்லாதவர். கொச்சை = 'கொச்சைவயம்' சீகாழியின் பன்னிரு பெயர்களுள் ஒன்று.]



தோற்றுவாய்

தன்னை அடிமை கொண்ட சட்டைநாதனாகிய இறைவனின் வடிவநலங்களைப் பாராட்டிப் போற்றுகின்றார், அடியார் ஒருவர்.

[எழுசீர் விருத்தம்]

**11. எடுத்தகை வாளும் பிடித்தகைத் தண்டும்**
**இரத்னசிங் காதனச் சிறப்பும்**
**கடுத்தரித் தகிலம் புரந்தகந் தரமும்**
**கனவிலும் நனவிலும் மறவேன்.**

**பொடித்தசந் திரனை முடித்தநா யகனே!**
**பூதவே தாளநா யகனே!**
**தடுத்தெனை யடிமை கொண்டநா யகனே!**
**சண்பைவாழ் சட்டைநா யகனே!**

தேய்ந்து குறைந்த சந்திரனை (வளர்த்தற்பொருட்டுப்பேரருளால்) சடையிலே முடித்த நாயகனே! இவ்வுலகமாயையிற் சிக்கி அழியாவண்ணம் தடுத்து, என்னை அடிமையாகக் கொண்ட இறைவா! சண்பைப் பதியில் விளங்கும் சட்டைநாதப்பெருமானே! நீ ஏந்தியுள்ள கைவாளியையும், கைக்கொண்டுள்ள தண்டினையும், வீற்றிருக்கின்ற சிங்காதனச் சிறப்பையும், ஆலாலமாகிய நஞ்சினை ஓர் அணிலன் போலக் கண்டத்திலே தரித்துக் கொண்ட, அச்செயலால் உலகத்தைப்புரந்த திறத்தைக் காட்டும் கழுத்தையும், கனவிலும் நனவிலும் என்றும் மறவேன்

• [சிறியவற்றைப் 'பொடி' என்பாராதலின் பிறைச்சந்திரனைப் பொடித்த சந்திரன் என்றார். பொடித்தல்=தோன்றுதல் எனக்கொண்டு முதற்கண்ணதாகிய பிறையைச் சூடிய எனலும் ஆம். தண்டு=சட்டைநாதர் ஏந்தியுள்ள விட்டுணுவின் எலும்பு. வேதாளம்=விகாரமுள்ள பூதவகை, சண்பை=சீகாழி. கடு=நஞ்சு. கந்தரம்=கழுத்து (தலையைத் தாங்குவது). அகிலம்=எல்லா உலகம்.]



தோற்றுவாய்

இதுவும் முற்பாடலைப் போன்றதே; இதனுள் பைரவர் எண்மரோடு விளங்கும் சிறப்புச் சேர்த்துக் கூறப்பெறுகிறது

[எழுசீர் விருத்தம்]

12. [கொட்ட] மிட் டிருக்கும் பில்லிசூ னியமும்
குலைகுலைந் தோடும்நின் செபத்துக்(கு)
அட்டமிட் டிருக்கும் வயிரவக் கணமும்
அங்கரத் தண்டும்நான் மறவேன்;
நட்டமிட் டிருக்கும் சர................னே
நம்பினர்க் குதவும்நா யகனே!
சட்டமிட் டிருக்கும் கிரிக்குநா யகனே!
சண்பைவாழ் சட்டைநா யகனே!

இருபது பறவைகள் தாங்கி நிற்கும் ஒழுங்கோடு அமைந்துள்ள காழிமலையிலிருக்கும் நாயகனே! நடன மாடும் திருக்கோலத்தையுடைய நாயகனே! நம்பின அடியார்களுக்கு அருளும் பெரியோனே! சண்பைப் பதியில் விளங்கும் சட்டைநாதப் பெருமானே! களிப்பி னால் தாளங்கொட்டியாடும் பில்லியும் சூனியமும் ஆகிய கொடுமைகளெல்லாம் நெஞ்சழிந்தோடும்படியாக நின் னைத்தியானித்து வழிபடுவதற்காக எண்மராகச் சூழ்ந் திருக்கின்ற பைரவர் கூட்டத்தையும் அழகிய கையிடத் துள்ள தண்டினையும் எந்நாளும் மறவேன்; அருள் வாயாக.

[கொட்டம்=கைத்தாளம். குலை=ஈரல் (நெஞ்சு). குலைந்து= அழிந்து. செபம்=தியானம். அட்டம்=எட்டு. சட்டைநாதர் பள்ளியறைப்பூசை நடைபெறும் வலம்புரி மண்டபத்தில், சுதந் திரபைரவர், சுயோசைபைரவர், லோகபைரவர், காலபைரவர், உக்கிரபைரவர், பிச்சையாபைரவர், நிர்மாணபைரவர், பீஷண பைரவர் என எட்டுப்பைரவர்கள் யோகத்தானிகளாய் எழுந் தருளியுள்ளனர். அங்கரம் = அகக்கரம் (அங்கை) எனவும் கொள்ளலாம். முதல்சீரும், மூன்றுமடி இடையும் சிதைந்து உள்ளன.

தோற்றுவாய்

இதுவும் சட்டைநாதர் தோற்றச் சிறப்பையும், அருளையும் கூறிப்போற்றுகின்றது.

[ எழுசீர் விருத்தம் ]

13. செங்கையிற் றண்டும் சங்குமுத் திரையும்
சிர...... மு...........மொளி திகழும்
கங்கண புயங்க கபாலசூ லமுமென்
கனவிலும் நனவிலும் மறவேன்;
கொங்கெழிற் கந்தங் குலவுமுய் யான
கொச்சையிற் சிகரகோ புரத்திற்
[தங்குயர் கருணை] பொங்குமற் புதனே!
சண்பைவாழ் சட்டைநா யகனே!

தேன்கமழும் மணம் வீசும் நந்தவனங்கள் சூழ்ந்து விளங்கும் சீகாழியில், உயர்ந்த உச்சியை உடைய கோபுரத்தில் வீற்றிருந்து, நிலைபேறுடைய அருள் பொங்கும் அற்புதமானவனே! சண்பைப்பதியில் விளங்கும் சட்டைநாதப்பெருமானே! உனது செவ்விய திருக்கைகளிலே விளங்கும் தண்டினையும் சங்கு முத்திரையையும், ஒளிவீசும் கங்கணமாகிய புயங்கத்தையும், கபாலத்தையும், சூலத்தையும் கனவிலும் நனவிலும் எப்பொழுதும் மறவேன்.

[முதலடியிடையும் ஈற்றடி முதலும் சிதைந்துள்ளன. புயங்கம்=பாம்பு. கந்தம் = நறுமணம். உய்யானம் = சோலை. கொங்கு=தேன்.]

தோற்றுவாய்

சட்டைநாதப் பெருமானாகிய இறைவன் தன் பெருங்கருணையால் தேவரும் யாவரும் வாழக் கடல் நஞ்சினைத்தான் உண்டதிறத்தை வியந்துகூறியது.

[ நேரிசை வெண்பா ]

**14. காவற் கடவுள் கமலால யன்முதலாந்**
**தேவர்க்கும் வாழ்வு சிதையாமல்—யாவர்க்கும்**
**மிக்கவனே வேலைதனில் வெவ்விடத்தை [யுண்டருளத்**
**தக்கவனே சட்டைநா தா.**

மூவர்க்கும் தேவர்க்கும் யாவர்க்கும் மேலாய பரமனே! காவற்கடவுளாகிய திருமாலுக்கும் தாமரை மலரைக் கோயிலாகக் கொண்டுவிளங்கும் பிரமன் முதலாய தேவர்க்கும் மற்றும் உள்ள அசுரர் முதலிய யாவர்க்கும் வாழ்வு அழியாமல், கடலில் தோன்றிய ஆலாலவிடத்தை உண்டு அருள் செய்யத் தகுதியுடைய முதற்கடவுளே! சீகாழியில் எழுந்தருளியிருக்கும் சட்டைநாதனே! (என்னையும் ஆண்டருள்புரிக)

[காவற்கடவுள் = காத்தற்கடவுளாகிய விட்டுணு. மிகுதி= வீறு. வேலை=கடல். தகுதி=சிறப்பு. 'என்னையும் ஆண்டருள்க' என்பது குறிப்பெச்சம்.]

---

தோற்றுவாய்

சட்டைநாதப்பெருமான் கடைக்கணித்தருள் வானாயின் இம்மைக்கும் மறுமைக்கும் ஆகிய எல்லாப் பொருள்களும் தாமே வந்தடையும் என்கிறது இப் பாட்டு.

[ நேரிசை வெண்பா ]

15. எப்பெருவாழ் வெய்தாதிங் கெப்பொருள்வந் [தெய்தாது
முப்பொருளி லேது முடியாது ?—செப்பரிய
தண்ணளிசேர் காழிமலைச் சட்டைநா தன்றனது
கண்ணருளே யாயினக் கால்.

வேதமுதலிய யாவும் விளக்கிச் சொல்லுதற்கரிய பெருமைமிக்க தண்ணருளைச் செய்யும், சீர்காழி மலையிலே எழுந்தருளியிருக்கும் சட்டைநாதக் கடவுளின் கடைக்கண் அருள் ஒருவருக்கு வாய்க்கப்பெற்ருல் அவர்க்குச் சுவர்க்கம் வீடு என்னும் எத்தகைய பெருவாழ்வு வந்து அடையாது? (தாமே வந்தடையும்) இந்திர பதவி முதலிய எப்பொருள் வந்துசேராது? (எல்லாப் பதவிகளும் வந்து சேரும்) இம்மைப் பயனுகிய அறம் பொருள் இன்பமாகிய முப்பொருள்களுள் பெறமுடியாதது எது? (மூன்றும் தாமே வந்தடையும்) யாவும் தாமேவந்தெய்தும்.

[வாழ்வு=வீடுபேறு. முப்பொருள் எனப்பின்வந்தமையால் 'எப்பொருள்' என்றது. தேவர்பதவிகள் எனக்கொள்க. செப்பரிய என்றதனல் எழுவாய் வருவிக்கப்பட்டது. விஞக்களெல்லாம் எதிர்மறையாதலின் உடன்பாட்டுப்பொருள் தந்தன.]

---

தோற்றுவாய்

தெற்கு நோக்கி எழுந்தருளியிருக்கும் சட்டைநாதப் பெருமானின் காட்சியையும் பேரருளையும் அத்தலத்தை யும் எண்ணி மகிழும் அடியாரின் கூற்றுஇது.

[நேரிசை வெண்பா]

16. தெற்கு முகமும் திருவழகும் தண்டேந்தும்

பொற்புயமும் பொற்பண..........கலையும்—நிற்கும்

நிலையும் நினையாத நீடருளும் காழி

மலையுமற வாது மனம்.

சட்டைநாதக் கடவுளின் தெற்கு நோக்கியிருக்கும் திருமுகச் செவ்வியும், வடிவத்தின் பேரழகும், தண் டேந்திவிளங்கும் அழகிய திருத்தோளும், பொலிவு (டைய அணிமணிகளு)ம்(வான் மதியாகிய) கலையும் யாவர்க் கும் காட்சிதந்தருள எழுந்தருளியிருக்கும் தன்மையும், அடியார்கள் நினையாதவற்றையெல்லாம் அளித்துக் காக்கும் பெருங்கருணையும் ஆகிய இவற்றோடு அப்பெரு மான் கோயில் கொண்டுள்ள சீர்காழி மலையையும் என் நெஞ்சம் மறவாது.

[திருமாலின் வேண்டுகோளின்படி அவர் தோலையும் எலும் பையும அணிகளாகவும் தண்டாகவும் ஏற்றருளினாதலின சட்டைநாதருக்குத் 'தண்டபாணி' எனற திருநாமமும் உண்டு. இவ்வரலாற்றைச் சீர்காழிப் புராணத்துள் விரிவாகக் காணலாம. இரண்டாமடியின் இடையே எழுத்துக்கள் சிதைந்துள்ளன.]



தோற்றுவாய்

பேராற்றலும் பெருங்கருணைத் திறமும் உடைய சட்டைநாதப்பெருமானின் கோயிலை வலம்வந்து சிந் தித்துத் தியானம்புரிய அருளும்படி ஓர்அடியார் வேண் டுவது.

[ எழுசீர் ஆசிரிய விருத்தம் ]

**17. [வந்தனை] செய்ய நின்திருக் கோயில்**
**வலம்வர வாழ்த்திநின் வடிவைச்**
**சிந்தையி லிருத்தித் தியான[மே செய்யத்]**
**திருவருள் புரியுநா ளுளதோ ?**
**அந்தகா சுரனை இருபிள வாக்கி**
**அந்தகன் [தனையுதைத் தருளும்]**
**சந்த்ரசே கரனே ! காழிமா மலையிற்**
**சயம்புவே சட்டைநா யகனே !**

மிகக் கொடியவனான அந்தகாசூரனை வென்றுஅவன் உடலை இருகூறு படுத்தியும், எமனை (மார்க்கண்டேயனுக்காக)க் காலாலுதைத்தும் அருள்புரியும் சந்திரசேகரனே ! சீர்காழி மலையில் விளங்கும் சுயம்புவே ! சட்டைநாதப்பெருமானே ! அடியேன் முக்கரணங்களாலும் வழிபாடுபுரிய, உனது திருக்கோயில் வலம்வந்து மகிழ, உன்பெரும் புகழை வாயார வாழ்த்த, உனது திருவடியைச் சிந்தையிலே நீங்காமல் வைத்துத் தியானம் செய்ய நீ பேரருள்புரியும் நாள் உளதோ? (உண்டாக அருள் செய்வாயாக).

[அந்தகன்—எமன் (உயிர்களின் வாழ்நாளை முடிவு செய்பவன் என்னும் காரணப் பெயர்). சந்திரனை முடியில்வைத்து வளர்த்த கருணைதோன்றச் சந்திரசேகரனே என்றார். சயம்பு= சுயம்பு. தானே தோன்றியவன் என்பது பொருள். நாளுளதோ என்றதன் கருத்து உண்டாக்கி அருளுக என்றபடி. இப்பாட்டுள் சில சொற்கள் சிதைந்திருந்தமையின் அடைப்புக்குள் பொருந்துமாறு சொற்கள் சேர்க்கப்பட்டுள.

தோற்றுவாய்

புலவோர், பகுத்துண்டுவாழாத கயவர்களையடுத்து வறுமை காரணமாகக் கற்பகத்தரு முதலாக வைத்துப் புகழ்ந்து பேசிவருந்தும் துயரைத் தீர்ப்பாயாக என வேண்டுவது இப்பாடல்.

[எழுசீர் ஆசிரிய விருத்தம்]

18. தருமுகில் சுரபி தாமரை மணியே
சங்கமும் அனையரே எனவே
பரிவுடன் கயவர் தனைத்துதித் தயரும்
பரிபவம் தவிர்க்குநா ளுளதோ?
தெரிவதற் கரிய திருவுரு வினனே
திருவருட் கடலினிற் பொடித்த
.......... ........தாணிச் சிகரமீ துதித்த
சயம்புவே சட்டைநா யகனே!

தவயோகிகளாலும் தேவராலும் யாவராலும் தேர்ந்து அறிதற்கரிய சிறந்த வடிவோடு திகழ்பவனே, பேரருட் கடலிலே தோன்றி இல்வுலகில் விளக்கும் காழி மலை உச்சியில் தோன்றித் திகழும் சயம்புவே சட்டை நாதப்பெருமானே! (பொய்யான இம்மை வாழ்வைக் கருதி) கயவர்களை அடுத்து அவர்களைக் கற்பகத் தருவே! கொடை முகிலே! காமதேனுவே! பதுமநிதியே! சிந்தாமணியே! சங்கநிதியே! ஆகிய இவற்றை ஒக்கும் வள்ளல்களே! என்று துன்பத்தோடு புகழ்ந்துபேசி வருந்தும் துயரத்தைவிட்டு நீங்கி உய்யும் நாளுண்டோ? அந்நாளை விரைந்தருள்வாயாக.

[தரு முதலிய ஆறும் தேவலோகத்தில் உள்ளவை—அவை நினைத்தார்க்கு நினைத்தவண்ணம் அருளும் தன்மை வாய்ந்தவை.

பரிபவம் = துயரம். இறைவன் உருவாகவும் அருவாகவும், அருவுருவாகவும் இருத்தலின் 'தெரிவதற்கரிய திருவுருவினனே' என்றார். இறுதியடி முதற்சீர் சிதைந்துளது, அதனைத் " தரணியிற் கயிலைச் " என வைத்து நிறைவு செய்யலாம்.]



தோற்றுவாய்

இதுவும் முற்பாடலைப்போன்று கயவரையடுத்து இன்மொழிபேசி வருந்தாமல் உன் அளப்பரும் பெருமையே பேசி உய்ய அருள்புரிவாய் என அம்பெருமானை வேண்டுவது.

[எழுசீர் ஆசிரிய விருத்தம்]

**19. சோமனே யெ[ன்று கய]வருக் கிதமே**
**சொல்லிநின் றுயங்கிடா துனது**
**நாமமே யுரைத்துநின் பெருமையே [நினைந்து**
**நாடொறும்] துதிக்கவே தருவாய்!**
**காமனேத் திரமா யிரம்பெற வருளிக்**
**கண்ணினுற் காம[னைக் காய்ந்த]**
**தாமவே (ணிய........)....னே சாமமே னியனே**
**சண்பைவாழ் சட்டைநா யகனே !**

உன்னை நினைந்து வழிபட்ட தேவேந்திரனுக்கு ஆயிரம் கண்களைப் பெறுமாறு அருள்செய்து, உன் ஆற்றல் அறியாது மலர்க்கணைதொடுத்த மன்மதனை நெற்றிக்கண்ணால் எரித்த பெருமானே! இனிய திருமேனியை உடையவனே! சீகாழியில் எழுந்தருளியிருக்கும் சட்டைநாதப்பெருமானே! (கலைகளால் நிறைந்து தண்ணருள் செய்யும்) சந்திரனே! என்று (பலவாறு) மகிழுமாறு கயவருக்கு இனியவற்றைப் பேசி அவர் ஏவல்வழிநின்று

துயரமுறுமல் உனது திருநாமங்களையே பேசி உனது அருட்பெருமைகளையே நினைந்து நினைந்து நாள்தோறும் துதித்து வழிபடும் பேற்றினை அருள்வாயாக !

['காமன்' கற்பகச்சோலைகளுக்கரசன் என இந்திரனுக்குக் காரணப்பெயர். சாமம்—இனிமை "சாமவேதத்தால் புகழ்பெறும் திருவடிவை உடையவனே" எனலுமாம். சோமன் = சந்திரன். இதம் = இன்சொல். நாமம் = பெயர்—புகழுமாம். அடைப்புக்குள் உள்ளவை சிதைந்துள்ளமையின் பொருந்துமாறு சேர்க்கப் பெற்றுள.]



தோற்றுவாய்

இது சட்டைநாதப் பெருமானின் பெருங்கருணைத் திறத்தையும் போராற்றலையும் புராண வரலாற்றைக் காட்டி வியந்துகூறி மகிழ்வது.

[எண்சீர் ஆசிரிய விருத்தம்]

20. **கண்ணுக்குச் சக்கரமன் றளித்தோன் றானும்**
**[காயாத ஆண்]பனையிற் கனிதந் தோனும்**
**மண்ணுலகும் விண்ணுலகும் இறந்தி டாமல்**
**[வந்தநஞ்சை நல்வி]ருந்தா யருந்தினோனும்**
**வெண்ணகையால் விண்ணகரை யெரித்தோன் [றானும்**
**[வில்மதனைப்] பொடியாக விழித்தோன் றானும்**
**தண்ணளியால் காழிமலைச் சிகர மேவும்**
**[தமிழ்வடுகன்] தமிழ்ச்சட்டை நாதன் றானே.**

கண்ணனாகிய திருமால் செய்த பூசனைக்கு உவந்து சக்கரப்படையை அருளியவனும், காய்க்குந் தன்மையில்லாத ஆண்பனையை (பெண்பனையாக்கிக்) கனியைத் தரச்செய்தவனும், மண்ணுலகத்துள்ள உயிர்களும்

விண்ணுலகத்துள்ள தேவர்களும் இறந்தொழியாமல் கடலினின்றும் தோன்றிய ஆலாலம் என்னும் கடு நஞ்சினைச் சிறந்த உணவுபோல உண்டு அருளியவனும் வெகுண்டு சிவவாத இளஞ் சிரிப்பினாலேயே விண்ணில் உலாவிய முப்புரங்களை எரித்தழித்தவனும், கரும்பு வில்லையுடைய மன்மதன் வெந்து நீருகும்படி நெற்றிக் கண்ணால் விழித்து அடக்கியவனும் (யாரெனின்) தண்ணிய அருளால் சீர்காழி மலையில் எழுந்தருளியிருக்கும் இனிய வடுகநாதனாகிய தமிழையுடைய சட்டைநாதப் பெருமானேயாவான்.

[வெண்ணகை=முயற்சியின்றிச் சிரிக்கும் எளியநகை. விண்ணகர்=ஈண்டு முப்புரங்களை உணர்த்தியது. தமிழ்=இனிமை. இதனுள் கூறப்பட்ட வரலாறுகளை அவ்வப் புராணங்களுட் காண்க.]

---

தோற்றுவாய்

இதுவும் சட்டைநாதப்பெருமானின் பேராற்றலை யும் பெருங்கருணையையும் வியந்து கூறுகிறது.

**21. ஒராவிண்ட கன்றுதனக் காகச் சோழன்**
**ஒருமதலை தனைத்தேரில் ஊர்வித் தோனும்**
**அராவுண்ட வணிகனுயிர் தருவித் தோனும்**
**அங்கத்தைப் பூம்பாவை யாக்கினோனும்,**
**கராவுண்ட பிள்ளையைமீண் டழைப்பித் தோனும்**
**கனல்மழுவைத் தரித்தோனும் கனஞ்சூ [ழும்பூந்**
**தராவிண்ட திருத்தோணி மலையில் வாழும்**
**தமிழ்வடுகன் தமிழ்ச்சட்டை நாதன் றானே!**

ஒரு பசு ஈன்ற கன்றுக்காக மனுநீதிச் சோழனின் ஒரே மகனைத் தேர்க்காலிலிட்டுத் தேரினைச் செலுத்தச் செய்தவனும், பாம்பு தீண்டியதனால் இறந்த வணிகனுடைய உயிரை மீட்டுத்தந்து அருளியவனும், திருஞான சம்பந்தர் வாயிலாக எலும்பைப் பொற்புடைய நங்கையாக உயிர்ப்பித்தவனும், முதலையுண்ட பாலனைச் சுந்தரர் வாயிலாக மீட்டு உயிரோடு அழைத்துத் தந்தவனும், கனலையும் மழுப்படையையும் தன் திருக்கைகளில் ஏந்தியுள்ளவனும் (யாரெனின்) விண்ணிடைத் தவழும் மீன்களாகிய மலர்கள் திகழும் பூந்தராய் எனப் புகழ் பெற்று இவ்வுலகில் விளங்கும் திருத்தோணிபுரமாகிய சீர்காழி மலையில் எழுந்து திகழும் இனிய வடுகனாகிய தமிழையுடைய சட்டைநாதப் பெருமானேயாவன்.

[ஓர் ஆ என்பது எதுகைநோக்கி 'ஓரா' என நின்றது. விண்ட = ஈன்ற. அரா = பாம்பு. அங்கம் = ஈண்டு எலும்பை உணர்த்தியது. கரா = முதலை. கனல்மழு=உம்மைத்தொகை. கனஞ்சூழும்பூ=நட்சத்திரம். பூந்தராய்விண்ட என்பது 'தரா' எனக் கடைகுறைந்து நின்றது. 'பூந்தராய், தோணிபுரம்' இவை சீர்காழியின் பெயர்கள். பிற வரலாறுகளை அவ்வப் புராணங்களில் காண்க ]



தோற்றுவாய்

இப்பாட்டும் சட்டைநாதப் பெருமானின் புகழ்ச் சிறப்புக்களையே கூறி வியக்கின்றது.

[ எண்சீர் ஆசிரிய விருத்தம் ]

**22. கொந்தாருங் கடுக்கைமலர்த் தொடையன் ஞானும்**
**கோகனத் தயன்றலையைக் கொய்தோன் ஞானும்**
**எந்தாயும் எந்தந்தை தானு மாகி**
**என்குறைதீர்த் தெனைக்காக்கும் இறைவன் ஞானும்**

**சிந்தாகு லம்மகற்றி வரங்கொ டுக்கும்**
**தெய்வசிகா மணிதேவ ராயன் ருனும்**
**தந்தா....வளமுரித்துப் போந்தோன் ருனும்**
**சண்பைமலேத் தமிழ்ச்சட்டை நாதன் ருனே.**

கொத்தாக நிறைந்து விளங்கும் கொன்றைமலர் மாலையை அணிந்துள்ளவனும், தாமரை மலரில் வீற்றிருக்கும் பிரமதேவனுடைய ஐந்துதலைகளுள் ஒன்றைக் கொய்தவனும், எமக்கெல்லாம் தாயும் தந்தையுமாகி என்னுடைய பாவங்களையும் அறியாமையையும் போக்கி என்னையும் அவன் ஆளாகக் காத்தருளும் இறைவனும், மனத்துன்பங்களையெல்லாம் நீக்கி வேண்டுவனவற்றை அப்பொழுதே அளித்தருளும் தேவசிகாமணியாய தெய்வராசனும்.... .... .... .... .... .... யாரெனின் சீர்காழி மலையில் விளங்கும் தமிழை உடைய சட்டைநாதப் பெருமானேயாவான்.

[கொந்து = கொத்து. ஆர்தல் = நிறைதல். கடுக்கை = கொன்றை. தொடையல்=மாலே. கோகனகம்=தாமரை. அயன் = பிரமன். சிந்தாகுலம் = உள்ளக்கவலே. இறுதியடியில் முதலிரண்டு சீர்கள் எழுத்துப்பிறந்துள்ளமையால் பொருள் காணக் கூடவில்லே. சண்பை=சீர்காழி.]



தோற்றுவாய்

எல்லாம் வல்லனய் யாவர்க்கும் அருள்பவனய சட்டைநாதப் பெருமானையன்றிப் பிற தெய்வங்களை எண்ணுவது பேதைமையேயாதலின், உனையே நினைந்து உய்வேன் எனத் தன் பேரன்பைப் புலப்படுத்துவது இப்பாட்டு

[கட்டளைக் கலித்துறை]

23. உன்னையே நினைத்துனக் குத்தொண்டு
பட்டும் உனைத்துதித்தும்
பின்னைவே றொருவர்க் கிதஞ்செய்யப்
போவதென் பேதைமையே
நினையேயல் லாதொரு தெய்வமுண்
டோ,இந்த நீணிலத்தில்
தனையே நிகர்சட்டை நாதா
அகதி தயாபரனே !

எல்லாம் வல்லவனாகிய உன்னையல்லாமல் இந்தப் பெரிய உலகின்கண் வேறு சிறப்புடைய தெய்வம் உண்டோ ? (இல்லை) தனக்குத்தானே நிகராகவிளங்கும் சட்டைநாதப் பெருமானே, பற்றுக்கோடில்லாதவர்க்கெல்லாம் அருளும் பரமனே ! உன்னையே இடைவிடாமல் எண்ணியும உனக்கே தொண்டனாய்க்கிடந்தும், உனையே வணங்கி வழிபட்டும் இருக்கும் யான், பின்னும் வேறு ஒரு தெய்வத்திற்கு வழிபாடு செய்யப் போவது எவ்வாறு? போனால் அது பெரிய பேதைமையல்லவோ ? (அப்பேதைமை எனக்கில்லை என்றபடி).

[தொண்டுபடல்=தொழும்பாதல். பின்னை என்பது 'பினை' என இடைக்குறைந்து நின்றது. பேதமை = தனக்குத்தானே தீமைசெய்துகொள்ளும் அறியாமை. அகதி=அனாதை. வேறு ஒருவர்க்கு இதஞ்செய்யப்போவது என்பேதைமையே என உடன் பாட்டிலும், என்ன பேதைமை ? என வியந்து வினாவியும் பொருள் காணலாம்.]

தோற்றுவாய்

இதுவும் முன் செய்யுளைப் போன்றது. இதனுள் பிறதெய்வத்தை நினையேன், நினைத்தால் அதுவும் நீயாகவே எனக்குத் தோன்றும் என்று சட்டைநாதப் பெருமானின் பரத்துவத்தைப் புகழுகின்றது.

[கட்டளைக் கலித்துறை]

24. வினையே யகற்றி மிடிதீர்க்க
மெய்யருள் மேவிநிற்க
உனையேயல் லாதொரு தெய்வமுண்
டோ,வுண்ட தாகிலதை
நினையேன் நினைக்கினும் நீயாகத்
தோன்றும் நினைத்தவெல்லாம்
தனையே நிகர்சட்டை நாதா
அகதி தயாபரனே!

நினைக்கும் பொருள்கள் எல்லாம் உன்றனையே ஒக்கும் சட்டைநாதப்பெருமானே! அனாதைகளுக்கருளும் பரமனே! பிறவிக்குக் காரணமாகிய இருவினைகளையும் நீக்கி என் (ஞானமில்லா) வறுமையைத் தீர்க்கவும் யான் மெய்ம்மையாகிய அருளைப்பொருந்தி நிற்கும் வண்ணம் செய்யவும் உன்னையல்லாமல் மற்றுமோர் தெய்வமுண்டோ? (இல்லை) அப்படி ஒருகால் உண்டாகுமாயின் அதனை நினைக்கமாட்டேன் ஒருகால் நினைக்க நேர்ந்தால் அதுவும் நீயாகவே எனக்குத் தோன்றும்.

[மிடி=வறுமை—ஈண்டு ஞானமின்மையைக் குறித்தது "உண்டாகில்" என்பது 'உண்டதாகில்' என விரிந்தது. 'நினைக்கினும்' என்ற உம்மை நினையாமையை வலியுறுத்தும்.]

தோற்றுவாய்

என்னுடைய பொறிகளாலும் புலன்களாலும் சிந்தையாலும் உன்னையும் உன் அடியார்களையுமே ஏத்தி வழிபடுவேன் என்று ஓர் அடியார் கூறும் கூற்றாக அமைந்துள்ளது.

[கட்டளைக் கலித்துறை]

25. பூணேன் உனது புகழன்றி;
நின்பொன் உருவமன்றிக்
காணேன் எனது விழியிற்,
கமலச்செம் பாதமன்றி
ஊணேன் உளத்தில், உனதடி
யார்க்கன்றி உட்குழைந்து
கோணேன் தமிழ்ச்சட்டை நாதா
அகதி குருபரனே !

தமிழை உடைய சட்டைநாதப்பெருமானே! 'அனாதைகளுக்கருளும் குருபரனே' என் நாவால் உன்புகழையன்றிப் பிற மொழியமாட்டேன். என்விழிகளால் உன்னுடைய பொன்போன்ற திருமேனியையன்றிப் பிற வடிவங்களைக் காணமாட்டேன். எனது உள்ளத்தின்கண் உன்னுடைய தாமரை போன்ற சிவந்த பாதங்களையன்றிப் பிறவற்றை ஊன்றமாட்டேன். உன் அடியவர்களுக்கல்லாமல் உள்ளங்கசிந்து நைந்து தலை வணங்கமாட்டேன் காண்பாயாக.

[பூணுதல் நாவாற் பேசுதல் "நாவினுக்கருங்கலம் நமச்சிவாயவே" என்றார் நாவுக்கரசரும். பொன்னுருவம் = சிவந்த மேனி. "பொன்னார் மேனியனே" என்பது ஆளுடைய நம்பிகள் வாக்கு. கோணுதல்=வளைதல். கோணேன் என்பதனால் தலை வருவிக்கப்பட்டது]

தோற்றுவாய்

உயிர்களின் துயர்நீங்க குருவடிவாய்வந்து தீயசக்திகளையெல்லாம் ஒடுக்கியழித்து வெள்ளிக்கிழமையில் தன்னைவந்து வழிபடுவோர்க்கெல்லாம் பெருங்கருணை புரியும் சட்டைநாதப்பெருமான் 'ஆபதோத்தாரணன்' என்கின்றது இப்பாட்டு.

[ எண்சீர் ஆசிரிய விருத்தம் ]

**26. அக்கரமாய் ஆபதோத்தா ரணனு மாகி**
**அகோரகுரு ரூபமொடெண் குணனு மாகிச்**
**சுக்கிரவா ரத்தில்வந்து தொழுவோர்க் கெல்லாம்**
**துயரகற்றி வரங்கொடுக்கும் சோதி யாகி**
**உக்கிரமா கியபூத வேதா ளங்கள்**
**உரங்குலையச் சூலத்தால் ஊன்று வோனும்**
**சக்கரமா லுகப்பவருள் புரிந்தோன் றானும்**
**சண்பைமலைத் தமிழ்ச்சட்டை நாதன் றானே.**

'ஓம்' என்னும் மூலமந்திர எழுத்தாய், அடியவரின் துயர்களைநீக்க ஆபதோத்தாரணனாய், காட்சிக்கினிய குரு வடிவமாய், நிலம், நீர், தீ, வளி, ஆகாயம், கதிர், திங்கள், ஆன்மா எனும் எட்டுப்பொருட் குணங்களும் நிறைந்தவனுமாய், எழுந்தருளி வெள்ளிக்கிழமையில் தன்பால் பக்தி பூண்டுவந்து வழிபடுவோர்க்கெல்லாம் இருவினைகளாகிய துயரங்களைப் போக்கி அவ்வவர் வேண்டும் வரங்களையருளும் சோதிவடிவாய், வெகுண்டு நிற்கும் பூதங்களையும், வேதாளங்களையும் அவற்றின் வலிமையழியும்படித் தன் முத்தலை வேலால் குத்தி அழிப்பவனும், திருமால் மனம்மகிழச் சக்கரப் படையை அவனுக்கருளியவனும் சீர்காழி மலையிலே விளங்கும் தமிழையுடைய சட்டைநாதப் பெருமானேயாவான்.

[பிரணவமே தோணியாகி விளங்க வீற்றிருப்பதனல் 'அக்கரமாய்' என்ருர். சட்டைநாதருக்கு 'ஆபதோத்தாரணர்' என்பதும் ஒரு பெயர். சீர்காழியில் உள்ள குரு, லிங்க, சங்கம வடிவுகளுள் தோணியப்பரே குருமூர்த்தியாதலின் 'அகோர குரு ரூபமொடு' என்ருர். ஐம்பூதமும் இருசுடரும் இயமானனும் இறைவன் திருமேனி என்பது சைவாகமமுடிபு. சுக்கிர வாரத்தில் நள்ளிரவுப்பூசை சட்டைநாதருக்குச் சிறப்பாகச் செய்யப்படுதலின் அதனைக் குறிப்பிடுகின்ருர். பூத வேதாளங்கள் தீய சக்திகளைக் குறிக்கும். பிற வரலாறுகளையும் விரிவையும் சீர்காழிப் புராணத்துட்காண்க. மாலுக்குச் சக்கரமளித்த வரலாற்றைச் சிவபுராணங்களுட் காண்க. அக்கரம்=எழுத்து. ஈண்டு பிரணவத்தைக் குறித்தது. உக்கிரம் = பெருஞ்சினம். உரம்= வலிமை, மார்பு. சூலம்=முத்தலை வேல். சண்பை=சீர்காழி.]

---

தோற்றுவாய்

தாயைக்காட்டிலும் அன்பொடு காத்தளிப்பாரில்லையாதல்போல, நீயே எனக்குயாவும் எனச் சட்டைநாதரிடம் ஓர் அடியார் கூறுவது இப்பாடல்.

[கட்டளைக் கலித்துறை]

27. **தாயே யலாது தரணியில்**
**வேறொரு தாணுவுண்டோ ?**
**நீயே யாலாது தமியேற்கு**
**வேறு நிலையொன்றுண்டோ ?**
**நீயே அகிலமும் ஆயே**
**அடியார் நினைத்தநினை(வு)**
**ஆயே இருக்கும் தமிழ்க்காழி**
**ஆபதோத் தாரணனே !**

உலகம் முதலாய எல்லாப்பொருள்களும் நீயேஆகி அடியவர் நினைத்த (நினைக்கும்) நினைவெல்லாமுமாகி

யிருக்கும் தமிழையுடைய சீர்காழியில் எழுந்தருளியிருக்கும் ஆபதோத்தாரணனே! இவ்வுலகில் ஈன்ற தாயையல்லாமல் வேறொரு தாணுவுண்டோ (இல்லை, அதுபோல) அடியேனாகிய எனக்கு நீயேயல்லால் வேறொரு பற்றுக்கோடு உண்டோ? (இல்லையாதலின் என்னை, ஆண்டருள்வாயாக.)

[தரணி = நிலவுலகம். தாணு = அருட்காப்புத் தெய்வம் அகிலம்=உலகம்—ஈண்டு உலகப்பொருள்மேல் நின்றது.]

---

தோற்றுவாய்

மூப்போதும் அடியாரை மறவாது அருள்செய்யும் நேயமுடையவன் சட்டைநாதப் பெருமானே யாவான் என்கிறது இப்பாட்டு.

[கட்டளைக் கலித்துறை]

28. இருபோது மன்றி யொருபோது
 மைத்துயர் எய்திடினும்
ஒருபோதும் உம்மை மறவாத
 நேயன் உகாந்தம் பொங்கி
வருபோதும் மெய்த்திருத் தோணியின்
 மேற்[கொண் டுலக]முய்யத்
தருபோதன் காழி மலைச்சட்டை
 நாத தயாபரனே.

இரவு பகலாகிய எப்பொழுதாயினும் ஒருபொழுதும் உங்களை மறவாது அருளும் நேயமுடையவன் (யாவன் எனின்) ஊழிக்காலந் தோன்றிக் கடல்களெல்லாம் பொங்கி வரும்பொழுதினும் மெய்ப்பொருளாகிய பிர

ணவத்தோணியின்மேல் அமர்ந்து உலகமெல்லாம் பிழைத்துய்ய அருள்தரும் ஞானவடிவானவன் சீர்காழி மலையின்கண் விளங்கும் சட்டைநாதப் பெருமானே யாவான்.

['இருபோது, ஒருபோது' என்பதற்கு இறந்தகாலமும், நிகழ்காலமும், எதிர்காலமும் என்று பொருள்கொள்ளலுமாம். 'பிரணவமேதோணியாதலின் மெய்த்திருத்தோணி' என்றார். போதன்=ஞானவடிவினன்.]

---

தோற்றுவாய்

இப்பாட்டு 'சட்டைநாதப்பெருமான் அடியவர்க்கு எத்தகு வினைகளும் வரா, ஒருகால் வரினும் அவனருள் காரணமாக அவை சிறிதும் வருத்தம் செய்யா' எனக் கூறுகிறது.

[கட்டளைக் கலித்துறை]

29. **வருமோ வினைகள் வராதுவந்**
**தாலும் வருத்தஞ்சற்றும்**
**தருமோ தராது சலஞ்சலம்**
**போலவந் தான்மருவும்**
**பெருமோகச் சங்கக் குழைக்காதன்**
**அன்பர் பிழைபொறுத்தோன்**
**அருள்மேவு காழி மலைச்சட்டை**
**நாதன் அடியவர்க்கே.**

சலஞ்சலம் என்னும் சங்குபோலத் தோன்றியுள்ளவனும், பெருவிருப்பமைந்த சங்கக் குழையைக் காதில் அணிந்தவனும், அன்பர்செய் பிழைகளையெல்லாம் பொறுத்தவனும் அருள்நிறைந்தவனுமாகிய சீர்காழியில் விளங்கும் சட்டைநாதப்பெருமானுடைய அடியவர்

களுக்குத் தீவினைகள் உண்டாகிவருமோ? வராது; ஒருகால் பிராரத்துவத்தால் வரினும் பிறருக்குப் போல வருத்தம் சிறிதேனும் தருமோ? உறுதியாகத் தராது. (ஆதலின் அவற்கு அடிமைபூண்டு ஒழுகுங்கள்).

['சலஞ்சலம்'-சிப்பி ஆயிரம் சூழ வருவது இடம்புரிச்சங்கு, இடம்புரி ஆயிரம் சூழ வருவது வலம்புரிச்சங்கு, வலம்புரி ஆயிரம் சூழ வருவது சலஞ்சலம் என்பார். ஆதலின் 'சலஞ்சலம்போல வந்தான்' எனத் தூய்மையும் சிறப்பும் கூறினார். கந்தருவர் இருவர் சங்கக்குழைவடிவாக இறைவன் காதினிடத்து விளங்குகின்றார் என்ப. பிறர் என்றது அடியாரல்லாதாரை]



தோற்றுவாய்

'நிலமகளாகிய உலகத்தைத் தன் தோள்மீது வைத்துப்புரக்கின்றான்' எனப் பாண்டிய மன்னன் ஒருவன் ஆட்சிச்சிறப்பைப் புனைந்துரைக்கின்றது இப் பாடல்

[ நேரிசை வெண்பா ]

**30. வறிய நிலமகளை மால்புதல்வன் பெற்றுப்**
**பொறியரவின் மேற்கிடத்திப் போனான்—அறிஞர்**
**களத்தானி யாம்விசயன் கண்டெடுத்துக் கொண்டு**
**வளர்த்தான்றன் றோள்மீதில் வைத்து.**

திருமாலின் உந்தித்தாமரையில் தோன்றிய பிரமதேவன் வெறுமையை உடைய இந்த நிலமகளைப் பெற்றுப் புள்ளிகளையுடைய ஆதிசேடனாகிய பாம்பின் தலையிலே கிடத்திவிட்டுப் போயினான்; காப்பாரின்றிக் கிடந்த அந் நிலமகளை அறிஞர்களின் 'ஆத்தானம்'

என விளங்கும் பாண்டிய மன்னன்தான் கண்டு எடுத்துத் தன் தோள்மீது வைத்துக்கொண்டு வளர்த்தான்.

[உலகைப் படைத்தவனுதலின் பிரமனைப் 'பெற்றுன்' என்ருர் 'பொறியரவு' ஆதிசேடன். உலகைத் தன் தலையின்மீது ஆதிசேடன் தாங்குகின்ருன் என்பது புராணவழக்கு. அறிஞர்கள் அத்தானி எனப்பிரிக்க. அத்தானி—ஆஸ்தானம்; அதாவது சான்ருேர்சபை. ஈண்டு சபைத் தலைமையை உணர்த்திற்று. விசயன்=பாண்டியன்].



தோற்றுவாய்

நாளுக்குநாள் இறைவனுக்குப் படைக்கும்பொருள் குறைந்துவருவதுபற்றி நகைச்சுவையோடு ஒருவர் புலப்படுத்துவதுபோல அமைந்துளது இப்பாடல்.

[கலி விருத்தம்]

31. சோற்றுக் கஞ்சிநீர் சுக்கரைச் சுக்கரைச்
சூற்று மீருழக் கோருழக் கானபின்
ஊற்றி ஊதி உறிஞ்சிக் குடிப்பிராம்
நீற்றுப் பண்டமாம் நீருண்ணும் பண்டமே.

இரக்கத்திற்குரிய கடவுளே! சோறுவடித்த கஞ்சியாகிய நீரைச் சுக்கினை வெஞ்சினமாக அரைத்துவைத்து இரண்டு உழக்கு ஊற்றிவந்த நிலைமையும்போய் இப்பொழுது ஓர் உழக்களவிலே வந்தமையால் (அதனை உள்ளங்கையிலே) ஊற்றி (வெப்பம்போக) ஊதிக்குடிப்பீராக. இனி நீர் உண்ணும் பண்டம் நீற்றுப்பண்டம் (சாம்பல்) ஆயினும் ஆய்விடும்.

[சுக்கு அரைத்துக் கரைத்து என்பது 'சுக்கரைச்சுக்கரைச்சு' என வழக்கு மொழியாய் நின்று மடக்கணியாக அழகு செய்

கின்றது. உணவுக் குறைபாடு நேர்ந்தபோது, கரைத்துச் சிறிது சிறிதாக உறிஞ்சிக் குடிக்கும் நிலையைப் புலப்படுத்திய அழகு பாராட்டத்தக்கது. 'நீற்றுப் பண்டம்' என்றது இனி அக் கஞ்சி உணவும் இன்றி வெறும் சூட்டுச் சாம்பலையே படைப்பார் எனக்கருதி.]

---

தோற்றுவாய்

சூரப்பச்சோழர்கோன் என்னும் சிறப்புப் பெயரை யுடைய ஆண்டியப்பன் என்னும் வள்ளலின் கொடைச் சிறப்பைப் புகழ்ந்து கூறுவது இப்பாட்டு.

[ நேரிசை வெண்பா ]

**32. சுற்றுபுகழ்ச் சூரப்பச் சோழர்கோன் ஆண்டியப்பன்**
**கற்றவருக் கேகொடுக்கும் கையேகை-மற்றவர்கை**
**யாக்கை சலாகை அலகை பலகைபுகை**
**காக்கை தொகைகொடுங் கை.**

திசை முழுதும் புகழையுடைய சூரப்பச் சோழர் கோனாகிய ஆண்டியப்பவள்ளல் புலமைமிகக் கற்றவர் களுக்கெல்லாம் பொன்னும் பொருளும் அள்ளியள்ளிக் கொடுக்கும் கையே 'கை'யென்று சிறப்பித்துச் சொல் லப்பெறும் (அவ்வாறு கொடுத்தலறியாத) மற்றவர் கைகள் ஆக்கை, சலாகை, அலகை, பலகை, புகை, காக்கை, தொகை, கொடுங்கை எனப்படும்.

[வழங்காதவர்கள் கைகளைப் பழிக்கும் முகத்தான் 'கை' என முடியும் சொற்களைத் தொகுத்துவைத்துப் பாடிய நயம் சுவைத்தற்குரியது. ஆக்கை=கயிறு; சலாகை=சிறு இரும்புக் கோல்; அலகை=பேய்; பலகை=மரப்பலகை; புகை=தூமம்; காக்கை = காக்கைப்புள்; தொகை = தொகுதி; கொடுங்கை— மண்டபத்தின் விளிம்பில் வளைந்து கவிந்திருக்கும் ஓர் உறுப்பு; கொடிய 'கை' எனவும் பொருள்தோன்ற முடிந்துள்ளமை சிறப்பு.]

---

தோற்றுவாய்

இதுவும் முற்பாடலைப் போன்றது. அந்தச் சூரப் பச் சோழர்கோன் ஏறிப்பவனிவரும் பரிமாவைச் சிறப் பிக்கின்றது

[நேரிசை வெண்பா]

**33. தூறுமாற் றூர்க்களித்த சூரப்பச் சோழர்கோன்**
**ஏறுமாத் தானே இலக்கணமாக்—கீறுமா**
**ஆற்றுமா சும்மா அரைக்குமா செங்கமா**
**மாற்றுமாற் றூரேறு மா.**

தன் பகைவர்தம் நாட்டைவென்று கொண்டு அவர் களுக்குக் காட்டினையளித்த சூரப்பச் சோழர்கோனாகிய வள்ளல் ஏறிச்செலுத்தும் பரிமாவே அரச இலககண மமைந்த 'மா' (குதிரை). அதற்குமாறாக மாற்றார் ஏறிச் செலுத்தும் 'மா' (குதிரை) கீறப்பட்ட வடு'மா', வழியிலே நிற்கும் மர'மா' சும்'மா' பெண்டிர் அரைக்கும் 'மா' செங்கல்'மா' எனப்படும்.

[கீறுமா=மாவடு. ஏறிச்செலுத்த ஆற்றுமா? என வினாப் பொருள்பட அமைந்துள்ளநயம் சுவைபயக்கும். சும்மா=ஆர வாரம் எனப்பொருள் தரும் வழக்குச்சொல். செங்கமா=செங்கற் பொடி—இதுவும் வழக்குச்சொல். 'மற்று' என்பது தொடை நோக்கி மாற்றுஎன நின்றதாகக் கொண்டும் பொருள்காணலாம்.]

---

தோற்றுவாய்

வள்ளல் ஒருவனுடைய நாட்டினைச் சிறப்பிக்கும் பாடல் இது. இதற்குமுன் ஒன்றோ பலவோ பாடல்கள் இருந்திருக்கவேண்டும். ஆதலின் நாட்டின் பெயர் இப் பாடலில் காணப்பெறவில்லை. 'ஒழித்துக்காட்டணி'

நயம்பட அந்நாட்டுவளம், மக்கள் நலம், சிறப்பு முதலியன புலப்படுத்தப்பெறுகின்றன.

[ அறுசீர் ஆசிரிய விருத்தம் ]

34. **கட்டுண்டும் அடியுண்டும் தளையுண்டும்**
**படுவதுசொற் கவியின் பாவே**
**மட்டுண்டு கரும்புறமாய் மயங்குவதும்**
**மதுகரமே, வழங்கா நீதி**
**முட்டுண்டு கிடப்பதுவும் முடங்குவதும்**
**பொய்ம்மொழியே, முகங்கீ ழாக**
**வெட்டுண்டு கிடப்பதுவும் தாறுகொண்ட**
**கதலிகளே வேறென் றில்லை.**

இந்நாட்டிற் கட்டப்பெற்றும், அடிபட்டும், தளைபட்டும், தோன்றியிருப்பன சொற்களாலாகிய கவியும் பாக்களுமே (யன்றித் தீங்கியற்றி யாரும் கட்டப்படுதலும் அடிபடுதலும் சிறைப்படுதலும் இல்லை) தேனையுண்டு கரிய தோற்றத்தோடு மயங்கிக் கிடப்பது தேன் வண்டுகளே (யன்றிக் கள்ளினை அருந்தி யாரும் கொடுந் தோற்றத்தோடு மயங்கிக் கிடத்தல் இல்லை). (குற்றமிழைப்போரும் இழைக்கப்படுவோரும் இன்மையின்) நீதி மன்றங்கள் நீதி வழங்காவாம். மேலும் முட்டுப் பாடுற்றுக் கிடப்பதும் முடங்கிக் கிடப்பதும் பொய்ம்மொழிகளே (யன்றிக் அறவுரைகளும் இன்மொழிகளும் எங்கும் விளங்கித்திகழும்) முகம் கீழேசாய வெட்டுப் பட்டுக்கிடப்பது தாறு முற்றிய வாழைகளே (யன்றி எவ்வுயிரும் வெட்டுண்டு கிடத்தல் இல்லை) பிற இல்லை.

[கட்டு = சொற்களைக் கட்டும் யாப்பு; குற்றவாளிகளைப் பிணிக்குங்கட்டு. அடி = செய்யுள் அடி; அடிபடுதல். தளை = சீரும் சீரும் இணையும் செய்யுளுறுப்பு; சிறைசெய்தல். மட்டு =

தேன்; கள். மயக்கம் = களிப்பு; அறியாமை. வெட்டுணல் = வாழைக்குலைகளை வெட்டுதல்; உயிர்க்கொலை செய்தல். என இடத்திற்கேற்பப் பொருள் தரும் சொற்களை அமைத்து நாட்டின் சிறப்பு நயமாகக் கூறப்பட்டுள்ளது.]

---

தோற்றுவாய்

மதுக்குடியில் பெருவிருப்பமுடையானொருவன் கடல் நீரையெல்லாம் பிரமன் கள்ளாகப் படைக்கவில்லையே என முனிந்து கூறுவதாக அமைந்துள்ளது இப்பாட்டு. இது 'களி' என்னும் கலம்பக உறுப்பைச் சேர்ந்தது.

[நேரிசை வெண்பா]

**35. காளகண்டர் சிங்கைக் களியரேம், மண்படைத்த**
**கூளனயன் தானுங் குயவனே?—மீள**
**மதுக்கடலை இப்புறத்தே வையாமல் ஐயோ!**
**எதுக்கடலை யாயிருந்தோ னே?**

நாங்கள் காளகண்டர் எழுந்தருளியிருக்கும் சிங்கை என்னும் பதியிலே வாழ்கின்றோம் (ஆதலின் எங்களுக்குப் பயன்படுமாறு) இம்மண்ணுலகைப் படைத்த குயவனை பிரமதேவன் அறிவிலிபோலும் (ஏனெனில்) மறுபடியும் மதுக்கடலை இவ்வுலகில் படைத்துவைக்காமல் ஐயகோ! எதற்காகப் படைக்குந்தொழிலையுடையவனாக இருக்கின்றான்?

[காளகண்டர் = சிவபெருமானுடைய பெயர்களுள் ஒன்று. சிங்கை=ஓர் ஊர். தன் கருத்துக்கு மாறாயிருத்தலின் "கூளன் அயன்" என்றான். அயன் = பிரமன். மது மயக்கம்தோன்ற, மீள மதுக்கடலையிப்புறத்தே வையாமல் என்றான், முன்பும் வைக்கவில்லை என்னுங்கருத்துப்பட. 'ஐயோ' இரக்கமும் முனிவும் தோன்றநின்றது. அடலை=சமைப்பவன். ஈண்டு (பிரம்மா

வின்) படைத்தல் தொழிலை உணர்த்திற்று. கல்லாக் களிமக ளாதலின் 'எதற்கு' என்னாது 'எதுக்கு' என வழக்குச் சொல் லால் கூறினன் போலும்.]

—∞∞—

தோற்றுவாய்

சோணகிரியில் உள்ள இறைவன்பால் காதல் கொண்ட தலைவி ஒருத்தி மாலைக்காலத்தே தோன்றிய நிலவுகண்டு ஆற்றாளாயினமைகண்ட செவிலி, நிலவு கதிரவனாகவே என் மகளை வருத்துகிறது நீ உன் மாலையை அளித்து அதனைத் திங்களாகவே செய்வாயாக என அவ்விறைவனை வேண்டிக்கொள்வதாக அமைந்த அகத்துறைப் பாடல் இது.

[அறுசீர் ஆசிரிய விருந்தம்]

36. இலங்கிய திங்கள் எழுந்தால்
எங்கள்மின் வெங்கதி ரென்பாள்
கலங்கின ளாயினும் அன்னாள்
கரகம லங்குவி யாளே;
துலங்கிய வெங்கதிர் தானே
சோணகி ரிப்பெரு மானே
அலங்கலை யென்றுகொ டுப்பீர்
அன்றது வெண்மதி யாமே.

சோணகிரிப் பெருமானே! மின்போன்ற எம் முடைய அருமை மகள் விண்ணில் விளங்கும் திங்க ளானது தோன்றினால் அதனை வெம்மைசெய்யும் கதிர வனே என்பாள், என்று கூறி உள்ளங்கலங்கினவளாய் மேலும் அவள் தன் கைத்தாமரையைக் குவித்தல் செய்யமாட்டாள். பெருமானே! நீர் என்று உமது

தோள்மாலையைக் கொடுப்பீர் ! கொடுத்த அன்றைக்குத் தான் அது தண்ணிய நிலவாகும் அதுவரை (அவளைப் பொறுத்தஅளவில்) விளங்குகின்ற கதிரவனேயாம்.

[மின் = தலைவி — உவமஆகுபெயர். கரகமலம் = கைத் தாமரை. இறைவனுடைய மாலையை விரும்பிப் பெறுதற்காக ஏந்திய கைகள் இன்னும் குவியவில்லை என்னும் குறிப்புப் புலப் பட 'கரகமலங்குவியாளே' எனக்கூறிய நயம் சுவையானது அலங்கல் = மாலை.]

---

தோற்றுவாய்

பேரின்பமாகிய சிவபதத்தை எய்தத், துணிவு வேண்டும் என்னும் இச்சான்றோர் அதனைச் சில எடுத் துக்காட்டுக்கள் வாயிலாக வலியுறுத்துகிறார்.

[ அறுசீர் ஆசிரிய விருத்தம் ]

37. இறைக்க வூறும் மணற்கேணி
இடவே யூறும் இருநிதியம்
கறக்க வூறும் ஆவின்பால்
கற்கவூறும் பேரறிவு
அறுக்க வூறும் அறைக்கீரை
அணுக வூறும் இந்திரியம்
துறக்க வூறும் மெய்ஞ்ஞானம்
துணியத் துணியச் சிவபதமே !

நீரை இறைக்க இறைக்க மணல் நிலத்துக் கேணி நீர் ஊறும், பொருளை இரவலர்க்கு அள்ளிக் கொடுக்கக் கொடுக்க செல்வம் பெருகும், பாலைக் கறக்கக்கறக்க ஆவின்மடி பால்ஊறும், நூல்களை ஆய்ந்து தோய்ந்து பயிலப்பயிலப் பேரறிவு பெருகும், தழைக்குந்தோறும்

அறுக்கஅறுக்க அரைக்கீரை வளரும். பொருள்களை அணுகஅணுக பொறிகளாகிய பஞ்சேந்திரியங்கள் தத்தம்புலனுணர்வு மிகும், பொருட்பற்றினைத் துறக்குந் தோறும் மெய்யுணர்வு மிகும். (எனவே அவ்வாறே) வரும்வரும் இடையூறுகளுக்கு அஞ்சாது நோன்பியற்றத் துணிவுகொள்ளத் துணிவுகொள்ள மேலாய சிவ பதம் தானே வந்தடையும் என உணர்க.

['துணியத்துணிய' என்றதனால் இறைக்க முதலியவற்றை இரட்டித்துப் பொருள்கொள்க. ஊறும் என்றது இலக்கணையால் அவ்வப்பொருளுக்கேற்ற வினைகொண்டது. 'அணுக ஊறும் இந்திரியம்' என்பதற்குச் சிற்றின்பப் பொருள் கோடலுமாம். "சுடச்சுடரும் பொன்போல் ஒளிவிடும் துன்பம், சுடச்சுட நோற்கிற்பவர்க்கு" என்பதனால் துணியத்துணிய என்பதற் குரிய செயப்படுபொருள் வருவித்துரைக்கப்பட்டது.]



தோற்றுவாய்

தம்மிடத்துவந்த சான்றோர் புலவர் முதலாயினோர்க்குக் கொடுப்பதற்குப் பொருளில்லையாயினும் அவ்வவர்க்கு ஏற்பச் செய்யும் வழிபாடுகளே செல்வக்கொடை நேர்ந்ததை ஒக்கும் என, அவ்வாறு வழிபடும்முறைமை கூறுகின்றது இப்பாட்டு.

[அறுசீர் ஆசிரிய விருத்தம்]

**38. பொருளரி தாகிற் கேட்போர்க்**
**கின்சொலும் அரிதோ? போந்தால்**
**விரைவுடன் எழுத லோடே**
**வியந்தெதிர் கொள்கை, பீடத்**

**துரிமையி லிருத்தல், பாத**
**பூசனை உவப்பச் செய்தல்,**
**பிரிபொழு துடனுச் செல்லல்**
**எனுமிவை ஏழும் பேறே.**

தம்மிடத்து விருந்தினராயும் இரவலராயும் வந்தார்க்கு அளித்துதவுதற்குரிய பொருளின்றி வறுமை உற்ற போதும், கேட்போர்க்கு (அவர் உளம் மகிழ வழங்கும்) இனிய வாய்ச்சொல்லும் அரிதாமோ? (ஆகாது. எனவே) அவ் இன்சொற் கூறுதலும், (சான்றோர்கள் தம்மை நாடி) வந்தால் விரைந்து எழுதலும், அவர்களைப் போற்றி வரவேற்றலும், உரிய இருக்கையில் அமரச் செய்தலும், பாதபூசனையை உவந்து செய்தலும், அவர்கள் பிரிந்து செல்லுங்கால் எழுந்து சிறிது உடன் செல்லுதலும் ஆகிய இவ் ஏழும் நெறிமுறைச் செல்வமாகும்.

["முகத்தானமர்ந்தினிது நோக்கி அகத்தானும் இன்சொலினதேயறம்" என்பது பொய்யாமொழியாதலின் இன்சொல்முதல் வைக்கப்பெற்றது. 'பூசனை' ஆசாரியர் அந்தணர் அறிவோர் இவர்கட்குஆம். விடைபெறுங்கால் எழுடிசென்று வழியனுப்புதல் வேண்டுமென்பார் நூலோர். 'இவை ஏழும் பேறு' என்றது செல்வம் கொடுத்தமையை ஒக்கும் என்றபடி ]

தோற்றுவாய்

ஊன் உண்ணுதல் காரணமாக நிகழும் கொலைக் குற்றத்திற்குரியார் இவரிவர் என விளக்குகின்றது இச்செய்யுள்.

**[கலி விருத்தம்]**

39. **உண்ண ஊனை விரும்பி உயிர்க்கொலை**
**பண்ணு வான்,கொலை கண்டிரங் கான்,கொலை**
**பண்ணு வாரைத் தடுத்துப் பகர்கிலான்,**
**நண்ணு வானெடு கொலைஞர் நால்வரே.**

உயிர்நின்ற பிறவற்றின் ஊனை உண்ணவிரும்பிக் கொலை செய்பவனும், அக்கொலையைக்கண்டு உளமிரங் காதவனும், கொலை புரிவோரை அவர் செய்யுமுன் தடுத் துக் கூருதவனும், அக்கொலைக்குத் துணையாகச் செல் பவனும் என இந்நால்வரும் கொலைஞரே ஆவார்.

[கொலையைச் செய்தவருக்குத்தான் பாவம் எனக் கருது வாரை நோக்கித் துணை நின்ருர்க்கும் அதனைத் தடுக்காதவர்க் கும் அவ்வளவு பாவம் உண்டென வற்புறுத்தப்பட்டது.]

---

தோற்றுவாய்

அரச குருவாக இருக்கும் ஒருவர் தன் சீடனுகிய மன்னவனுக்கு எவ்வெவ்வாறு அருள வேண்டுமென்ப தும், அவ்வாறு அருள்புரியும் ஆசானுக்குச் செய்யும் கைம்மாறு இது என்பதும் பற்றிக் கூறுகின்றது இப் பாடல் (கருத்துச் சிறப்பிற்கேற்ப செய்யுளமைப்புச் சிறக்கவில்லை)

[ எண் சீர் விருத்தம் ]

40. **பார்த்திபனும் காமத்துப் பொருளில் சாலப்**
**பற்றுடையன் எனிற்குரவன் பரிவு கூர்ந்து**

**தீர்த்திடுக மந்திரத்தால்! விடாதி ருந்தால்**
**மெய்த்தவத்தி னுலவன்றன் சிந்தை செல்லப்**

**பார்த்திடுக! பரயோகம் பின்பு நல்க!**
**பரயோக மளித்துவினைப் பகைசா ராமல்**

**காத்தகுர வனுக்கவன்செய் கைம்மா றுண்டோ**
**காசினியும் பொருளனைத்தும் கைம்மா றன்றே,**

நாடாளும் அரசன் இன்பப் பொருள்களைத் துய்ப்பதிலே மிக்க பற்றுடையவனானால் (அவனுக்கு நல்வழி காட்டும் கடமை பூண்ட) அரச குருவானவர் கருணை கொண்டு மந்திரத்தால் (வேள்வி) தீர்த்திடுக, பின்னும் அவன் அப்பற்றினை விடாதிருப்பின் தன்னுடைய மெய்த்தவத்தால் அவன்றன் சிந்தை நல்வழியிற் செல்லப் பார்த்திடுக. (இவ்வகையால் அவன் பற்றுநீங்கி உளந்தெளிந்தபின்) ஞானயோக வழிகளை அருளுக! இவ்வாறு மேலான யோகப்பேற்றினை அளித்து இருவினைப் பகைகளும் தன்னை வந்தடையாமல் காத்தருளிய குருநாதனுக்கு அவ்வரசமாணுக்கன் செய்வதற்கு இவ்வுலகில் ஏதேனும் கைம்மாறு உண்டோ? (இல்லை; ஏனெனின்) இவ்வுலகமும் இவ்வுலகில் உள்ள பொருளனைத்துமே கைம்மாறு. (ஆகும் ஆதலால் என்க).

[பார்த்திபன் = அரசன். பார்த்திபன் என்றதனால் 'குரவன்' என்றது ஈண்டு அரசகுருவினை உணர்த்திற்று. 'காமத்துப் பொருள்' பண்புத்தொகையாகவன்றிக் காமத்திலும், பொருளிலும் என உம்மைத்தொகையாகக்கொண்டும் பொருள் கொள்ளலாம். 'மந்திரம்' ஈண்டுவேள்வியை உணர்த்திற்று. நல்க = நல்குக! பரயோகம் = வீடெய்தும் நெறி. காசினி = உலகம். அன்று, ஏ என்பவை அசை. வினவாக்கியும் பொருள் கொள்ளலாம்.]



தோற்றுவாய்

'ஆசுகவி' எனக்காரணப்பெயர் பெற்ற ஒரு புலவரைச் சிறப்பித்துப் பாடியது. (பாட்டமைப்புப் புகழ்வதுபோலும் பழித்திறம்புனைதலாகக்கொள்ளவும் இடம் தருகின்றது).

[நேரிசை வெண்பா]

41. **ஆசுகவிச் சிங்கத்தோ டாராயி னும்மிடறிப்**
**பேசுகவிக் குத்தண்டம் பேசினல்—வீசுகவிச்**
**சம்மட்டி யாலடிப்பன் சண்ணிச்சா றும்பிழிவன்**
**அம்மட்டோ நாக்குமறுப் பன்.**

என் ஆசானுகிய ஆசுகவிச் சிங்கத்தோடு யாவரே யாயினும் தம்நிலை தெரியாது வழுவி, அவர் பாடிய கவிகளுக்குக் குற்றங்காட்டிப் பேசுவாராயின், அவர்கள் காட்டும் குற்றங்களை வீசிச்சிதைக்கும் என்னுடைய கவியாகிய சம்மட்டியால் அடிப்பேன். மேலும் அவர்மேனி குழையுமாறு அவர்களைச் சாறுபிழிவேன். அவ்வளவே யன்றி அவர்தம் நாவினையும் அறுப்பேன்.

['அன்' விகுதியைத் தன்மை ஒருமையாகக்கொள்க. ஆசுகவி=நால்வகைக் கவிஞருள் முதலாமவர், வினவியபொழுதே அவரவர் விரும்பியாங்குப் பாடுபவர். இடறுதல் = நிலைதடுமாறுதல். சம்மட்டி=பெருங்கொட்டான். சண்ணுதல்=செய்தல். ஈண்டுக் குழையப்பற்றுதல் என்னும் பொருள் தந்தது. 'அன்' விகுதியைப் படர்க்கை விகுதியாகக்கொண்டால் ஆசுகவிச் சிங்கமாகிய இவன் தன் கவிக்குக் குற்றஞ்சொல்வோரை வித்தையினல் வெல்லாமல் வாய்வீச்சு வீசும் இக்கவி சம்மட்டியாலடிப்பான், பிழிவான், அறுப்பான் எனப்பழிப்புத்தோன்றப் பொருள் தரும்.]



தோற்றுவாய்

மனமே! சிற்றின்பத்திலே சிந்தையைச் செலுத்தி நையாமல் ஒற்றைக் கொம்பனுகிய விநாயகனிடத்தே அன்புபூண்டு ஒழுகுவாயாக என்கிறது இப்பாட்டு.

[பின்முடுகு நேரிசை வெண்பா]

**42. வாங்குஞ் சிலைமதவேள் மாயக் கலவியிலே**
**ஏங்கி மனமே! இளையாதே—மாங்கனிக்குத்**
**தம்பியொக்கச் சண்டையிட்டுத்**
**தந்தையைச்சுற் றந்தவொற்றைக்**
**கொம்பனைச்சற் றன்புவைத்துக் கொள்!**

நெஞ்சமே! மலரம்புகளைவைத்து வளைக்கும் கருப்பு வில்லையுடைய மன்மதனுடைய வஞ்சனையால் நிகழும் கலவியை எண்ணி ஏக்கமுற்று மெலியாமல், (நாரதன் கொணர்ந்துதந்த) மாங்கனியைப் பெறுதற்காகத் தன் தம்பியாகிய முருகனோடு தானும் ஒப்பாகச் சண்டையிட்டுத் தன் தந்தையாகிய உமாமகேசுவரனைச் சுற்றும் அத்தகைய ஒற்றைக்கொம்பனிடத்தே சிறிது அன்பு வைத்துக்கொள்வாயாக.

[வாங்கும் = உணர்வைத் தன்பால் வைத்துக்கொள்ளும், என்றும் பொருள்கொள்ளலாம்— இளையாதே' என்றும் பாடம் கொள்ளலாம். ஒற்றைக்கொம்பன் = விநாயகன். 'கலவி'— இருபாற்கும் பொது.

---

தோற்றுவாய்

நிலையில்லாத இவ்வுடம்புள்ளபோதே தில்லைக் கூத்தபிரானின் நாட்டியத்தைக்கண்டு சேவித்து அருள் பெறுக! என்கிறது இப்பாட்டு.

[நேரிசை வெண்பா]

**43. பாவிகாள்! தில்லைப் பரமசிவன் நாட்டியத்தைச்**
**சேவியா தேனே திரிகின்றீர்—சேவித்த**
**அந்நேரம் முத்தி அளிப்பா னழியுமுடல்**
**எந்நேரம் போமோ இது.**

பாவத்தை உடைய மக்களே! திருச்சிற்றம்பலத்திலே ஆடும் சிவபெருமானின் நாட்டியத்தைக்கண்டு மகிழ்ந்து வழிபடாமல் வேறு என்ன காரணத்தால் உயிர்கொண்டு அலேகின்றீர்கள்? அப்பெருமானை சேவித்த அப்பொழுதே (இப்பிறவிக்குக் காரணமான பாவங்களைப் போக்கிப் பேரின்பமான) வீட்டுலகத்தை யளிப்பான். இவ்வுடம்பு அழியும் தன்மையுடையதாகலின் இருக்கும்பொழுதே சேவித்து முத்திபெறுங்கள்).

[திரிகின்றீர் = உலக இன்பங்களால் உளம் மாறுபடுகின்றீர் என்றுமாம். 'இது' என்பதற்கு உயிர் எனக்கொண்டு அழியும உடலைவிட்டு எப்பொழுது உயிர்போகுமோ அறியோம் எனக் கொள்ளலுமாம்.]

---

தோற்றுவாய்

'புலி பசித்தாலும் புல்லைத்தின்னாது. அதுபோலத் திருவரங்கப்பெருமானையன்றிப் பிறரை என் மனம் நினையாது' என ஓர் அடியார் கூறுவதாக அமைந்துள திப்பாடல்.

[கலி விருத்தம்]

**44. உன்னினால் உன்னையே உன்னும் என்மனம்**
**பின்னையே ரொருவரைப் பிடிக்குமோசொலாய்?**
**பன்னுமோ? கனப்புலி பசிக்குப் புல்லையும்**
**தின்னுமோ? பெண்ணைவாழ் திருவ ரங்கரே!**

பெண்ணை யென்னும் திருப்பதியிலே விளங்கும் திருவரங்கப்பெருமானே! பெருமை பொருந்திய வேங்கைப் புலியானது தன் பசிக்குப் புல்லைத் தின்னுமோ? (தின்னாது அதுபோல) என் மனமானது

நினைந்தால் உன்னையே எண்ணித்தியானிக்கும் அல்லாமல் பின்பு வேறொருவரைப் பற்றுமோ? பற்றிப் புகழுமோ? நீயே சொல்வாயாக!

[உன்னுதல்=நினைதல். பிடித்தல்=விரும்புதல். பன்னுமோ =புகழ்ந்து பேசுமோ, (பன்னுதல் = சொல்லுதல்) என முனை கூட்டிப் பொருள்கொள்க. இஃது வேற்றுப்பொருள் வைப் பணியைச் சார்ந்தது.]

---

தோற்றுவாய்

திருக்கடவூர் என்னும் பதியைச் சிறப்பிக்கும் இச் செய்யுளின் பின் இரண்டடிகளும் மடக்கணியாக அமைந்து சுவை பயக்கின்றது.

[ நேரிசை வெண்பா ]

**45. சேற்றிலெழு செங்கழுநீர்ச் செவ்விமணந் [தோய்ந்துதென்றற்**
**காற்றுவந்து வீசும் கடவூரே—கூற்றினுயிர்**
**போகத்து வைத்தார் பொருப்பரசன் தன்மகளைப்**
**பாகத்து வைத்தார் பதி.**

சேற்றினிடத்தே தோன்றி மலரும் செங்கழுநீர்ப் பூக்கள் அலரும்போது கமழும் நறுமணத்திலே தோய்ந்து தென்றற் காற்றானது எங்கும் பரவி வீசி இன்புறுத்தும்படியான திருக்கடவூர் என்னும் தலமே, கூற்றுவனுடைய உயிர்போகும்நிலையில் நையப்புடைத்தவரும், இமயமலையரசன் மகளாகிய பார்வதியைத் தன் உடம்பின் ஒருகூற்றிலேற்றவருமான இறைவன் உவந்துறையும் பதியாம்.

[தென்றல் செங்கழுநீர்ப் பூக்களிலே படிந்துவரும் என்பது கடவூரின் இயற்கைவளமும் மக்கள் செழிப்பும் காட்டுவதோடல்லாமல் அப்பதிக்குச் செல்வோர் தூய சிந்தனையோடு செல்வார்கள் என்னும் குறிப்பையும் புலப்படுத்துகிறது. கூற்றினுயிர் துவைத்தது மார்க்கண்டேயன் பொருட்டு. போகத் துவைத்தார் என்றும் பாகத்து வைத்தார் எனவும் பிரிக்க நின்றன. இச்செய்யுளுள் மேலும் பல நயங்கள் காணலாம்.]

—∘∘✕∘∘—

தோற்றுவாய்

இச்செய்யுளும் திருக்கடவூரின் சிறப்பையே கூறுகின்றது.

[ நேரிசை வெண்பா ]

46. வண்டுநீர் தேக்கி வயலுக் கெருவாக்கிக்
கண்டு சொரியுங் கடவூரே—பண்டொருநாள்
அம்புலவன் தன்பகையை ஆழிகுடி வேந்தனுக்கு
வெம்புரவி யாக்கினன் வீடு.

வண்டுகள் மொய்த்துண்ணும்படியான தேனாகிய நீரைத் தேக்கிக் கற்கண்டினையே எருவாக்கி வயல்களுக்குச் சொரியும் சிறப்புவாய்ந்த திருக்கடவூர் என்னும் தலமே, முன்பொருகாலத்தில் அம்புலவன் தன்னுடையபகையைக் கடலிற்குடிகொள்ளும் வேந்தனுக்கு விரும்பத்தக்க புரவியாக்கிய இறைவன் உவந்துறையும் வீடாகும்.

[தேன் நீராகவும் கற்கண்டு எருவாகவும் வயல்களுக்கிடப் பெறும் என்பது உயர்வுநவிற்சியணி. இதனால் வளம் உணர்த்தப்பட்டது. பின் இரண்டடிகளில் கூறப்பெறும் வரலாறு புலப்படவில்லை. ஆழி = பாற்கடல்; வேந்தன் = திருமால்; புரவி=குதிரை எனக்கருதலாம்.]

தோற்றுவாய்

இச்செய்யுள் திருக்கடவூரின் வயல் வளத்தோடு வாவி முதலிய நீர் வளங்களையும் கூறுகின்றது.

[நேரிசை வெண்பா]

**47. பூமன் கணையும் பொருசிலையும் கண்டுநித்தம்
காமன் திரியும் கடவூரே—சாமங்கள்
ஒன்றுபோ யொன்றுபோ யொன்றுபோய் [நாழிகையும்
ஒன்றுபோ யொன்றுபோ யொன்று.**

இப்பாடலின் பின்னிரண்டடிகளின் கருத்துப் புலனாகவில்லை. ஆராயத்தக்கது. வாவிகள்தோறும் மலர்ந்துள்ள மலர்களும் வயல்களில் செழித்துள்ள கரும்புகளும் முறையே மன்மதனுக்கு மலரம்புகளும் வில்லுமாகலின் அவற்றைக் கண்டு காமன் அப்பதியினின்றும் நீங்காமல் திரிவான் என்கிறார். (பின்னிரண்டடிகள் சிதைந்து, வேறுபாடலின் பின்னடிகள் இதனோடு சேர்ந்துமிருக்கலாம். ஆராயத்தக்கது.)



தோற்றுவாய்

சிவபெருமானின் பிட்சாடனத் தோற்றத்தை வைத்துப் பழிப்பது போலும் புகழ்தல் அணிவிளங்கச் செய்யப்பட்டதிப் பாடல்.

[நேரிசை வெண்பா]

**48. பத்தரே போற்றும் பரந்தரரே! சேவேறும்
பித்தரே நீருமொரு பேயரோ?—சுத்த
மழுமான் கரத்தேந்தி வந்தக்கா லும்மைத்
தொழுமான் பயப்படா தோ?**

பக்தர்களால் போற்றப்பெறும் யாசகரே காளை மாட்டின் மீது ஏறிவரும் பித்தரேயாயினும் நீர் ஒரு பேயரோ? (ஏனெனின், நீர் யாசிக்கவருங்கால்) தூய மழுவையும் மானையும் ஏந்திக்கொண்டு (சடை திகழ) வருகின்றீர் இவ்வாறு வரின் உம்மைத்தொழுது அன்னமிட வருகின்ற மான் அஞ்சாதோ?

[பரந்தரர்=யாசகர். சே=எருது; நந்தி. பித்தர், பேயர் என்பன சிவபெருமானின் திருநாமங்கள்—மானும் மழுவும் அவர் திருக்கரத்தில் விளங்குவன. இவற்றைவைத்து ஒரு செவிலி தலைவியின் பொருட்டுக் கூறுவதாக அமைத்துள்ளார் ஆசிரியர். மானையும் மழுவையுங்கண்ட தலைவி, இவருடைய கொடுந்தொழிலை உன்னி அஞ்சுவாளாகக் கருதினள். தொழும்மான் = தலைவி.]

---

தோற்றுவாய்

தில்லையம்பதியில் மார்கழித் திங்களில் நிகழும் இறைவன் நீராட்டுவிழாவைக் கண்டு வழிபடவந்த அடியார் ஒருவர் தாம்பெற்ற பேற்றினைக் கூறுவதாக அமைந்துள்ளது இப்பாடல்.

[ நேரிசை வெண்பா ]

**49. பெற்றேன் குருவருளைப் பேரின்ப மானகலை**
**கற்றேன் பிறவிக் கடல்கடந்தேன்—முற்றுநிறைந்**
**தார்கலிநீர் சூழுந் தமிழ்த்தில்லை யம்பலவர்**
**மார்கழிநீ ராடுகைக்கு வந்து.**

எல்லா வளங்களும் நிறைந்த ஆரவாரமிக்க கடல் நீர் சூழும் தமிழ்மயமான தில்லையம்பதியில் திகழும் பொன்னம்பலத்திறைவன் ஆடும் மார்கழி நீராட்டு விழாவிற்குவந்து வழிபடப் பெற்றமையால் குருவருளைப் பெற்றேன், பேரின்ப மெய்தக் காரணமாகும் கலைகளைக்கற்றேன், இவற்றால் பிறவிக்கடலையும் கடந்தேன்.

[ஆர்கலி—கடல். தேவாரங்கள் காப்பிடப் பெற்றிருந்தமையாலும், திருவாசகம் முதலிய திருமுறைகள் தோன்றிய இடமாதலானும் 'தமிழ்த்தில்லை' என்றார். 'தமிழ்'—இனிமை என்றுமாம். வழிபடப்பெற்றமையால் என்பது அவாய் நிலையான் வந்தது. பேரின்பமான கலையாவது ஞானபோகங்கள். மார்கழி நீராடல் தில்லையில் நிகழும் பெருவிழா.]

---

தோற்றுவாய்

திகம்பரராய்ப் பிட்சாடனராய்த் திகழும் இறைவனைப் 'புகழாப்புகழ்ச்சி' அணிவகையால் பாமாலை புனைந்து ஏத்திவழிபடும் ஓர் அடியார் கூற்றாக அமைந்துளது இப்பாடல்.

[நேரிசை வெண்பா]

50. பாதி யொருத்தி பகிர்ந்துகுடி கொள்ளாளோ
மோதி யொருவன் முனியானோ—ஏதில்மதன்
எய்யானோ பெண்தலையில் ஏறாளோ நான்மறைசூழ்
ஐயாறர் ஏழையா னால்?

நான்கு வேதங்களும் ஆராயும் (பெருமைசான்ற) ஐயாறப்பராகிய இறைவன் ஏழையானால், ஒருத்தி (உடம்பிற்) பாதியைப் பகிர்ந்து குடிபுகுதமாட்டாளோ (புகுவாள்). ஒருவன் (தன் வில்லால்) தலையிற் புடைத்து வெகுளமாட்டானோ (வெகுள்வான்). ஏதிலனாகிய மன்மதன் தன் (மலர்) அம்புகளால் எய்யமாட்டானோ (எய்வான்). இவையொருபுறமிருக்க ஒரு பெண் தலை மீது ஏறமாட்டாளோ (ஏறுவாள்). ஏழையானமையால் எல்லோரும் இவ்வாறு செய்தார்கள்.

['ஓ' காரங்கள் எதிர்மறைப்பொருளில் வந்தன. பகிர்ந்து குடிகொண்டவள் பார்வதி. அர்த்தநாரீசுவர மூர்த்தத்தை இவ்

வாறு நயம்படக் கூறினர். மோதிமுனிந்தவன் அருச்சுனன்: கிராதார்ச்சுனப் போரை இவ்வாறு சுட்டினர். ஏதில்=அயன்மை. யோகநிலையில் இருந்த இறைவன்மேல் தேவர்களின் தூண்டுதலால் விருப்பமின்றி எய்தானுகலின் 'ஏதில் மதன்' என்றார். இதுகுமார சம்பவத்தைச் சுட்டி நின்றது. தலையில் ஏறியவள் கங்கை. இது பகீரதன் முயற்சியைச் சுட்டி நின்றது. இந்நிகழ்ச்சிகள் யாவும் இறைவன் பெருங்கருணைத்திறத்தைப் புலப்படுத்தும். இவற்றை வஞ்சப் புகழ்ச்சியாக வைத்துப் பாடிய நயம் மகிழத்தக்கது.]



தோற்றுவாய்

இதுவும் முதற்பாடலைப் போன்றதே. அதனுள் ஐயாறப்பனை வைத்துச் சில நிகழ்ச்சிகளைக் கூறினர். இதனுள் அகத்தீசுவரமுடைய இறைவனை வைத்து வேறு சில நிகழ்ச்சிகளையும் கூட்டி நயம்படக் கூறுகின்றார்.

[ நேரிசை வெண்பா ]

51. **கல்லிட் டெறியானே காலி னுதையானே**
**வில்லிட் டடிக்கொருவன் வெட்டானே—நல்லிட்டம்**
**சேவுடையார் முக்கூடற் செல்வரகத் தீசுரனர்**
**ஆவுடையார் ஏழையா னுல்?**

தன் கருத்திற் கிணையப் பணிபுரியும் நன்மைசான்ற நந்தியை ஊர்தியாக உடையவரும், திருமுக்கூடலிற் கோயில்கொண்டு விளங்குபவருமாகிய அகத்தீசுவரர் ஏழையானல், ஒருவன் ஏன் கல்லால் எறியமாட்டான், ஒருவன் ஏன் காலால் உதைக்கமாட்டான், ஒருவன் ஏன் வாள்கொண்டு வெட்டமாட்டான். எல்லோரும் எல்லாம் செய்வார்கள்.

[கல்லிட்டெறிந்தவர் சாக்கிய நாயனர். காலிட்டுதைத்த வர் கண்ணப்பநாயனர். வில்லிட்டடித்தவன் விசயன். வாள் கொண்டு வெட்டினவன் ஓர் இடையன்: "வேயீன்ற முத்தர் தமை வெட்டினனே இடையன், தாயீன்ற மேனி தயங்கவே" என்னும் இரட்டைப்புலவர்கள் பாடியமைகொண்டு இவ்வர லாறு அறியலாம். இவ்விறைவர் வரலாற்றைத் திருநெல்வேலித் தலபுராணம் விரித்துக்கூறும். இதிற்கண்ட அடியார்களுக்கு இறைவன் அருளிய திருவிளையாடல்களைப் புகழாப்புகழ்ச்சி அணி நலம் விளங்கப் பாடியநயம் உணர்ந்து மகிழத்தக்கது. "வில் லிட்டடிக்கொருவன்" என்பதனுள் அகரம் தொகுத்தல் விகா ரம், முக்கூடல் என்பது பவானிக்கும் ஒருபெயர். ஆவுடையார் என்றது சிவலிங்கத் திருவடிவைக் குறிக்கும்.]

---

தோற்றுவாய்

பட்டீச்சுரத்தில் கோயில் கொண்டருளும் இறைவ னைத் தனமை நவிற்சியணியால் புகழும் ஒரு சைவப் புலவர் கூற்றாக அமைந்துளதிப்பாடல்.

[ நேரிசை வெண்பா ]

**52 துண்ட வரியுழுவைத் தோலுடுத்தா ராம், கொம்பு**
**கொண்ட கரித்துணிமேற் கொண்டாராம்— [கண்டமத**
**வேளவன்கண் ணாலெரிய வென்றசிவ னார்மழலை**
**யாளவந்த பட்டீச ராம்.**

(தாருகா வனத்து முனிவர் தம் அகந்தையால் ஏவி விட்ட) வரியமைந்த புலியைக்கொன்று அதன் தோலை ஆடையாக உடுத்தாராம். (ஆணவத்தால் எதிர்ந்த கயமுகாசுரனாகிய வலிய) கொம்புகளையுடைய யானை யைக் கொன்று அதன் தோலை ஆடையாகப் போர்த்

துக்கொண்டாராம். அவர் யாரெனின் கண்ட அளவிலே மன்மதன் தன் நெற்றிக்கண்ணால் எரியுமாறு வென்ற சிவபெருமானவார். அப்பெருமானர் தாம் திருஞான சம்பந்தப் பிள்ளையாகிய மழலையை ஆளவந்த பட்டீசுரரும் ஆவார்.

[ஆணவத்தால் எதிர்த்தவரை அடியோடு வெல்லும் ஆற்றல் வாய்ந்த இறைவரே அன்பினல் வழிபடுவோரைப் பெருங் கருணைத் திறத்தால் ஆண்டருளுவார் என்னும் உண்மையை விளக்க எழுந்தது இப்பாடல். மழலை—தேவாரத்தை உணர்த்திச் சம்பந்தரைச்சுட்டிநின்றது: சம்பந்தருக்கு முத்துப்பந்தர் அருளிய தலம் பட்டீச்சுரம்.]

---

தோற்றுவாய்

சிற்றம்பலத்தில் நடிக்கும் சிவபெருமானின் பாதங்களைச் சிறப்பித்துப்புகழும் இப்புலவர், அப்பெருமானே எல்லா மதங்களிலும் பரம்பொருளாக விளங்குகின்றான் என்பதை நயம்படக் கூறுகிறார்.

[நேரிசை வெண்பா]

**53. மட்டுக்கால் மாமதக்கால் மாமதங்கள் எட்டுக்கும்**
**முட்டுக்கா லாக முளைத்தகால்—கெட்டிருவர்**
**தேடுங்கால் தேடித் திகைத்தகால் தில்லைமன்றுள்**
**ஆடுங்கால் அம்பலவர் கால்.**

பேரின்பத்தேன் பெருகும் காலாகவும், ஒப்பற்ற பெரிய மதமாகிய சைவத்தின் அடிக்காலாகவும் உலகப் பெருஞ் சமயங்களாகவும் முளைத்த கால்கள் யாவையெனின் ஆணவத்தால் அறிவுதிரிந்த இருவர் தேடுங் கால், அவர்கள் தேடியடைய முடியாமல் திகைத்த கால், தில்லைச் சிற்றம்பலத்திலே ஆடுங்கால் ஆகிய அம்பலவாணர் தம் திருப்பாதங்களேயாம்.

['கால்' என்ற சொல்லை வாய்க்கால், மூலம், தூண்' பாதம் என்ற பொருள்களில் சொற்பின்வரும் நிலையணியாக அமைத்தநயம் சுவைக்கத்தக்கது. கெட்டு என்பதற்கேற்ப சரு விப்பெயர் வரவழைக்கப்பெற்றது. இருவர் அயனும் மாலும்' முட்டுக்கால் என்பதற்கு தடுக்குங்கால் எனப் பொருள்கொள்ள லுமாம். எட்டுமதம் என்றது பழைய புறச் சமயங்கள் ஆறோடு கிறித்தவமும், இசுலாமும் கூட்டிக் கூறப்பட்டதுபோலும்.]

---

தோற்றுவாய்

தான் விரும்பிய மங்கையை எய்தப்பெறுத ஒருவன் அவள் வடிவழகுப் பண்புநலம் பாங்கன் கூறும் பிற பெண்டிர்க்கில்லை என்பானைப் பிறிதுமொழிதல் அணி நயம்படக் கூறுவதாக அமைந்துள்ளது இப்பாடல். பிறவாறும் கருத்துக்கொள்ளலாம்.

[ நேரிசை வெண்பா ]

54. ஊரெல்லாந் தென்குருகை யூராமோ ஒட்டுபவர்
தேரெல்லாம் ஆதித்தன் தேராமோ ? — நீரெல்லாம்
பாகீ ரதியாமோ பாவையரெல் லாமதனன்
மோகீ ரதியாவ ரோ ?

நண்பா ! மக்கள் வாழும் ஊரெல்லாம் சான்றோர் பலர் தோன்றிய தென் குருகூருக்கு நிகராகுமோ? பரி பூட்டிச் செலுத்துமவர் தேர்களெல்லாம் கதிரவன் தேருக்கு நிகராகுமோ? பெருக்கெடுத்துவரும் நீரெல் லாம் பாகீரதி நீருக்கு நிகராகுமோ? (அவ்வாறே) இவ்வுலகில் நடமாடும் பாவையர் எல்லாம் மன்மதனின் காதலியாகிய இரதிதேவிக்கு நிகராவரோ? (எனவே யான் விரும்பிய மங்கையைப் பிறர் ஒவ்வார் என அறிக).

[குருகூர்-சடகோபர் தோன்றிய வைணவத்தலம். நீரென்றது ஆகுபெயரால் நதியை உணர்த்துகின்றது. 'மோகு இரதி' என்னும் வினைத்தொகை எதுகைநோக்கி 'மோகிரதி' என நின்றது. "மோகிரதியாகுமோ" எனப்பாடம் காணப்படுகிறது.]

---

தோற்றுவாய்

சிவபெருமான்மீது காதல்கொண்ட ஒருத்தி, மாலைக் காலம் வந்து நிலவு வெளிப்படக்கண்டு தான் வளர்க்கும் கிள்ளையிடம் விரகம்தோன்ற வருந்திக் கூறியதாக அமைந்துளது இவ் வகத்துறைப்பாடல்.

[ நேரிசை வெண்பா ]

**55. ஆச்சந்தி நேரம் அனங்கன் அமராடப்**
**போர்ச்சந் திரனும் புறப்பட்டான் - தீச்சிந்தும்**
**புள்ளே! தென் எல்லைப் புரமூன் றெரித்தஅரன்**
**உள்ளே வரநினையா னே ?**

தீயைக் கக்குவதுபோல எனக்கு விரகத்துன்பத்தைத் தரும் சொற்களைப்பேசும் கிள்ளையே! அனங்கனாகிய மதவேள் அமர்புரியத் தொடங்கும் அந்திக்காலம் வந்துவிட்டது; மேலும் நம்மோடு போர்புரிவதற்காகச் சந்திரனும் வானத்திலே புறப்பட்டு விட்டான். இவ்விருவர் பகையையும் வெல்லுதற்குத் துணைபுரியத் தென் எல்லையிலே திரிந்த மூப்புரங்களையும் சிரிப்பினால் எரித்தழித்தவனாகிய சிவபெருமான் என் அகத்திற்குவர எண்ணமாட்டானோ? என் செய்வேன்?

['ஆச்சு' என்பது ஆயிற்றென்ற பொருள்தரும் வழக்குச் சொல். அனங்கன் = உருவமில்லாதவன். அமர் = போர்.

பிரிந்தார்க்குக் கிளிமொழி துன்பந்தருதலின் — "தீச்சிந்தும் புள்ளே' எனக்கிளியை அழைத்தாள். தீச்சிந்தும்புள் செஞ் சூட்டையுடைய அன்னப்புள்ளுமாம். "உள்" என்பது வீட்டை யும்—நெஞ்சத்தையும் உணர்த்திச் சுவை பயக்கின்றது 'நினை யானே' என்றது ஆற்றுமை தோன்றநின்றது.]

---

தோற்றுவாய்

ஆறுமுகக்கடவுளை நினைந்து வழிபடுவார்க்கு வினை யில்லை; எமபயம் இல்லை; இம்மை வாழ்வு சிறக்கும் என் கிறது இப்பாடல். இவ்வெண்பா பின்முடுகு ஓசைநயம் பொருந்தியுளது.

[ நேரிசை வெண்பா ]

**56. பண்டைவினை வாராது பார்மீதில் மன்னவராய்ச்
சண்டன் பெரும்படையைச் சாடலாம்—தொண்டரே
சீறிஎடுத் தாடுகரச் சேவல்பிடித் தேறுமுகத்
தாறுமுகத் தானைநினைத் தால்.**

தெய்வப்பணிபுரியும் தொண்டர்களே! அசுரராகிய பகையைச் சீறி வேலை எடுத்து ஆண்மைபுரியும் திருக் கரத்திலே சேவற் கொடியைப் பிடித்து வெற்றிமுகம் நோக்கிச் செல்லும் ஆறுமுகக்கடவுளை உள்ளத்தே நினைந்து வழிபட்டால் முற்பிறவிகளிற்செய்த பழவினை கள் உம்மை வந்தடையா. மேலும் இவ்வுலகில் மன்ன வர்போலச் சிறப்புடன் வாழ்ந்து எமனுடைய பெரும் படையையும் எதிர்த்து வென்றி கொள்ளலாம் என்றறி வீராக!

[ஆடுகரம்=வெற்றிக்கை. ஏறுமுகத்தென்பதனை முன்பின் ஞக மாற்றுக. சண்டன் — எமனுக்கு ஒருபெயர். படை— கிங்கரர்களும் நோய் முதலியவைகளும். பண்டைவினை=பிரா ரத்வ கர்மம்.]

---

தோற்றுவாய்

'திருக்காளத்தியில் கோயில்கொண்டெழுந்தருளி யிருக்கும் இறைவனை வழிபட்டு வீடுபேறடைந்தவர் இவர்கள்' எனக்கூறுகின்றது இப்பாடல்.

[ நேரிசை வெண்பா ]

**57. சிலந்தி யரவு சிவகோச நம்பி**
**நலந்திகழ் கண்ணப்பர் நக்கீரர்— கலந்திருவர்**
**காராருங் கன்னியர்கள் காளத்தி யார்கழற்கே**
**ஊராகப் புக்கா ருவந்து.**

சிலந்தியும், பாம்பும், சிவகோசரியாராகிய அந்தணரும், தெய்வநலந்திகழும் கண்ணப்பரும், நக்கீரரும், இரட்டையரும், விண்ணில் உலாவும் தேவகன்னியர்களும், திருக்காளத்தி இறைவன் பாதங்களையே தாம் குடிபுக்கு வாழும் ஊராகக்கொண்டு உவந்து புகுந்தனர்.

[சிலந்தி முதலாக இவ்வடியார்கள் பூசித்துப் பேறுபெற்றமையை அத்தல புராணத்துட் காண்க. 'கழற்கே' என்பது வேற்றுமை மயக்கம். ஊர்=வீட்டை உணர்த்தியது.

---

தோற்றுவாய்

'யாக்கை நிலையாமையை உணர்த்தவந்த இப்புலவர், அழியும் உடலை இடர்ப்பட்டு வளர்ப்பதனால் பயனில்லை' என்பதை நயமாகக் கூறுகிறார்.

[ நேரிசை வெண்பா ]

**58. செத்தாரைச் சாவார் சிவிகைசுமந் தோடிவரக்**
**கொத்தாரும் சுற்றத்தார் கூடியழ—வித்தாரக்**
**குன்றுபோ லேவளர்த்துக் கொள்ளியா லேசுடுவ**
**தென்றுபோம் காமாட்சி யே?**

எல்லா உயிர்கட்கும் படியளந்து காப்பாற்றும் காமாட்சியம்மையே! செத்தவர்களை, இனிச்சாவார் பாடையாகிய சிவிகையிலே சுமந்து (இடுகாடு நோக்கி) ஓடிவர, மனையிடத்துக்கொத்தாக இருக்கும் சுற்றத்தார் உறவினரோடு கூடி அழ, இவ்வுடம்பை அகன்ற பெரிய குன்றைப்போல (ப்பலவகை உணவூட்டி) வளர்த்துப் பின்பு கொடிய நெருப்பாலே சுடுவது (பொருந்துமா? இக்கொடுமை) என்று நீங்கும்.

["செத்துக்கிடக்கும் பிணத்தருகே இனிச் சாம்பிணங்கள் கத்துங் கணக்கென்னகாண்" எனப் பட்டினத்தடிகள் கூறியது போல இனிச் சாவார் என்றார். பிணத்தின் பாரந் தோன்ற சுமந்து என்றும், சுமந்தாரின் உள்ள வெறுப்புத் தோன்ற ஓடி என்றும் கூறிய நயம் காண்க. வித்தார = அகலம். அப்படி வளர்ப்பானேன் இப்படிச் சுடுவானேன் என்பார் 'என்றுபோம்' என்று கூறினர். இனிச், சுடக்கூடாது என்பார் போல யாக்கை நிலையாமையை வற்புறுத்திய திறன் பாராட்டத்தக்கது.]

தோற்றுவாய்

'மதுரைச் சொக்கநாதக் கடவுளின் பதமே பதம் பிறவெல்லாம் வீண்' என்று கூறுகின்றது இப்பாடல்.

[ நேரிசை வெண்பா ]

**59. சொக்கர் பதத்தைத் துணையென்று நம்புங்கோள்!**
**மிக்க பதம்விருதா என்னுங்கள்—தக்க**
**மதுரா புரியெனுங்கோள் மானிடரே! நீங்கள்**
**சதுராக வீடேறுங் கோள்!**

மெய்யறியாது தடுமாறும் மானிடர்களே! நீங்கள் மதுரைச் சொக்கநாதக் கடவுளின் இணையடிகளையே அடையத்தக்க பதம் என உறுதியாக நம்புங்கள்; அப்

பதங்களன்றி இந்திரன் முதலிய பிற எல்லாப்பதவி களும் வெறுமையானவை என்றுணர்ந்து கூறுங்கள், பின்னர் மதுராபுரி மதுராபுரி எனக்கூறி மெய்யுணர்வு பெற்று வீட்டின்பத்தினை எய்துங்கள்.

[பதம் = பாதமலர். மிக்கபதம் = (அவையல்லாத) பிற பதவிகள் 'விருதா' வெறுமை—வீண் எனப் பொருள்தரும் வழக்குச்சொல். சதுர் = சதுரப்பாடு, மெய்யறிவு. மதுராபுரி என்றது இறைவனை உணர்த்திற்று. 'ஆ ஓவாகலும்' என்னும் விதிபபடி நம்புங்கள் என்பது நம்புங்கோள என வந்தது; பிறவும் அன்ன.]

---

தோற்றுவாய்

'முருகப்பெருமானிடம், யான் செல்லும் திசைகளில் எனக்கு வென்றி உண்டாக நீ மயில்மீது ஏறி எனக்கு முன் வரவேண்டும்' என ஓர் அன்பர் வேண்டிக் கூறு கிறார்.

[நேரிசை வெண்பா]

60. **குன்ற மெறிந்த குமரா! கொடுங்குன்ற**
**மன்றறிந்த வள்ளி மணவாளா!—சென்றதிசை**
**மாற்றான் மடிய வரவேணும் மாமயில்மேல்**
**நீற்றான் திருமகனே நீ!**

திருநீற்றுமேனியனாகிய சிவபெருமானின் அருமை மகனே! அசுரனாகிய குன்றை வேல்கொண்டெறிந்து பிளந்த குமரக்கடவுளே! கொடுங்குன்றூரிலே மன்ற மறிய வள்ளியை மணந்த மணவாளனே! யான் சென்று மீளும் திசைகள் தோறும் என் பகைவர்கள் மாள, பெரிய மயில்மீது ஏறி நீ வரவேண்டும்.

[நீற்றான் = சிவன். சென்றதிசை—கால வழுவமைதியாகக் கருதுக. கொடுங்குன்றம் = குறிஞ்சிநிலம் என்னும் பொருள்பட நின்றது. மாற்றான் என்றது சாதியொருமை.]

தோற்றுவாய்

இப்பாடலும் முருகனடியார் ஒருவர் தம்மை ஆட்கொண்டருளத்தக்க காலமும், இடமும் இதுவே என வேண்டிக்கொள்வதாக அமைந்துளது.

[ நேரிசை வெண்பா ]

**61. காக்கப் பரமுனக்குக் காவா திருந்தக்கால்**
**ஆர்க்குப் பரங்காண்? அறுமுகவா—பூக்கும்**
**கடம்பா கதிர்வேலா காக்கவே நல்ல**
**இடங்காண் இரங்கா யினி!**

ஆறுமுகப்பெருமானே! அடியவனாகிய என்னைக் காத்தருள் புரிவது உன் பொறுப்பேயாகும். நீ காவாது விட்டால் வேறு யாருக்குப் பொறுப்புளது? பூக்குங் கடப்பமலர் மாலையணிந்துள்ளவனே! ஒளிபொருந்திய வேலைத் தாங்கியுள்ளவனே! என்னை ஆண்டருளத் தக்க நல்ல வேளையும் இடமும் இதுவே யாதலின் என் மீது இரங்கி ஆண்டருள்வாயாக.

[பரம் = பாரம், பொறுப்பு. இரங்காய்? என வினாவாகவும் நின்றது. இனி = இப்பொழுது. காத்தருளும் கருணைதோன்றக் கடம்பா என்றும் தீவினையைப் போக்கும் நிலைதோன்றக் கதிர் வேலா எனவும் விளித்த நயம் காண்க.]

தோற்றுவாய்

'தேவர்க்கும் மூவர்க்கும் யாவர்க்கும் முருகப் பெருமானே மெய்ஞ்ஞானகுரு' என்கின்றது இப்பாட்டு.

[ நேரிசை வெண்பா ]

**62. எவர்க்கும்மெய்ஞ் ஞானகுரு ஏகம்ப வாணர்**
**அவர்க்குமெய்ஞ் ஞானகுரு ஆரோ?**
**—உவர்க்கரையைக்**
**கட்டினவன் பார்த்திருக்கக் கஞ்சமல ரோன்தலையில்**
**குட்டினவன் தானே குரு!**

எல்லோருக்கும் மெய்ஞ்ஞானம் அருளும் குரு கச்சியில்விளங்கும் ஏகம்பவாணர் என்பார் பெரியோர். ஆயினும் அவருக்கு ஞானகுருவாய் விளங்கியவர் யார்? உவர்க்கடலைக் கடப்பதற்காக அணை கட்டியவன் அச்சத்தோடு பார்த்திருக்கப் பிரணவப் பொருள் அறியாத பிரமதேவனின் தலையில் குட்டி உணர்த்தியவன் தானே குரு? எனவே யாவர்க்கும் முருகப்பெருமானே குருநாதன் என உணருங்கள்.

[ஏகம்பர் = காஞ்சிபுரத்து இறைவன் திருநாமம். இராமனுகத் தோன்றிச் சேதுபந்தனம் செய்தவன் திருமாலே என்பார் 'உவர்க்கரையைக்கட்டினவன்' என்ருர். உவர் ஆகுபெயரால் கடலை உணர்த்திநின்றது. மகனைக் குட்டும்போதும் தடுக்க இயலாமல் தந்தை பார்த்திருந்தான் எனத் தோன்றுமாறுகூறிய நயம் காண்க. கஞ்சம் = தாமரை. மலரோன் = பிரமன். பிரணவப் பொருளைத் தந்தைக்குத் தெரிவித்தமையால் ஏகம்பவாணருக்குக் குருவானுர் என்றபடி. விரிவு கந்த புராணத்துட் காண்க.]

---

தோற்றுவாய்

திருவாரூர் தியாகராசப்பெருமான் மேல் காதல் கொண்ட ஒரு தலைவியின் நிலைக்கிரங்கிச் செவிலித்தாய் ஒருத்தி கூறும் கூற்ருக அமைந்துளதிப்பாடல்.

[ நேரிசை வெண்பா ]

**63. பஞ்சணையில் மேவவருன் பாராய் தியாக! கடல்**
**நஞ்சணியும் கண்டகண்ட நம்பனே—விஞ்சு**
**திருவாரு ருந்தலதே செம்பொன் மயமானள்**
**திருவாரு ருந்தலத்தே சென்று.**

நீயே அடைக்கலமெனப்பற்றிய அன்பர்பொருட்டுச் செயற்கரிய செய்து தியாகராசன் எனச் சிறப்பொடு விளங்கும் தியாகப்பெருமானே! உலகம் உய்யும் பொருட்டுக் கடல் நஞ்சினைக் கண்டத்திலே அணிந்து விளங்கும் நீலகண்டனே! கண்டோர்க்கு விருப்பம் வருமாறு விளங்குபவனே! என் மகள் திருவாரூராகிய உனது பதியிலே வந்து (உன்னைக்கண்டு காமுற்று உன்னை அடையப் பெறாமையால் விரகமுற்று) மேலெந்து விம்மும் கச்சணிந்த மார்பகமெல்லாம் செம்பொன் போலப் பசலை படரப்பெற்றாள்; ஆதலின் அவள் பசப்பும் விரகதாபமும் நீங்க நீ அவள் பஞ்சணையிடத்தே வந்து பொருந்தி அருள்செய்வாயாக.

[தியாக! என்றது அண்மைவிளி. நம்பன் = விருப்பம் செய்பவன். கண்டார்க்கு நம்பன் என்பது கண்டநம்பன் என நின்றது. விஞ்சுதல் = புடைத்தல். பின் இரண்டடிகளும் மடக்கணி அவற்றைத் திரு—வார்—ஊரும் தலம் எனவும் திருவாரூர்—உம்—தலம் எனவும் பிரிக்க. வாரூருந்தலம் = மார்பு. சென்று = சென்றதனால் எனக் காரணப்பொருள் தந்து நின்றது. செம்பொன் = உவம ஆகுபெயராய்ப் பசலை நிறத்தை உணர்த்திற்று.]

---

தோற்றுவாய்

மன்றுளாடும் இறைவனே பரம்பொருள், அவனன்றி வேறு தெய்வமில்லை என்னும் கருத்துப்பட ஓர் அடியார் கூறுவது இப்பாடல்.

[ நேரிசை வெண்பா ]

**64\. குன்றாட மன்றெழும் கூத்தாடச் செங்கையின்மான்**
**கன்றாட நின்றாடல் கண்டேனே — துன்றுபுகழ்**
**காசித்தே னேஉன்னைக் கண்டிருந்தும் [வேறுதெய்வம்**
**பூசித்தே னேயவமே போய்.**

வெள்ளி மலையில் ஆடுவதுபோலப் பொன்னம்பலத்தில் எழுந்து நீ கூத்தாட நின் கையில் உள்ள மான் கன்றும் ஆட, நீ நின்றாடும் ஆடல் கண்டு களித்தேனே. நிறைந்த புகழையுடைய காசியில் விளங்கும் (விசுவநாதனாகிய) தேனே! உன் திருக்கோலக் காட்சியைக் கண்டிருந்தும் (உலகின்பங்களை வேண்டி) வேறு சிறு தெய்வங்களிடத்தே சென்று அவமே பூசித்தேனே! என்னே எனது அறியாமை!

[முதலடி செம்மையாக அமையவில்லை யாதலின் ஒருவாறு பொருள்கொள்ளப்பட்டது. காசித்தேன் என்றார் பேரின்பந்தரும் சிறப்பை எண்ணி. சிறு தெய்வ வணக்கங்கள் காமியம் பற்றியதாகலின் 'அவமே போய்ப் பூசித்தேனே' என்றார்.]

---

தோற்றுவாய்

சிவபெருமான்மீது மையல்கொண்ட ஒரு தலைவி, கார்மேகத்தால் மறைக்கப்பட்டமையின் நிலாவைக் காணாதவளாய் அதனைச் சிவபெருமான் அணிந்துள்ள பாம்பு தனக்கு இறையாக்கிக் கொண்டது எனத்தன் பாங்கியிடம் மனமயக்கந் தோன்றக் கூறியது. காதல் உள்ளத்தின் நிலையை இப்புலவர் புலப்படுத்திய திறன் வியந்து பாராட்டற்குரியது.

[ நேரிசை வெண்பா ]

**65. நடுங்கப் பரந்தெரித்து நன்னிலா வெள்ளம்**
**அடங்கச் சுடுமே அணங்கே!—விடங்கர்**
**விரையாச் சிலையீசர் மெய்க்கணிந்த பாம்புக்**
**கிரையாச் சிலையாகி லின்று.**

அணங்குபோன்ற என் அருமைத்தோழியே! மேரு மலையாகிய விரையாத வில்லையுடைய விடங்கப் பெருமானாகிய ஈசர்தம் மேனியில் அணிந்துள்ள பாம்புக்கு உணவாக ஆகிவிட்டது வெண்ணிலா; இல்லையானால் நம் உடம்பானது நடுநடுங்க வானமெங்கும் பரந்து விரிந்து நல்ல நிலவாகிய வெள்ளம் பாய்ந்து நம் மேனி முழுதும் எரியுமாறு சுடுமல்லவோ ?

[தூய நிலவென்பாள் நன்னிலா என்றாள். விடங்கர்—திருவாரூர் இறைவன் பெயர்களுள் ஒன்று. மகாமேருமலையே வில்லாதலின் விரையாச்சிலை எனறாள். 'ஆச்சு' எனபது வழக்குச் சொல். முகிலால் மறைக்கப்பெற்ற நிலாவைப் பாம்புண்டது எனத் தன் காதல் மயக்கந் தோன்றக் கூறினாள்.]

---

தோற்றுவாய்

திருவாரூர் தியாகராசப்பெருமான் சிறப்புக்களுள் சிலவற்றைக்கூறி மகிழ்கின்றார் ஒரு புலவர்.

[ நேரிசை வெண்பா ]

**66. கமலா லயமேலார் காரார் களத்தர்**
**விமலா லயமேலாம் மெய்யர்—விமலர்மன்**
**றூடியபொற் பாதத்தி யாகர்நெடு மாலயனுந்**
**தேடியபொற் பாதத்யா கர்.**

பொன் மன்றத்தில் ஆடிய பொலிவுடைய பாதங்களையுடைய தியாகப்பெருமான், நெடுமாலும் அயனும் தேடிய பொன்போலும் பாதங்களையுடைய தியாகேசராவார் (அவர் யாண்டெலாம் இருப்பார் எனின்?) கரிய நஞ்சணிந்த கண்டத்தையுடைய இவ் இறைவன் விமலர் ஆதலின் கமலாலயத்தின்கண் வீற்றிருப்பார்; மேலும் மாசகன்ற அடியார்களின் உளமாகிய கோயில்களுள்ளும் மெய்ப்பொருளாக விளங்குவார்.

[விமலர் = மலம் இல்லாதவர். மலம் = ஆணவம், கன்மம் மாயை என்பன. எனவே, மும்மலம் நீங்கி மனமாசகன்ற அடியார் உளத்தை 'விமலாலயம்' என்றார். கமலாலயம் திருவாரூர் திருக்கோயிலின் பெயர். தூய தாமரைமலர் என்ற குறிப்பையும் தந்தது.]



தோற்றுவாய்

ஈன்றதாய் தன் மகவின் பிழையைப் பாராட்டமாட்டாள். எவ்வுயிர்க்குந் தாயாகிய நீ என் குறையை எண்ணாமல் அருள்புரிய வேண்டுமென உண்ணாமுலையம்மையிடம் முறையிடும் ஓர் அடியார் கூறுவது இப்பாடல்.

[ நேரிசை வெண்பா ]

**67. பெற்றபிள்ளை செய்த பிழையெல்லாம் அன்னைமார்**
**குற்றமென்று பாராட்டிக் கொள்வரோ—சற்றுந்**
**தெளியேனுன் மாயையுன்றன் சித்தமென்றோ ஞான**
**வெளியேயுண் ணாமுலையம் மே!**

பரமஞான வெளியாகித் திகழும் உண்ணாமுலை யம்மையே! அன்னைமார் தாம்பெற்ற பிள்ளைகள் அறியாமற் செய்த பிழைகளை ஒரு பொருட்டாக எண்ணிப்

பாராட்டுவரோ? (மாட்டார். அவ்வாறே யான் உன் மகவல்லவோ? எனவே யான்) உன் திருவுள்ளத்தே கொண்டமாயையைச் சிறிதும் அறியும் தெளிவில்லாத வன். உன்றன் சித்தமெவ்வாறோ அறியேன் இரங்கி அருள் புரிவாயாக!

[பாராட்டல் = பெரிதுபடுத்திக்கூறல். மாயை = தெய்வத் திருவிளையாடல்.]

---

தோற்றுவாய்

இல்லறத்திற்கு இயைபில்லாத ஒருவனைப் பழித்துக் கூறியதாக அமைந்துள்ள இப்பாடல், இலக்கிய மதிப் பில்லாததாகக் காணப்படுகிறது.

[ நேரிசை வெண்பா ]

**68. வந்தவா வித்தவத்தான் வாடா பிழுக்கையயா!**
**முந்த விவாக ஒருமூன்று — இந்த விசை**
**ஊர்க்கோ உனக்கோ உறமுறையார் தங்களுக்கோ**
**ஆர்க்கோபெண் கொண்டா யடா?**

[முதலிரண்டு சீர்கள் பிழையாகக் காணப்படுகின்றன. பிழுக்கை அடிமைவேலை செய்பவன். மூன்றுமுறை மணந்து கொண்ட நீ அவ்வளவில் அவர்களோடு வாழாதவன் மற்றும் ஒரு திருமணஞ்செய்தது எதற்காக எனப் பழித்துக்கூறப்பட்டது]

---

தோற்றுவாய்

சிவப்பிரகாசமாகிய பேரின்பத்தைத் தேனாக உரு வகம் செய்து, அதற்கும் உணவுத் தேனுக்கும் உள்ள வேற்றுமை கூறுவார்போல முத்தி யின்பத்தைச் சிறப் பித்துரைக்கின்றார் ஒரு மெய்யுணர்வாளர்.

[ நேரிசை வெண்பா ]

69. **உண்ணத் தெவிட்டா தொருகாலுங் கையகலா**
**தெண்ணத் தகப்படா தெந்நாளும் —வண்ணத்**
**தவப்பிரகா சத்தொளியாய்த் தான்மேவும் (தூய)**
**சிவப்பிரகா சத்தமுத்தித் தேன்.**

*உலகீர்! முறையாலியற்றும் தவப்பிரகாசத்தின் உள்ளொளியாகிப் பொருந்தி நிற்கும் தூய சிவப்பிரகாசமென்னும் முத்தி சாதனமாகிய தேனானது எந் நாளும் உண்ண உண்ணத் தெவிட்டாது, ஒருபோதும் நம்மைவிட்டு நீங்கிச்செல்லாது. (பற்றற்று உணர்ந்து துய்க்கலாமன்றி) அறிவால் ஆராயும் எண்ணத்திற்குள் அகப்படாது என்பதை அறிவீர்களாக.*

*[உண்ணத் தெவிட்டலும், குறைந்து மறைந்து தீர்ந்து விடுதலும் எண்ணிப்பார்க்க இயலுதலும் உடைய உலகத் தேனுக்கும் முத்தித்தேனுக்கும் உள்ள வேற்றுமை இவை ஆதலின் அத்தேனைப்பருகத் தவஞ்செய்க என்று குறிப்பால் உணர்த்துகின்றார். தெவிட்டல் = வெறுத்தல். கையகலுதல் = நீங்குதல். வண்ணம் = (ஈண்டு) முறைமை. சிவப்பிரகாசம் = அருட்சோதியாகிய முத்தி ]*

---

தோற்றுவாய்

*எழுச்சியின்றிச் சோர்ந்துள்ள ஒருவன் தன்னை வினவிய நண்பனுக்கு இவைபெற்றால் என் மனச்சோர்வு நீங்குமெனக் கூறியது.*

[ குறள் வெண்பா ]

70. **பாலாடு மூன்றும் பனைமூன்றும் உண்டானல்**
**வாடா திருக்கும் மனம்.**

நண்பனே! பாலைத்தரும் ஆடு மூன்றும் (கள்ளைத் தரும்) பனைமரம் மூன்றும் எனக்கு உரிமையாக உண்டாகுமானல் (இப்பொழுது கொண்டிருக்கும் சோர்வு நீங்கி) என்மனம் வாடாதிருக்கும்.

[பாலாடு,பனை இவற்றை மும்மூன்ருகக் கேட்டலின் முப்பாலாடு, முப்பனை என்ற சொற்களை வைத்துக் குறிப்புணர்த்தியதாகக்கொண்டு ஏற்ற பெற்றிப்பல பொருள் காணலாம்.]

---

தோற்றுவாய்

சோழன், பாண்டியன், சேரன் ஆகிய மூவேந்தர்களையும் ஒரு புலவர், மலைவளம், சோலைவளம் முதலிய காணவியலாமலும், விழா விளையாட்டு முதலிய நிகழ்த்த இயலாமலும் செய்யும் பெருமழைக்காலம் உங்களுக்குத் துன்பமாக இருக்குமன்ரூே என வினவியபோது அவர் மூவரும் தனித்தனியே தமது உள்ளக்கிடக்கையைக் கூறுவதாக அமைந்துள்ளன இப்பாடல்கள். இவற்றை பாடியதற்கு வேறு வரலாறுகளும் இருக்கலாம்; புலனுக வில்லை.

இப்பாட்டு, மழைநாள் நுமக்குத் துன்பந்தருமோ என வினவியபொழுது சோழன் கூறியது.

[நேரிசை வெண்பா]

**71. காந்தும் அகிற்புகையும் கத்தூரி யும்புழுகும்**
**சாந்தும் மிகநாறுந் தார்குழலும்—ஏந்துதனந்**
**தோளோடு தோளிறுக்குந் தோகையு முண்டாமேல்**
**நாளோ மழைநாள் நமக்கு?**

சிறிதே வெப்பமுடைய அகிற்புகையின் மணமும் கத்தூரியும் புழுகும் சந்தனத்தோடு (இயற்கையாகவே)

மிக மணக்கும் கூந்தலும் பொருந்தி, சாயாத தனத்தினளாய் என் தோளோடு தோள் இறுகத் தழுவும் தோகை போலும் ஒருத்தி வாய்க்கப்பெறின் அந்நாள் நமக்கு வருத்தம் செய்யும் மழைநாளாகுமோ? (ஆகாது, வேனிற்காலத்து விழா நாளாகும் என அறிக).

[தார்குழல் = மாலையணிந்த கூந்தல்—நெடிய கூந்தலுமாம். புழுகு = புனுகெனவழங்கும் மணப்பொருள். தோகை=பெண்.]

தோற்றுவாய்

அவ்வினவிற்குப் பாண்டியன் கூறியது.

[நேரிசை வெண்பா]

72. **பாவடுக்கு மெல்லணையும் பச்சைவட மும்புதிய**
**பூவெடுக்கும் மென்றேகைப் பூவையரும்**
**—நாவெடுக்க**
**ஒன்றே மொழியும் உயிர்த்தோழ னும்வருமேல்**
**நன்றே மழைநாள் நமக்கு.**

ஐவகையாகப் பரப்பி அடுக்கப்பெற்ற பஞ்சணையும் பசுமையான (மணம் நாறும்) மலர் மாலைகளும், புதிய மலர்களைத் தொடுத்துச் சூட்டும் மெல்லிய மயில்போலும் சாயலையுடைய பெண்டிரும் — நாவால் மொழிவதற்குள் குறிப்பறிந்து அவ் ஏவலைச் செய்யும் உயிரன்ன தோழனும் உடனிருக்கும் வாய்ப்புண்டானல் எத்தகைய மழை நாளும் (இன்பந் தருதலின்) நன்றேயாம்.

[பா=படுக்கையில் விரிக்கும் விரிப்பு—ஈண்டு பஞ்ச சயனத்தை உணர்த்திற்று. பச்சைவடம்=முத்து முதலிய மாலைகளும் ஆம். பூவையர்=அன்மொழித்தொகை. 'நாவெடுக்க ஒன்றே மொழிதல்" என்றது குறிப்பறிந் துதவுதலை]

தோற்றுவாய்

அவ்வினாவிற்குச் சேரன் கூறியது.

[நேரிசை வெண்பா]

**73. பொரிப்பும் நறுநெய்யும் போனகமும் தேனும்**
**பருப்பும் சருக்கரையும் பாலும்—விருப்பமுடன்**
**வாளோ டணையவிழி மங்கையும் உண்டானால்**
**நாளோ மழைநாள் நமக்கு.**

பொரித்தலமைந்த கறிகளும் நறிய நெய்யும் சுவை மிக்க உணவும் தேனும் பருப்பும் சருக்கரையும் பாலும் விருப்பமுடன் (படைத்தளித்துப் பேணும்) வாள்போன்ற ஒளிபொருந்திய கண்களையுடைய மங்கையும் வாய்க்கப் பெறின் நமக்கு மழைநாளோ அது? (இல்லை, வேனிற் காலத்து நிலா நாளாகும்).

[பொரிப்பு = தொழிலாகு பெயரால் பொரித்த கறிகளை உணர்த்திற்று; போனகம் = உணவு. இம் மூன்று பாக்களும் சிற்றின்ப நுகர்வைக் குறிப்பாற் சிறப்பிக்கின்றன.]

---

தோற்றுவாய்

இடைக்காலத்துத் தோன்றிய பிரபந்த வகைகளுள் பிள்ளைப்பாட்டு, பிள்ளைத்தமிழ் ஆயவற்றுள் ஊசல், கழங்கு, அம்மானை முதலிய உறுப்புக்களை அமைத்துப் பாடுதல் மரபாக விளங்குகின்றது. மணிவாசகப் பெருமானும் தாம் அருளிய திருவாசகத்துள் 'அம்மானை'ப் பாட்டுக்கள் பாடியுள்ளார். கலம்பகம் முதலாய பிரபந்தங்களுள் ஒன்றிரண்டு அம்மானைப் பாட்டுக்கள் உறுப்பாகவந்துள அம்மானைப்பாடலின் அமைப்பு, சிறுமியர்

சிலர் கூடி நவமணிகள் அல்லது கற்களைக் கையில் வைத்துக்கொண்டு ஒவ்வொன்றாக மேலே எறிந்து பிடிக்குங்கால் ஒன்றைக் கழித்தும் கூட்டியும் ஆடும்போது ஒரு சிறுமி ஒரு கருத்தைச் சொல்ல, மற்றவள் அக்கருத்தினில் ஓர் ஐயவினாவை எழுப்ப, ஒருத்தி அதற்கு விடை கூறுவதுபோலத் தரவு கொச்சகக் கலிப்பாவால் பாடப் பெறுவதாம். இப்பாடல்களில் உள்ள சிறப்பு ஐய வினாவிற்குக்கூறும் விடையில் சிலேடையும், குறிப்பும், சமத்காரமும் அமையச் செய்வதேயாம். சிலபோது நேர்விடையும் அமையும். ஆதலின் புலமைநலஞ் சான்றோர் தம் கவித்திறனையும், எடுத்துக்கொண்ட பொருள் திறனையும் விளக்க இப்பாடல் வகையைக் கையாண்டனர். அவ்வகையில் பின் வரும் சில அம்மானைப் பாடல்கள் அமைந்துள்ளன.

[ அம்மானை ]

இப்பாடல் சிவபெருமானின் திருமுடியில் விளங்கும் பாம்பினையும் பிறைநிலாவையும் பொருளாகக்கொண்டு வினாவிடை நிகழ்த்துகின்றது.

[ தரவு கொச்சகக்கலிப்பா ]

**74. என்னுக்குள் எண்ணெய்போல் எவ்வுயிர்க்கும் ஆனபிரான்**
**வள்ளல்திருச் செஞ்சடைமேல் வாழ்பாம்புண் டம்மானை;**
**வள்ளல்திருச் செஞ்சடைமேல் வாழ்பாம்புண் டாமாகில்**
**துள்ளிவரும் அம்புலியைத் தொடராதோ அம்மானை ?**
**தொடருமோ மயிலாடு துறைகண்டா லம்மானை.**

எள்ளுக்குள் எண்ணெய் எங்கும் பரந்திருப்பது போல எல்லா உயிர்களுள்ளும் பரந்து விளங்கும் பிரானாகிய வள்ளல் சிவபெருமானுடைய அழகிய சடையினிடத்தே வாழ்கின்ற நாகப்பாம்பு உண்டு. (என்று ஒருத்தி கூற) அவ்வாறு அவர் சடையின்கண் பாம்பு வாழுமென்றால் அங்கேயே இருந்து வளரும் நிலாவை (விழுங்க) அப்பாம்பு தொடராதோ? (என ஒருத்தி வினவ) மயிலாடு துறையைக் கண்டால் பாம்பு (அஞ்சியிருப்பதன்றித்) தொடர்ந்து பாயுமோ? பாயாது (என்றாள் ஒருத்தி).

[வள்ளல் = சிவபெருமான். 'மயிலாடுதுறை' மாயூரத்தின் பெயர். இறைவன் மயிலாடுதுறையிலிருப்பதைச் சமத்காரமாக வைத்து ஆடும் மயிலுக்கு முன் பாம்பு அஞ்சிநிற்பதாக மொழிந்த நயமே இப்பாட்டின் சிறப்பாகும். அம்மானை = முன்னிலைவிளி ஏற்ற பெயர். 'இஃது அம்மானாய்' என்றும் வரும்.]



தோற்றுவாய்

இப்பாடல் சிவகாமசுந்தரியின் கழுத்தழகையும் இறைவன் ஆடலையும் பொருளாக வைத்து வினவிடை நிகழ்த்தியது.

[ தரவு கொச்சகக்கலிப்பா ]

**75. தெண்டிரைசூழ் தில்லைச் சிவகாம சுந்தரியார்**
**கண்டமெலாம் ஞானக் கரும்புகாண் அம்மானை:**
**கண்டமெலாம் ஞானக் கரும்பதுவே யாமாகில்**
**அண்டர்பிரான் ஆலையிலே ஆடாரோ அம்மானை?**
**ஆடிப் புலியூர் அமர்ந்தனர்காண் அம்மானை.**

தெளிந்த கடலாற் சூழப்பெற்ற திருத்தில்லையிலே திகழும் சிவகாமசுந்தரி அம்மையின் கண்டமெலாம்

ஞானக்கரும்பு. (என உணர்வாயாக என ஒருத்தி கூற) அஃது கரும்பாகுமானல் அக் கரும்பினின்றும் சாறு எடுப்பதற்காக (அவள் கணவனாகிய) சிவபெருமான் ஆலையிலே வைத்து ஆடிப்பிழிய மாட்டாரோ? (என மற்றொருத்தி வினவ) புலியூரில் ஆடி ஆடி அமர்ந்திருப்பதைக் காண்பாயாக (என மற்றொருத்தி கூறினள்.)

[தெண் = தெளிவு. திரை— ஆகுபெயரால் கடலை உணர்த்திற்று (சிதம்பரத்திற்கு மிக அருகே முன்பு கடல் இருந்தது) ஞானக் கரும்பென்றது ஞான மொழி பேசுதலைக் கருதிற்று. அதனை வயற் கரும்பாக வைத்து ஆலையிலே ஆடாரோ என்றாள். ஆலை = கரும்பாலை. ஆடுதல் என்பதனை நடனமாடுதலாக வைத்துப் புலியூரில் ஆடியமர்ந்தனர் காண் என்றாள். இதுவே இப பாட்டின் சிறப்பாகும். புலியூர் = சிதம்பரத்திற்கு ஒரு பெயர்.]

---

தோற்றுவாய்

இப்பாடல் திருமாலையும், அவர் பள்ளிகொள்ளும் ஆதிசேடனையும் பொருளாகக்கொண்டு அம்மானையாகப் பாடப்பெற்றது.

[நரவு கொச்சகக் கலிப்பா]

**76. மண்டலமுண் டென்னரங்கர் மாருப் படுக்கையிடக்**
**கொண்டபாய் அஞ்சுவண்ணக் கோடிப்பா யம்மானை;**
**கொண்டபாய் அஞ்சுவண்ணக் கோடிப்பா யாமாகில்**
**மிண்டியபற் கோவையெலாம் மெத்தநஞ்ச தம்மானை**
**மெத்தநஞ்ச திப்போ விலைபெறுமோ அம்மானை?**

மண்ணுலகைப் பண்டு உண்டுகாட்டியவராகிய தென்னரங்கப்பெருமான் எப்பொழுதும் உறங்குவதற்கு

மாறுமல் இடுவதற்காகக் கொண்டபாய் ஐந்து வண்ண முடைய கோடிப்பாய்ஆம். (என ஒருத்திகூற) அஃது அஞ்சுவண்ணக் கோடிப்பாயானல் அதன் (ஓரங்களில்) நெருங்கிய பற்கோவை யாவும் நஞ்சதல்லவோ? (எனக் குறிப்பால் ஒருத்திவினவ) இதுபோது மிகவும் நைந்து விட்டதாதலால் விலைபெறுமோ? பெறுது. (என்றுள் ஒருத்தி)

[மண்டலம் = உலகம். யசோதையின் பொருட்டு உலகை உண்டுகாட்டியவர் திருமால் கோடிப்பாய் = புதியபாய். பற் கோவை =(பாம்பின் பல் வரிசையைக் குறிப்பால் உணர்த்திற்று) பாயின் மடித்த இருமருங்கிலும் உள்ளவற்றைப் பல் என்று கூறுதல் வழக்கு. நஞ்சது = (விடமுடையது) நைந்து தேய்ந்தது என்ற சமத்காரப் பொருள் தோன்ற நின்றது. கோடிப்பாய் நைந்து விட்டதே எனக் குறிப்பால் வினவினுள். அவளும் ஆம் இது மிகவும் நைந்து விட்டது அதனலென்ன விலைக்கு விற் பாரும் இல்லை, கேட்பாரும் இல்லை எனருள். நஞ்சது, நைந்தது என்ற சொற் சிலேடையமையப்பாடியது இப்பாட்டின் சிறப்பா கும்.]

---

தோற்றுவாய்

இப்பாட்டு புள்ளிருக்குவேளுர் இறைவனைச் சிறப் பிக்க, மதுரையில் அச்சிவபெருமான் புரிந்த திருவிளை யாடலொன்றைப் பொருளாகக்கொண்டு வினு விடை யாகப் பாடப்பெற்றது.

[தரவு கொச்சகக் கலிப்பா]

**77. பூங்கா வனஞ்சூழ்ந்த புள்ளிருக்கு வேளுரார்**
**பாங்கான தென்மதுரைப் பாணர்கா ணம்மானை:**
**பாங்கான தென்மதுரைப் பாணரே யாமாகில்**
**தாங்காமல் இழையெடுத்துத் தைப்பாரோ அம்மானை?**
**தையலுக்கு நல்ல சமர்த்தர்கா ணம்மானை.**

பூஞ்சோலைகள் சூழ்ந்து திகழும் புள்ளிருக்குவேளூர் இறைவன் சிறப்புடைய தென்மதுரைப்பதியில் பாண ராக விளங்கினார். (என ஒருத்தி கூற) அவர் தாம் பாண ராயின் நூல் எடுத்துத் தைக்குந் தொழில்புரிவாரோ? (என ஒருத்தி வினவ, மற்றொருத்தி) அவர் தையலுக்கு (உமாதேவிக்கு) மிக்க சமர்த்தர் (தக்ககணவர்) என்றறி வாயாக (என்றாள்).

[ புள்ளிருக்குவேளூர் = வைத்தீசுவரன், கோவிலின்பெயர். மதுரையிற் பாணராக வந்தது, பாணபத்திரர் பொருட்டு. (பாணருக்குத் தையற்றொழிலும் உண்டென்பது இதனால் தெரி கிறது) தையல்=பெண். (ஈண்டு உமையம்மையை உணர்த்தியது) 'தையல்' என்ற சொல்லைச் சிலேடையாக வைத்துப் பாடிய நயமே இப்பாடலின் சிறப்பு.]

---

தோற்றுவாய்

திருக்காளத்தி இறைவனின் பெயரையே பொரு ளாகக்கொண்டு அத்தலத்துப் புராண நிகழ்ச்சியை வைத்துப்பாடியது இப்பாட்டு.

[தரவு கொச்சகக் கலிப்பா]

78. **பொய்யறவே கண்ணப்பர் பூசித்துப் பேறுபெற்ற**
**ஐயர்திருக் காளத்தீ யப்பர்கா ணம்மானை :**
**ஐயர்திருக் காளத்தீ யப்பரே யாமாகில்**
**கைவிசிறி மாருக் கனையரோ அம்மானை?**
**கனையாரோ சிலந்தியுள்ளே கலந்தக்கா லம்மானை?**

பொய்மையறக் கண்ணப்பநாயனார் பூசனைசெய்து நாளாறிலே வீட்டின்பத்தையடைந்தமைக்குக் காரண ராக விளங்கும் இறைவர் திருக்காளத்தியப்பரேயாவார்.

(என ஒருத்தி கூற) அப்பெருமான் காளத்தியப்பர் என்றால் கையில் விசிறிகொண்டு எப்பொழுதும் வீசிக் கொள்ளும் களைப்புடையவரோ? (என ஒருத்தி வினவ) ஆம்; சிலந்தி உள்ளே கலந்து நிற்கும்போது களையா திருப்பாரோ? (என்றாள் மற்றொருத்தி).

[காளத்தி — திருக்காளத்தி என்னும் மலைத்தலம். இது சிலந்தியும் பாபும் யானையும் பூசித்துப் பேறுபெற்றமையால் வந்த பெயர். இதனைக் காளம்+தீ எனப்பிரித்து பெருந்தீ என்று பொருள் கொண்டு வினவினாள் (காளத்தீ=பெரிய வெப்பநோய் எனக் கொண்டதாகவும் ஆம்) வெப்பத்தால் வரும் களைப்பைப் போக்க விசிறியைக் கையில் மாறாது வைத்திருப்பாரோ என்றாள். 'சிலந்தி' திருக்காளத்தி இறைவனின் பாதங்களின் கீழ் இருக்க அதன்மேலே நிற்கும் வண்ணம் சீகாளத்தியில் உள்ள மூர்த்தி யமைந்துள்ளது. இதனைச் சிலந்தி என்னும் நோயாகச் சிலேடை செய்து அதனை யுடையார் களையாரோ என்றாள் — ஆதலின் 'களையாரோ' என்பதும் சிலேடையாக அமைந்தது. இதனுள் காளத்தி, சிலந்தி என்ற சொற்களைச் சிலேடையாக அமைத்துப் பாடியமையே சிறப்பாகும்]

---

தோற்றுவாய்

இறைவன் தாருகாவனத்து இருடிகளின் ஆணவத்தைப் போக்க வந்த நிகழ்ச்சியைப் பொருளாகக் கொண்டமைந்தது இப்பாடல.

[தரவு கொச்சகக் கலிப்பா]

**79. சுத்தர்தொழும் .... .... .... அம்மை பங்கரன்று**
**பத்தினியோர் இருடியர்தம் பண்பழித்தா ரம்மானை;**
**பத்தினியோர் இருடியர்தம் பண்பழித்தா ராமாகில்**
**கத்தரிவர் என்று கருதுவதேன் அம்மானை?**
**கருத்தில்மதம் அழித்தவரே கத்தரன்றே அம்மானை?**

தூய ஞானிகள் தொழுதுய்யும் உமையொரு கூற ராகிய இறைவர் அன்றொருகால் (தாருகாவனத்து) இருடியர், அவர் தம்பத்தினியோர் ஆயவர்களின் பண்புகளை அழியுமாறு செய்தார். (என்று ஒருத்தி கூற) பத்தினியோர், இருடியர்தம் பண்பழித்தவர் இவ் இறைவராயின் இவரைக் கர்த்தரென்று ஞானிகள் கருதுவதேன்? (என ஒருத்தி வினவ) தமதுகருத்தில் மதத்தை அழித்தவராகையால் கர்த்தரென்று கூறுகின்றார்கள் (என்றாள் மற்றொருத்தி).

[தாருகாவனத்து இருடிகள் இறைவனைத் தலைவனாகக் கொள்ளாமல் யாகாதி கருமங்களால் வீடெய்தலாம் என எண்ணிய ஆணவத்தையும், அவர்பத்தினியார் கற்பிற் சிறந்தவர் என்ற ஆணவத்தையும் இறைவன் பிட்சாடண உருத்தாங்கிச் சென்று அழித்தார் ஆதலின் பொதுவாகப் 'பண்பழிந்தார்' என்றார். கத்தர் (கர்த்தர்) தலைவர். கருதுபவர் தூயஞானிகள் என்றபடி. கருத்தில் மதம் என்றது சாடுவாக்கியமாக நின்று. இறைவன் தன் கருத்தில் காமமில்லாதவர் என்றும், இருடியர் தம் கருத்தில் கொண்ட ஆணவமாகிய மதத்தை அழித்தவர் என்றும் பொருள்பட நின்று இப்பாட்டிற்குச் சிறப்பளிக்கின்றது. 'கத்தரன்றோ' என்ற வினா கர்த்தரே எனப்பொருள்தந்து நின்றது.]



தோற்றுவாய்

தன்னால் சிறைசெய்யப்பெற்ற புலவர்களைச் சிறுமைப்படுத்த எண்ணி ஒட்டக்கூத்தர் அப்புலவர்களின் குறையைக் கூறி வினவியபோது, அவர்கள் கூறிய விடையாக அமைந்தது இப்பாடல். இஃது முன்னைய திரட்டுகளில் உள்ள பாடலுக்குப் பெரிதும் மாறுபட்டுளது.

[கட்டளைக் கலித்துறை]

80. கோக்கண்ட மன்னர் குரைகடல்
புக்கிலர்; கோகனகப்
பூக்கண்ட கொட்டியும் பூவா
தொழிந்தில; பூதலத்தே
காக்கொண்ட செங்கை கவிச்சக்ர
வர்த்தி கலைத்தமிழின்
பாக்கண் டொழிவார்க ளோகவி
பாடிய பாவலரே.

புலவர் ஏறே! உலகத்தில் வேந்தர் இருப்பதைக் கண்ட குறுநிலமன்னர் (தாம் வேந்தருக்கு ஒப்பாகேம் எனக்கருதி) ஆரவாரம் மிக்க கடலில் மூழ்கி இறந்து விடவில்லை. கயத்தில் தாமரைமலரைக் கண்ட கொட்டிப் பூக்கள் (தாம் தாமரைக்கு நிகராக மாட்டோம் எனக் கருதிப்) பூவாமல் ஒழிந்து போகவில்லை. எனவே, கற்பகச் சோலைபோல வழங்குஞ் செம்மைமிக்க கைகளையுடைய கவிச்சக்ரவர்த்தியாகிய தங்களின் கலைநிறைந்த இனிய தமிழ்ப்பாக்களைக் கண்ட பிற பாவலர்கள் (தம்முடைய பாக்கள் ஒட்டக்கூத்தர் பாக்களுக்கு நிகராகா எனக் கருதி) பாடாமல் ஒழிவார்களோ ? (மாட்டார்கள்).

[கோ=முடியுடைவேந்தரைச் சுட்டியது. கோகனகம்=தாமரை. கா=கற்பகக்கா. கொடையை உணர்த்தி நின்றது. கவிச்சக்கரவர்த்தி ஈண்டு ஒட்டக்கூத்தர். அவர் கவியின் சிறப்புத் தோன்றக் 'கலைத்தமிழின்பாக்கள்' என்றார்கள். தங்கள் நிலை தோன்றக் கவிபாடிய பாவலர் என்றார்கள். தங்களைக்காத்தருள வேண்டுமென்ற குறிப்புத்தோன்ற காக்கொண்ட செங்கை என்றநயம் பாராட்டத்தக்கது. கா=காத்தல். செம்மை=நேர்மை. இப்பாடம் பிற பிரதிகளில்இல்லை. இஃது வேற்றுப்பொருள்வைப்பணியை அங்கமாகக் கொண்ட எடுத்துக்காட்டுவமையணி.]

தோற்றுவாய்

தலைவனைப் பிரிந்திருக்கும் தலைவி துயிலப் பெருமையால் இராப்பொழுது மிக நீட்டித்ததாகக் கருதிக் கதிரவன் தோன்றாமைக்குப் பல காரணங்களை எண்ணி வருந்துவதாக அமைந்த அகத்துறைப் பாடல் இது. இதனுள் செங்கதிர் கருங்கதிராக மாறி எப்பொழுதும் இரவாகவே தோற்றுவிக்கின்றதோ எனத் தலைவி கொள்ளும் ஐயம் சுவையாக உளது.

[ அறுசீர் ஆசிரிய விருத்தம்]

**81. விரியோத நெடுங்கடலில் வீழ்ந்தானோ?**
**விரைந்துரகன் விழுங்கி னானோ?**
**எரியோடி மகவிறக்கு மெனமகவான்**
**முகில்மறைக்க ஏவி னானோ?**
**கரியோ?தன் திகிரியுஞ்செங் கதிரன்றோ**
**இருள்பரந்த கணக்கீ தென்னோ?**
**பெரியோர்கள் திருவுளங்கள் பேதித்தால்**
**எப்பொருளும் பேதி யாதோ?**

செங்கதிரோனின் சுடர்களெல்லாம் செம்மையான ஒளியுடையவனவன்றோ, பின்னர் ஒளி பரவாமல் உலகெங்கும் இருள் பரவிய கணக்கென்னவோ? ஒருகால் விரிந்த பெரிய ஆரவாரமிக்க கடலிலே சென்று வீழ்ந்து விட்டானோ? அன்றி இராகுவாகிய பாம்புதான் விழுங்கிவிட்டானோ? இன்றேல் நெருப்பிலே விழுந்து தன் மகன் இறந்து விடுவான் எனக்கருதி இந்திரன் தன் மேகங்களைவிட்டு மறைத்துவிட ஏவினானோ? அல்லது செங்கதிர்கள் மாறிக் கருங்கதிர்களாகவே ஆகிவிட்டனவோ? பெரியவர்கள் உள்ளம் மாறினால் உலகத்தில் எப்பொருள்தாம் தம் இயல்பு மாறாதிருக்கும்? மாறிவிடும்.

[உரகன் = பாம்பு (இராகு அல்லது கேது) அருச்சுனன் தன் மகன் அபிமன்னைக் கொன்ற செயத்ரதனை இன்று கதிரவன் மறையுமுன் கொல்லாவிடில் நெருப்பில் வீழ்ந்திறப்பேன் என்று சூளுரைத்து நெருப்புக்குழியைச் சுற்றி வந்தமையைத் தற்குறிப் பேற்றமாக வைத்து அருச்சுனன் தந்தையாகிய இந்திரன தன் மேகங்களை ஏவினனே என்றாள். இது பாரதக்கதை நிகழ்ச்சி. மகவான் = இந்திரன். கரியோ = கதிர்கள் கருமையாயினவோ என்றபடி. கணக்கு = அளவை. தலைவன் கூறியவண்ணம் தலைவியிடத்து வாராமையைக்கொண்டு பெரியோர்கள் உள்ளம் பேதித்தால் இயற்கையே மாறுபட்டுவிடும் என்றாள். இது ஒட்டணியின் பாற்படும். பேதித்தல் = தன்மை மாறுதல்.]

---

தோற்றுவாய்

திருநாகைக் காரோணராகிய இறைவனை இம்மை யின்பம் வேண்டி ஒருபுலவர் பாடுவது. இதனுள் செல்வ முடையாரை உலகத்தார் பழிப்பதுபோலப் பழிவாராத செல்வமுடையவனாகவேண்டும் என்று கூறுவார் போலப் பயனில் செல்வரை நயமாக எள்ளுவது புலனாகின்றது. நாகை = நாகப்பட்டினம்.

[ எண்சீர் ஆசிரிய விருத்தம் ]

**82. வெள்ளியால் பொற்கலத்தில் உண்டிருக்க வேணும்**
**மிகநாறும் சந்தனமும் குங்குமமும் வேணும்**
**பள்ளியால் மணம்புணரப் பாவையரும் வேணும்**
**பசும்பொன்னாற் கைக்கிரண்டு கனகவளை வேணும்**
**ஒள்ளியோர் திருநீறும் முகச்சாந்தும் வேணும்**
**உழையாமல் எப்பொழுதும் உண்டிருக்க வேணும்**
**கள்ளனிவன் என்னுமற் காத்தருள வேண்டும்**
**கடல்நாகைக் காரோணம் மேவியிருந் தீரே?**

கடல்சூழும் திருநாகைக் காரோணத்தில் விரும்பிக் கோயில் கொண்டெழுந்தியிருக்கும் இறைவா! பொன்னு லாகிய கலத்தில் வெள்ளியாலாகிய அகப்பையால் முகந்து (அறுசுவை உண்டியை) நாளும் உண்டு இருக்க விருப்பி வேண்டுகின்றேன்; மேலும் (பிறருக் கும் புலப்படும்வண்ணம் மிக்க மணம் வீசும் சந்தனமும் குங்குமமும் (பூசியிருக்க) வேண்டும். பள்ளிகொள்ளுந் தோறும் உடன் மணந்து கூடியின்புறத் தக்க பாவை போலும் மகளிரும் (பிறதுணைப் பொருள்களும்) வேண் டும் மாற்றுமிக்க பொன்னுல் இரு கைகளுக்கும் அணி கள் வேண்டும். உயர்ந்த தூயோர் அணிந்துகொள்ளும் திருநீறும் அதனோடு முகச்சாந்தும் வேண்டும். உடம்பை வருத்தி உழைக்காமல் எப்பொழுதும் (சுவை யான பொருள்களையே) உண்டு மகிழ வேண்டும். (இவற்றால் பிறர் என்னைக்) கள்ள வேடமிடுபவன் என்றோ, (பிறர் பொருளால்வாழும்) கள்வன் இவன் என்றோ கூறிப் பழிக்காமல் காத்தருளல் வேண்டும்.

[உடலுழைப்பின்றிப் பிறர் தேடியனவும், வஞ்சத்தால் ஈட் டியனவுமாகிய பொருளால் வாழும் செல்வரைக் குறித்து அவர் களை மறைமுகமாக எள்ளிக் கூறுகிறார் இப்புலவர். இஃது 'ஒள்ளியோர் திருநீறும் வேணும' என்றதனுல் தான் ஒள்ளி யேனல்லேன் என்பதனுல் புலப்படுத்தும் நயம் போற்றத்தக்கது. மேலும் உழையாமல் என்றதனுலும் கள்ளனிவன் என்னுமற் காத்தருள வேண்டும் என்பதனுலும் இவர் பொல்லாச் செல்வ ரைப் பழிக்கும் கருத்துப்புலனுகும.]

---

தோற்றுவாய்

தலைவியின் நாணத்தை மாற்றித் தன் வயப்படுத் தும் தலைவன் வண்டோச்சி மருங்கணைதலால் மெய் தொட்டுப் பயிலுவான் கூறியது. இப்பாடல் அகத் துறையைச் சேர்ந்தது.

[கட்டளைக் கலித்துறை]

83. தண்சாய லான மதிசூடுங்
கஞ்சுகர் சண்பைவெற்பிற்
கண்,சாயல் கூர்விழி மானனை
யார்க்குழற் காடுவிட்டுப்
பண்சாரப் பாடிய வண்டே
யுமது பதிக்குச்செல்வீர்!
வெண்சாரை தானல்ல வேயொடிந்
தாலிடை மேவுதற்கே?

குளிர்ச்சியும் மென்மையுமுடைய பிறைநிலாவை முடியிற்சூடும் கஞ்சுகராகிய சீகாழி இறைவனின் மலையிடத்தே வாழும் வண்டுகளே! மயிலன்னசாயலும் (வேல்போலும்) கூரிய விழியுமுடைய மானைப்போன்றவராகிய இத்தலைவியின் கூந்தற்காட்டினை மேவாமல், பண்விளங்கப்பாடும் நீர் உமது இருப்பிடம் செல்வீராக. ஏனெனின் மிக மெல்லிதாகிய இவர்தம் இடை (உமது பாரந்தாங்காமல்) ஒடியுமானால் மறுபடியும் ஒட்டிப் பொருந்துதற்கு அது வெண்சாரையல்லவே! அதனால் என்க.

[வெற்பின்கண் வண்டே எனவும், பாடும் வண்டே எனவும் இணைக்க. கஞ்சுகர்=கரியுரிவையாகிய சட்டையை அணிந்தவர். சீகாழிப் பெருமானுக்குச் சட்டைநாதர் என்பது பெயராகலின் அவ்வரலாறு தோன்றக் கஞ்சுகர் என்றான். கஞ்சுகம்=சட்டை. வெண்சாரை=வெண்கலம் போலும். இப்பாடல் புலமை நலஞ் சாரா ஒருவர் பாடியதாகலாம். நயமில்லை]

தோற்றுவாய்

அன்பு கனிந்த உள்ளத்தால் அடியவர் கொடுக்கும் அவிழாயினும் இறைவன் விரும்பியேற்றருள்வான்

என்பதனை, விளக்கச் சேந்தனார் என்னும் ஒரு அடியார் செயலைவைத்துப் பாடியதிப்பாடல். வரலாறு புலனாக வில்லை.

[ நேரிசை வெண்பா ]

**84. அவிழ்ந்த துணியில் அவிழ்ந்த அவிழை**
**அவிழ்ந்த மனத்தால் அவிழ்க்க—அவிழ்ந்தசடை**
**வேந்தனார்க் கின்னமுத மாயிற்றே மெய்யன்பின்**
**சேந்தனார் செய்யுஞ் செயல்.**

இழைகள் அவிழ்ந்து கந்தையான துணியிற் கட்டியிருந்த கட்டவிழ்ந்த அவிழை நெகிழ்ந்த உள்ளத்தால் எடுத்தளிக்க விரிந்த சடையை உடைய சிவபெருமானுக்கு அஃது இனிய உணவாக ஆயிற்று. அஃது உண்மையன்போடு சேந்தனால் செய்யும் செயலாக இருந்தமையால் என்க.

[துணி = ஆடை. அவிழ்ந்த துணி என்பதனால் சேந்தனார் வறுமை புலனாயிற்று. அவிழ்ந்த மனம் = பாசமாகிய கட்டவிழ்ந்த உள்ளமென்றுமாம். அவிழ்ந்தசடை என்றதனால் விரிசடைக்கடவுளாகிய சிவனென்பது புலனும். சேந்தன் = அடியாரின் பெயர். இதனுள் அவிழ்ந்த என்றசொல் ஐந்திடத்தில் வந்து சொற்பொருள் பின்வருநிலையணியாகச் சுவைபயத்தல் காண்க.]



தோற்றுவாய்

சீவல்லப பாண்டியன்மீது மையலுற்ற தலைவி ஒருத்தி அவனோடு கூட்டம் பெறாமையால் மயங்கிக் கூறியதாகக் காணப்படுகிறது இப்பாடல். பாட்டமைப்புச் செவ்விதாக இல்லை.

[ நேரிசை வெண்பா ]

**85. போனாள் வருநாளோ போம்முன்னா ளோகலவி**
**தானான நாளோ தனிநாளோ—மீனவா**
**தென்னா மதுரைவரு சீவலமா றாகலவிக்**
**கெந்நா ளினிதான நாள்?**

என் ஆவி பிரிந்து போம்நாள் வரும்நாளோ? அவ்வாறு போதற்கு முன் நாளோ? கலவிதான் ஆன நாளோ? மீனக்கொடியை உடையவனே! தென்னனே! மதுரையில் விளங்கும் சீவலமாறனாகிய பாண்டியனே! (யான் உன்னோடு கூடிமகிழும்) கலவிக்கு இனிதான நாள் எந்நாள்? கூறுக.

[முதலீரடிகளும் செவ்வையாக இல்லை. போம் நாள் என்பது எதுகை நோக்கிப் போனாள் என நின்றதாக வைத்து ஒருவாறு பொருள் கொள்ளப்பட்டது. இப்பாடல் பெருந்திணையின் பாற்படும்.]



தோற்றுவாய்

விட்டலேச்சுரச் சோழகன் என்பவன் பாண்டிய மன்னன் ஒருவன் அரியணைக்குத் தீங்குவந்தபோது காத்தளித்தசெயலைப் பாராட்டிப் பேசுகின்றது இப் பாட்டு வரலாறு தெரியவில்லை.

[கட்டளைக் கலித்துறை]

**86. சிலையிட்ட செங்கை யிராமன்**
**தனக்கிடர் சேர்ந்தவந்நாள்**
**தலையிட்டு மாருதி காத்தது**
**போலச் சகந்தனிலே**

**கலையிட்ட செந்தமிழ்ப் பாண்டிய**
**ஞதனங் காத்துநன்ருய்**
**நிலையிட்ட ளன்விட்ட லேச்சுரச்**
**சோழக நீண்முகிலே.**

வில்லேந்திய சிவந்த கையை உடைய இராமபிரானுக்கு அரக்கர்களால் இடையூறு நேர்ந்தபொழுது அந்நாள் தான்முன் வந்து மாருதியாகிய அனுமன் காவல் செய்து துணைநின்று காத்தமைபோல, இவ்வுலகிற் கலைகள் எல்லாம் தன்பாற்கொண்ட செந்தமிழ்க்குரிய பாண்டிய மன்னனின் அரியணைக்குப் பகைவர்களால் ஊறுவந்தபோது தான் தலையிட்டு நன்மையுறக் காத்து நிலைபெறச் செய்தனன். (யார் எனின்) விட்டலேச்சுரச் சோழகன் என்னும் மழை முகிலை ஒப்பவன்.

[பிராட்டியைத் தேடிக்கண்டும்—சஞ்சீவிமலையைக்கொணர்ந்தும் பிறவாறும் மாருதி காத்தமையை உட்கொண்டு தலையிட்டுக் காத்தான் என்ருர். 'கலையிட்ட' என்பதைப் பாண்டியனேடும் கூட்டிப் பொருள்காணலாம். ஆதனம்=ஆசனம். ஈண்டுச் சிம்மாசனத்தை உணர்த்தி நின்றது. "விட்டலேச்சுரன்" என்ற பெயரால் இப்பெருமகன் மராட்டிய வமிசத்தினன் என்றும், 'சோழகன்' என்றதனல் சோழமன்னனல் சிறப்புப்பெற்ருே அல்லது சோழனை வென்ருே பாண்டியற்கு நட்புப் பூண்டொழுகிய குறுநில மன்னன் என்றும் ஊகிக்கலாம். 'நீண்முகில்' என்றதனல் சிறந்த வள்ளன்மையுடையவன் என்பது புலனுகிறது, வரலாறு புலப்படவில்லை.]

---

தோற்றுவாய்

காமுகன் ஒருவன் தன்னை வஞ்சித்துக் கூடியபின் தனக்கு யாதொரு பொருளும் கொடாமல் பிரிந்தான் என ஒரு பரத்தை அலமந்து கூறுவதாக அமைந்

துள்ளதிப்பாடல். இது தமிழ் மரபிற்கு முரணுயினும் இப்போக்கிற் சில தனிப்பாடல்கள் காணப்படுகின்றன. செயல் கைக்கிளையாகவும், கூற்றுப் பெருந்திணையாக வும் அடங்கும். "மரம்போல்வர் மக்கட் பண்பிலா தவர்" என்பதற்கேற்ப இக்காமுகனை மரமாகவும் செடியாகவும் வைத்து வசைமொழி கூறுகின்ருள் இப்பரத்தை.

[கட்டளைக் கலித்துறை]

87. **தணக்கே முடமுருக் கேயெருக்**
**கேபுழுத் (தார்க்குசிற்றம்பல)**
**வணக்கொல்லை யேமஞ்ச ளேகட்டை**
**(யேகொய்த) வாழைக்கன்றே**
**குணக்கேட லுங்குட வாசல்வென்**
**ருன்வரைக் கூடியபின்**
**பிணக்கே விளைத்தரைக் காசுந்கொ**
**டாமற் பிரிந்தனனே!**

குடவாசற் போரிலே வென்றிகொண்ட மன்னவனுக்குரிய மலையிடத்தே என்னை வஞ்சித்துக் கூடிய பின் என்னோடு பிணக்கேவிளைத்து அரைக்காசாயினும் கொடாமல் பிரிந்தான், என்னே! குணக்கேடனுகிய அவன், மகன் அல்லன். நுணுமரமேயாம். மேலும் முடமுருக்கமரமே, எருக்கஞ்செடியே, புழுத்த (பலாவே) காடே, வறுங்கொல்லையே, கட்டையே, இலைகொய்த வாழைக்கன்றே ஆம் எனச் சொல்வேன்.

[முதலடி இறுதிச்சீர் ஏட்டில் இவ்வாறே உளது. திருத்த இயலவில்லை. இரண்டாமடி நான்காவது சீர் ஏட்டில் இல்லை. பொருள்கருதிச் சேர்க்கப்பெற்றது. குடவாசல் வென்ற மன்னன் யரர் என்பது விளங்கவில்லை.]

தோற்றுவாய்

திருமாலிடம் மையல்கொண்ட தலைவி ஒருத்தியின் நிலையைக் கண்டார்கூறியதாக அமைந்துள்ளதிப்பாடல், இதனைப் பாடாண்டிணைக் காமப்பகுதியில் அடக்குவார் இலக்கணத்தார்.

[ நேரிசை வெண்பா ]

**88. கேசவா! என்றுனாங் கேசிரித்தாள் சந்தனத்தைப்**
**'பூசவா' என்றே புலம்பினாள் — நேசத்(து)**
**அரிகரிஎன் றாள்மாறன் அம்புதைத்த புண்ணைப்**
**பரிகரியென் றாள்தாயைப் பார்த்து.**

மிகவும் இரங்கத்தக்கவளாகிய இம்மகள் தன்னிலை மறந்து கேசவனே! என்றரற்றினாள். அப்பொழுதே சிரித்தாள், பின் சந்தனத்தை என்மீது பூசவா என்றே புலம்பினாள். மிக்க நேசத்தாலே அரி ஹரி என்றாள். பின்னர் தாயைப்பார்த்து மாறன் தன் மலர் அம்புகளால் துளைத்த என் மேனியிற்பட்ட புண்களை மருந்திட்டுப் போக்குவாயாக என்றாள். அந்தோ இவள்நிலை வருந்தத்தக்கதே.

[கேசவன் = திருமால் — அப்பெயருடைய தலைவனுமாம். அரி அரி (ஹரி ஹரி) எதுகை நோக்கிக் 'கரி' என நின்றது. பரிகரித்தல் = துயர்தீர்த்தல்.]

---

தோற்றுவாய்

'கடைமொழி மாற்று' என்னும் சொல்லணி அமையத் தேவர் சிலரின் செயல்களைக் குறித்துப் பாடியதிப் பாடல். பொருள் வெளிப்படை.

[கட்டளைக் கலித்துறை]

89. ஈசன். கடலடைந் தான்அரி.
யோட்டில் இரந்துதின் ருன்
வீசும் புகழாளன், வெண்ணெயுண்
டான்விறல் வேங்கடவன்,
தேசம் பலத்தில் நடித்தான்
சிவன், பன்றி யாய்ப்பிறந்தான்
காசாம்பு மேனிவண் ணன், எரித்
தான்சிலைக் காமனையே!

[இப்பாடலின் இறுதியடியில் உள்ள எரித்தான் சிலைக் காமனையே என்பதை முதலாகவைத்துத் தொடங்கினால் 'காமனை எரித்தான் சிவன், கடலடைந்தான் அரி' என அவ்வக்கடவுளரின் பெயர்களோடு அவரவர் செயல்களும் ஒன்றிவரும். இஃதோர் சொல்லணி—புகழாளன என்றது சிவபெருமானை. தேசு + அம்பலம் = ஒளி பொருந்திய திருச்சிற்றம்பலம். காயாம்பூ என்பது எதுகை நோக்கிப் போலியாய் நின்றது. வரலாறுகளை அவ்வப் புராணத்துட் காண்க.]

---

தோற்றுவாய்

இறைவனைத் திருக்கோயிலிடத்துச் சென்று வலம் வந்து வணங்கி வழிபட வேண்டும் என்பதை மறுப்பவர் போலத் தில்லை நடராசப் பெருமானின் அட்டமூர்த்தமாகிய திருவடிவையும், பரத்துவத்தையும் புலப்படுத்துகின்றார் ஒரு சான்றோர்.

[எண்சீர் விருத்தம்]

90. இலங்கிடும் இருசுடர் நின்திரு நயனம்
ஈறிலை அடியிலை எண்டிசை திண்டோள்
நிலந்திரு அடியிணை நீள்கடல் ஆடை
நீபருகும்புனல், உள்ளுறு செந்தீ

**கலந்தெழு மாருதம் நாசியிற் காற்று**
**கடுவெளி யெல்லாம் திருவுரு வானால்**
**வலஞ்செய்வ தெங்கே? வணங்குவ தெங்கே?**
**மாலயா னறியா மன்று ளாடியே!**

தேடிக் காணமுயன்ற திருமாலும் நான்முகனும் கண்டறிய ஒண்ணுதவனாய்த் திருச்சிற்றம்பலத்துள் ஆடியருளும் இறைவனே! விளங்கி ஒளிரும கதிரவனும் தண்மதியும் உன் சிறந்த கண்கள், உன் தோற்றத்திற்கு முடிவும் இல்லை முதலும் இல்லை, பரந்த எட்டுத் திசைகளும் உனக்குத் தோள்கள், திருவடிகளோ அகன்ற இந்நில உலகம், நீண்ட கடல்களே உனக்கு ஆடை, அவையே நீ பருகும் புனல், உள்ளே கனிந்து வெப்பத்தோடு கலந்து வீசும் காற்று மண்டலமே நீ உன் மூக்கினுல் விடும் மூச்சுக்காற்று, பெரிய அகண்ட ஆகாயமே நின் திருவடிவம் என்ருல், அடியேனுகிய யான் எவ்வாறு உன்னை வலம் வருவேன்? எவ்வாறு வணங்குவேன்? அறிவித்தருள்வாயாக.

[ இறைவன் ஐம்பெரும்பூதம், இருசுடர், ஆன்மா என்னும் எண்பொருளாய் உள்ளான் என்பது சைவசமய உண்மையாதலின் இவ்வாறு வினவினுர். எண் குணத்தானுயினும் ஆதியந்தமில்லான் என்பதை ஈறிலை அடியிலை என்பதனுற் சுட்டினுர். எனினும் அன்பர்கட்கு அருள்வான் வேண்டி மன்றுளாடியாய் விளங்குகின்ருன் என்றும் குறிப்பாற் காட்டினுர். ஆணவ மலமுற்ருர்க்கு அடையவும் காணவும் இயலாவென்பதனை மாலயனறியா என்றுணர்த்திஞர்—பிறநயங்களையும் ஓர்ந்துணர்க. நயனம்=கண்கள். தீயோடு கலந்து எழுங் காற்று எனபதனுல் பிராணவாயுவை உணர்த்திய சிறப்பு அறியத்தக்கது. ]

தோற்றுவாய்

இறைவன் அந்நாள் கடலகத்தெழுந்த கடுநஞ்சாகிய ஆலகாலவிடத்தை உண்டதனாலன்றோ மூவர்களும் தேவர்களும் பிழைத்து இன்றும் உள்ளார்கள் என்று விளக்கவந்தது இப் பாடல்.

[ நேரிசை வெண்பா ]

91. மாலெங்கே கஞ்சனெங்கே வானவரெங் கேமறைகள்
நாலெங்கே இந்திரர்பொன் னாடெங்கே—சாலவே
ஆலங் குடியாக ஆழ்கடலி லேயெழுந்த
ஆலங் குடியாத அன்று.

கைலைநாதனாகிய இறைவன் ஆலங்குடியாகிய பதியிலே எழுந்தருளியிருந்து, கொடுமை மிகத் தோன்றிய ஆலகாலவிடத்தைக்குடித்துக் கண்டத்திலே தேக்கிவைக்காத அந்நாளிலே (வைகுந்தவாசனாகிய) திருமாலெங்கே? தாமரையில் வீற்றிருக்கும் பிரமனெங்கே? இந்திரன் முதலாகிய தேவர்கள் எங்கே? (எல்லாவற்றிற்கும் மூலம் எனப்படும்) நான்கு வேதங்களும் எங்கே? (இறவாதவாழ்வுதரும்) தேவலோகமாகிய அழகாபுரி எங்கே? (அன்றிருந்திருப்பின் ஆலகாலத்தை இவர்கள் அடக்கியிருக்கலாமே.) இப்பொழுது தேவர்களாக இருக்கிறார்கள்.

[இறைவன் ஆலகாலவிடத்தைக் குடித்தமையால் திருமால் முதலிய தேவர்கள் நிலைபெற்றனர் என்ற கருத்தினை வற்புறுத்தவந்த இப்புலவர் ஆலங்குடியாத அன்று இவர்கள் எங்கே எங்கே என்றார். ஏனெனின் இன்று பேராற்றல் உடையவர்களாகக் கூறப்படும் இவர்கள் விடத்தை அன்று அடக்கியிருக்கலாமே என்றபடி. இதனால் சிவனை முதற்கடவுள் என்று குறிப்பாற்சுட்டினார். மால்=திருமால், கஞ்சன்=பிரமன் ஆலங்குடி=ஓரூர், ஆலம்=ஆலகாலவிடம். இப்பாடலைக் காளமேகப்புலவர்

"ஆலங் குடியானை ஆலால முண்டானை
ஆலங் குடியானென் றூர்சொன்னார் — ஆலங்
குடியானே யாயிற் குவலயத்தோ ரெல்லாம்
மடியாரோ மண்மீதி லே"

என வேறு அணிநயம படப் பாடியுள்ளார். இதன்நயத்தையும் ஓர்ந்துணர்க.

---

தோற்றுவாய்

மண் முதலாகிய மூவகைப் பாசத்தினின்றும் மனத்தை மாற்றுவதற்குரிய துன்பத்தை எண்ணி, எளிமையாகப் பாசநீக்கம் அருளவேண்டுமெனக் குறிப்பாக இறைவனை வேண்டுகிறார் இப்பாடலாசிரியர்.

[ நேரிசை வெண்பா ]

92. **அனைத்துயிர்க்கும் பாசம் அறுத்துமுத்தி கூட்ட**
**மனத்துயரம் செய்தல் மருந்தோ?—மனத்துயரம்**
**செய்யாமற் நீர்மருந்து சேர்க்க அறிந்திலையோ**
**ஐயாஎம் சொக்கநா தா!**

எம்முடைய ஐயனாகிய சொக்கநாதப்பெருமானே! 'எல்லா உயிர்களுக்கும் அவற்றின் பாசங்களை நீக்கி வீட்டின்பமாகிய முத்தியினை அடைவிப்பதற்கு மருந்து மனத்துன்பமுறுமாறு செய்வதுதானோ? மனத்துயரம் அடையாமல் பாசம் நீங்குவதற்கு உரிய மருந்தைச் சேர்த்தருள நீ அறிந்திலையோ?

[மண்ணாசை, பெண்ணாசை, பொன்னாசையாகிய இம்மூன்றையும ஈண்டு பாசம் என்றதாகக்கொள்க — அவற்றை விடுதற்குரிய துன்பத்தையே மனத்துயரம் என்றார். எல்லாம் வல்லவனாகிய இறைவன், மேலும் வைத்தியநாதனாகவும் விளங்குகின்றான் என்பதனைக்கருதித் "தீர்மருந்து சேர்க்க அறிந்திலையோ" என்றார்].

---

தோற்றுவாய்

எண்ணெய்பூசி தலைமுழுகுதற்குரியநாள் கூறுவார், ஏழு கிழமைகளுள் இன்னின்னநாள் இன்னின்ன பயனைத் தருமென்கிறார்.

[ அறுசீர் ஆசிரிய விருத்தம் ]

93. அருக்கன் நல்ல வாழ்வகற்றும்
அணியார் திங்கள் பொருள் கூட்டும்
திருக்கண் செவ்வாய் உயிர்போக்கும்
சீரார் புதனம் மதியுண்டாம்
கருத்தை யழிக்கும் வியாழனுமே
கண்ணார் வெள்ளி கடனாக்கும்
பெருக்க முண்டாம் சனி யிந்நாள்
பெரியோர் முழுகும் பெற்றியதே.

தைலத்தைப் பூசிக்கொண்டு முழுகுங்கால், முழுகும் நாள் ஞாயிற்றுக்கிழமை எனின் நல்வாழ்வை நீக்கிவிடும். அழகிய திங்கட்கிழமை பொருள்கூட்டும், குற்றம்சேரும். செவ்வாய்க்கிழமை (உடலை நலியச்செய்து) உயிரைத் தேய்க்கும். சிறப்புடைய புதன்கிழமை அறிவை உண்டாக்கும். வியாழக்கிழமை சிந்தனையை அழித்துவிடும். இடம்நிறைந்த வெள்ளிக்கிழமை கடனாளியாக்கும். சனிக்கிழமையோ எனின் எல்லாவளமும் பெருகச்செய்யும் ஆதலின் இச்சனிக்கிழமையே பெரியோர் முழுகும் தன்மை வாய்ந்த சிறப்புடையதாம்.

[ அருக்கன்=ஞாயிறு. திருக்கண் — திருக்கு+அண் எனப் பிரிந்து குற்றமணுகும் எனப்பொருள் தந்தது. கருத்து — நினைவும் ஆம். கண்ணார் — கண்=இடம். பெற்றி=இயல்பு. இம்முறை மருத்துவ நூலார்க்கும் ஒப்புடையதே. ]

தோற்றுவாய்

ஒருசெயலை முடியும்வகை எண்ணித் தொடங்குங் கால் இன்னின்னகிழமை இந்த இந்தப் பயனைத் தரும் எனச் செயல் மேற்கொள்ளும் நாள்பற்றிக் கூறுகின் றது இப்பாட்டு

[ நேரிசை வெண்பா ]

94. ஆதிதடை யுண்டாம் அருந்திங்கள் ஊணுண்டாம்
சோதிதரும் செவ்வாய் சுரமுண்டாம் — மேதினியில்
புந்திதனிற் கல்வியுண்டாம் பொன்னாள் கலையுண்டாம்
இந்துமணம் காரி வினை.

உலகில் ஒருவர் ஒரு செயலை மேற்கொண்டு தொடங் கும்நாள் ஞாயிற்றுக் கிழமையாயின் தடையுண்டாகும். அருமை வாய்ந்த திங்கட்கிழமை உணவு உண்டாம் ஒளி பொருந்திய செவ்வாய்க்கிழமை வெப்பமுண்டாம். புதன்கிழமையிற் கல்வியுண்டாம். பொன்னாளாகிய வியா ழக்கிழமை கலை (ஞானம்) உண்டாம் வெள்ளிக்கிழமை மணம் உண்டாம். சனிக்கிழமை வினையாகும்.

[ ஆதி = ஞாயிறு. ஊண் = உணவு, புந்தி = புதன். பொன் = வியாழன்: வெள்ளிக்கிழமை வரவேண்டிய இடத்தில் 'இந்து' என்று பாடம் உளது: 'இந்து' எனபது சந்திரனின் பெயர் எனவே இவ்விடத்திற் பாடம தவறாக உளது. காரி = சனி. வினை என்றது மேலும் அச்செயல் நீளும் என்றபடி. ]



தோற்றுவாய்

சிவலிங்கவழிபாட்டின் சிறப்புக்கூறுவார் ஒருபக லின் முப்போதுள் இவ்விப்பொழுது தொழுதேத்து வாருக்கு இன்னின்ன பயனுண்டாம் என்கின்றார் இப் புலவர்.

[ நேரிசை வெண்பா ]

**95. காலைதொழ உற்றவினைக் கட்டறுக்கும், கட்டுச்சி**
**வேலை தொழப்பிறப்பின் வெவ்வினைபோம்-மாலைதனில்**
**வந்து சிவலிங்கம் வந்தித்தால் ஏழ்பிறப்பின்**
**வெந்துயரம் எல்லாம் விடும்.**

பரமனின் அருவுருவாகி விளங்கும் சிவலிங்கத்தைக் காலைப்போதில் (மனமொழி மெய்களால் வணங்கித்) தொழ, பொருந்திய தீவினைகளாகிய கட்டினை அறுக்கும். நண்பகற் போதிற் றொழ இப்பிறப்பிற்செய்த கொடு வினைகளின் துன்பமெலாம் போக்கும். மாலைப்போதில் வந்து தொழுது வந்தனைசெய்தால் ஏழ்பிறப்பினும் தொடரும் கொடுந் துயரமெலாம் விடுவிக்கும்.

[ தொழுதலும் வந்தித்தலும் ஆகிய செயல்கள் கட்டறுக் கும் போக்கும் விடுவிக்கும் என்க. வினைக்கட்டு = பாசபந்தம்.]

---

தோற்றுவாய்

உலகத்தில் ஒருவன் ஓர் அரசனால் சிறப்புப்பெறுவதும் மக்களால் புகழப்பெறுவதும் அவ்அரசனால் ஒறுக்கப்பெறுவதும் ஆயஇவற்றிற்குக்காரணம் அரசன் செயலல்ல, யாவும் வகுத்தான் வகுத்தவழியே நிகழும் என்கிறது இப்பாட்டு.

[பதினான்குசீர் ஆசிரிய விருத்தம்]

**96. அரசனால் ஒருவர்க் கூர்பரி சிவிகை**
**அளிப்பதும் அவன்செயல் அல்ல**
**அளித்தஊர் பரிவிழ மாற்றிலங் கவனை**
**அடிப்பதும் அவன்செய லல்ல**

விரையவே ஒருவன் செய்தகுற் றத்தால்
வெட்டுவ தவன்செய லல்ல
வெட்டுகென் றளவில் ஒருவன்மன் ருடி
விடுப்பதும் அவன்செய லல்ல
திரிபுரி சடையராய் முற்பதத் தினிற்ரும்
செய்திடு புண்ணிய பாவம்
திருவுளத் தடைய இருவகைப் பயனும்
செகத்தர சனைகொடு செய்யும்
வருவதிங் கவனுல் அரசனு லன்று
வகுத்தநா ளவரிடத் திருந்து
வாட்டுவன் சிவனே சிவனரு ளெண்ணுர்
மன்னரை நோக்கிமாய் குவரே.

ஒருவருக்கு ஊர்ந்துசெல்லப்பரியும் இருந்து செல்லச் சிவிகையும் ஓர் அரசனல் அளிக்கப்பெறுவது அவ்வரசன் செயல்அன்று. அவ்வாறு அளிக்கப்பெற்ற ஊர்ந்துசெல்லும் பரியோடு அவன்விழும்படி வழியிலே பறித்து அவனை அடிப்பதும் ஒருவன் செயலன்று. ஒருவன்செய்த குற்றங்காரணமாக அவனை வெட்டிக்கொல்லுமாறு அரசன் கூறுவதும் அவ்வரசன் செயலன்று. அவ்வாறு அரசன்கூறிய அளவில் ஒருவன் அரசனிடத்து மன்ருடி அவன் குற்றம் செய்யாதவன் எனக் காட்டி உயிரோடு விடுவிப்பதும் ஒருவன்செயலன்று. திரிந்தசடைமுடியோடு முற்பிறவிகளில் செய்த புண்ணியத் தவமும் அவ்வாறு செய்யாத பாவமும் ஆகிய இருவினைகளும் இறைவனின் திருவுளத்திலே எண்ணப் பெற்றுப் புண்ணியத்திற்கேற்ப நற்பயனும் பாவத்திற்கேற்பத் தீப்பயனும் இவ்வுலகத்தில் அரசன் மூலமாக அத்திருவருள் செய்விக்கும். எனவே ஒருவருக்கு இன்

பம் வருவதும் துன்பம் வருவதும் அரசனாலும் பிறமக்க ளாலும் அன்று, ஒருவர் செய்த இருவினைகளை வகுத்து அவற்றைத் துய்க்க வேண்டிய அவ்வக்காலத்தில் அவ் வவரிடத்திலே இருந்து வாட்டுபவன் சிவபெருமானே யாவான், இவ்வாறு யாவும் சிவன்செயலே எனச் சிந் தித்துணரமாட்டாதவர்கள் மன்னரையும் மக்களையும் செய்பவர்களாகக்கருதி மடிவார்கள்.

[ ஊர்பரி = ஊர்ந்து செலுத்தும் குதிரை. வினைத்தொகை. இனி ஊர் பரி சிவிகை என்பதனை உம்மைத்தொகையாகக் கொண்டு ஊர்களும், குதிரையும், சிவிகையும் எனவுமகொள்ள லாம். வெட்டுக என்றளவில் என்பது வெட்டுகென்றளவில் என நின்றது. 'திரிபுரிசடையராய்' என்பது தவவேடத்தைக் குறித் தது. வகுத்தநாள் என்றது அடையவேண்டிய பொழுது என்றபடி. ]



தோற்றுவாய்

தத்துவ ஆராய்ச்சி, மந்திர ஆராய்ச்சி முதலிய ஞான நூலாராய்ச்சிகளை ஆசிரிய மாணவர் உரையாடல் உருவத்தில் மறைவாகச் சொல்லும் நூல்கள் தமிழ் மொழியில் பலவுள. சித்தர் பாடல்களும் – திருமூலர் திருமந்திரத்துள் பலபகுதிகளும் அவ்வாறமைந்துள்ள நூல்களேயாம். இம்முறையில் மருந்து, காயகற்பம், இரசவாதம், யோகம் முதலிய துறைகளில் அமைந்த நூல்களும் உள. அவற்றின் பொருளை ஞானசிரியரிடத்து இருந்து அனுபவ வாயிலாகவும் உபதேசமுறையாலும் தெரிந்துகொள்ளல் வேண்டும். சொல்லுக்கு இலக்கண முறையால் அமைந்த பொருளைத்தாராமல் குறிப்புப் பொருளையே தருவன அத்தகு நூல்கள். இவற்றைத் தொல்காப்பியம், மந்திர நூல் வகை என்று கூறி "நிறை

மொழி மாந்தர் ஆணையிற்கிளந்த மறைமொழிதானே மந்திரம் என்ப" என அவற்றின் இயல்பையும் விளக்கி இருக்கிறது. அத்தகு முறையில் தெய்வப் படிமங்களின் அமைப்பில் விளங்குந் தத்துவத்தையும், வரிவடிவாக உள்ள மந்திர எழுத்துகளின் தத்துவத்தையும் வினு விடை முறையில் விளக்க எழுந்த பாடல்களுள் பின் வரும் இரண்டு பாடல்களும் அடங்கும். அவற்றின் பொருள் தெளிந்தார்க்கே விளங்குமாகலில் ஞானிகள் வாயிலாக உணர்தல் வேண்டும். இப்பாடல்களுள் முதற்பாட்டு வினுவாகவும் அடுத்த பாட்டு விடையாகவும் அமைந்துள்ளமை காணலாம். இவை எந்த நூலின் பகுதிஎனப் புலனுகவில்லை.

[எண்சீர் ஆசிரிய விருத்தம்]

97. நாராசம் பிடித்ததற்குப் பொருளைச் சொல்லு
நன்றுநேர் இடதுகையி லோலை சொல்லு
ஓராமல் ஊன்றினதன் உண்மை சொல்லு
ஓட்டிமுறித் தெழுதியதன் உருவைச் சொல்லு
நேராக நீண்டெழுத்தின் பொருளைச் சொல்லு
நிச்சயமாய் நின்றெழுத்தின் நேரைச்சொல்லு
தாராக நின்றெழுத்தின் தகைமை சொல்லு
தரித்துநின்ற வரிதனையே சாற்றிடாயே?

[இப்பாட்டு, இரண்டு கைகளோடு ஓர் உருவத்தை வரைந்து ஒரு கையில் நாராசம் ஏந்தி அதனை ஊன்றியிருப்பதுபோல அமைத்து, மற்ருெருகையில் ஓலையை அமைத்து, அவ்வடிவத்தைச்சுற்றி வளைத்து ஒரு கோடிட்டு, அதன் மருங்கிலே நேரே நீண்ட எழுத்தொன்றும் அதன்மேல் ஒரு எழுத்தும் எழுதி இவற்றை இருபக்கமும் அடைக்கும் தொங்குமாலை போல சில வரிகளையும், அடியில் பீடம் போல ஒரு வரியும் எழுதியமைத்

நூன்ற சக்கரத்தின் உண்மைப் பொருளை வினவும் முறையில் பாடப்பெற்றுள்ளமை காண்க.]

---

[ எண்சீர் ஆசிரிய விருத்தம் ]

98. நாராசம் பிடித்தகைதான் ஞானமூர்த்தி
நன்றுநேர் இடதுகையில் ஓலை சத்தி
ஓராமல் ஊன்றினதே உண்மை ஞானம்
ஒட்டிமுறித் தெழுதியதோர் வடிவு யோனி
நேராக நீண்டெழுத்துச் சிவன்றன் ரூபம்
நிச்சயமாய் நின்றெழுத்துச் சோதி யாகும்
தாராக நின்றெழுத்துச் சதாசிவமே யாகும்
தரித்துநின்ற வரிமறையாய்ச் சாற்றுந்தானே!

[இப்பாட்டு முதற்பாடலில் வினவியவற்றிற்கு விடை கூறும் வகையில் அமைந்துள்ளமை காணலாம். இதனுள் சிவமும் சக்தியும் ஞானமும் சோதியும் மறையும் பொருளாக விடை உணர்த்தப்படுகின்றன.]

---

தோற்றுவாய்

இப்பாடலும் முன்னிரு பாடல்களைப்போலத் தத்துவ உண்மையைப் பற்றியதாகத் தெரிகிறது. இதன் பொருளையும் உணர்ந்தார்வழி அறிந்துகொள்ளல் வேண்டும்.

[ கலித்துறை ]

99. பாயும் நால்வகைப் பாலுண் பசுக்களைப் படைத்து
மேய பாசமோ ரைந்தினால் விளைவுறத் தளைந்து
தூய பூமியும் சொர்க்கமும் தொலைவர மேய்ந்து
சாயுங் காலையில் தட்டிய பசுபதி சரணம்

[பாசம் = கயிறு. தளைந்து = கட்டி. தொலைவற=நீக்கமில்லாமல். சாய்தல் = மேய்ந்து திரும்பித் தன் இடம் அடைதல். சாணம் = கோமயம்.]



தோற்றுவாய்

தூய்மையும் நல்லொழுக்கமும் உடையார் இன்னின்ன இடங்களில் இருத்தலும் சார்தலும் கூடாதெனக் கூறுகின்றது இப்பாடல். இதனுள் உள்ளத்திற்கும் உடலுக்கும் பொருந்த நல்வழி கூறும் சிறப்பு உணரத்தக்கது.

[ எண் சீர் விருத்தம் ]

100. விளக்கினிழல் ஆட்டுத்தூள் குயவன் சூளை
விளாவினிழல் கங்குலிடை அரசின் நீழல்
முளித்தபெருந் தான்றிநிழல் கருவேல் நீழல்
முறம்புடைத்த தூள், பெருக்க மெழுந் தூளும்
களித்துவரு சுணங்கன்தூள், கழுதைத் தூளும்
..................புகை,சதுரக் கள்ளி நீழல்
குளிக்குவர்தங்..........................லயர்ல
குருதிமட வார்நிழலும் குறுகொ ணாதே!

விளக்கினது புகை நிழற்கண்ணும் ஆட்டுக்கிடையிருந்த நிலத்தின்துகளிடத்தும், குயவன் சுடும் சூளை (ப்புகை) யிடத்தும், விளாமரத்தின் நிழலின் கண்ணும் இரவில் அரசமரத்தின் நிழலிடத்தும் பட்டை உரிக்கப்பட்ட பெருந்தான்றி மரத்தின் நிழலிடத்தும், கருவேலமரநிழலின் கண்ணும் தானியங்களை முறங்கொண்டு புடைக்குங்கால் வெளிப்படுந் துகளிடத்தும், துடைப்பத்தால் தூசுகளைப் பெருக்கும்பொழுது எழுந் துகளிடத்தும், பெட்டையோடு கூடிக்களித்து வரும் நாய் தன்

உடம்பைச் சிலிர்த்துதறும் தூளிடத்தும், கழுதை புரண்ட நிலத்தின்கண் தூளிடத்தும் ....... ........................ புகை நிழலின் கண்ணும், சதுரக்கள்ளி நிழலிடத்தும், நீராடுவார் பக்கங்களிலும்..................பூப்பெய்திய பெண் டிரின்பாலும் அணுகுதல் கூடாது.

[விளக்கு = எண்ணெய் விளக்கையும் தீப்பந்தத்தையும் குறித்து நின்றது. நிழல் என்றது ஈண்டுப் புகையை உணர்த் திற்று. விளா = விளாமரம், கங்குல் = இரவு, அரசு = அரச மரம், கருவேல் = கருவேலமரம், பரந்துள்ள குப்பைகளை ஒரு சேரக் கூட்டுதலின் அதனைப் பெருக்குதல் என்பது வழக்கு. களித்து வருதல் என்றது புணர்ச்சிக் களிப்பை. சுணங்கன் = நாய். குளிக்குவர் = பல்வகையாலும் நீராடுபவர், குருதி = திங் கள் தோறும் தோன்றும் பூப்பு. இப்பாட்டுள் அணுகத்தகாத இடங்களாக, விளக்கு, சூளை இவற்றின் புகையும், விளா, அரசு, கருவேல், தான்றி சதுரக்கள்ளி, இம்மரங்களின் நிழலும், முறம் புடைக்குந்தூள், துடைப்பம் பெருக்குந்தூள், நாய் உதறும் தூள், ஆட்டுக்கிடை நிலத்துத்தூள், கழுதை புரண்ட நிலத்தூள், ஆயவற்றின் துகளும், குளிப்பவரிடத்துத் தெறிக்கும் நீரும் கூறி மேலும் பூப்படைந்த பெண்டிரையும் கூறியுள்ளார். இவற்றைச் சார்ந்தார்க்கு உடல் நலம் கெடுதலேயன்றி உளமும் திரியுமென் பதை உலகியல் நோக்கி யறியலாம்.]

---

தோற்றுவாய்

இப்பிறப்பில் பொருளைத் தேடுவதும் காப்பதும் நம்முடைய முயற்சியளவில் அமைவதில்லை, முற்பிறப் பின் புண்ணியத்தால் அமைவதென்ற ஊழ்வலிபற்றிக் கூறுகின்றது; இப்பாடல். இறுதியடி தெளிவாக இல்லை.

[கட்டளைக் கலித்துறை]

**101. ஆமோ வொருபொரு ளல்லது**
**நம்பொரு ளானதிலே**

**போமோ வொருபொருள் புன்மன**
**மே, புத்தி தானிலேயோ**
**நாமோ படைப்பதும் காப்பதும்**
**நம்பொருள் நாடியென்றும்**
**தாமோ(ர்)பொருளும் அகலாமற்**
**காத்தல் தருமந்தானே,**

புன்மை பொருந்திய மனமே! நம்முடைய முயற்சியால் மட்டும் ஒரு பொருள் நம்முடையதாகுமோ? அல்லது நம்முடைய பொருளாக இருப்பவற்றுள் ஒன்று (பிறர் முயற்சியால் அவர்கள்பால்) போய் விடுமோ? ஒரு பொருளைப் படைப்பதும் காப்பதும் நம்முடைய செயல் மட்டுமோ, நம் பொருளாக உள்ளவை யாவும் நம்மை நாடி என்றும் தாவிவந்து சேரும். அவ்வாறு சேர்ந்த பொருள் நம்மை விட்டு நீங்காமற் காப்பதும் நம்முடைய முற்பிறவியின் தருமமேயாகும். இதனை உணர்தற்கு உனக்குப் புத்தியில்லையோ? உணர்வாயாக.

[" நம்பொருள் நாடியென்றுந் தாமோபொருளும் " என்ற தொடருக்கு வலிந்து ஒருவாறு பொருள் கொள்ளப்பட்டது. தருமம் என்பதற்கு ' ஊழ் ' எனக்கருத்துக் கொள்ளப்பட்டது,]

---

தோற்றுவாய்

குருவினது திருமேனி காணுதல் முதல் அவரைப் பற்றி சிந்தித்தல்வரை யாவும் ஞானத்தைத் தரும் எனக் கூறுகிறது இப்பாட்டு.

[கலி விருத்தம்]

**102. குருவின் திருமேனி காண்டல் தெளிவு**
**குருவின் திருநாமம் செப்பல் தெளிவு**

**குருவின் திருவார்த்தை கேட்டல் தெளிவு**
**குருரூபம் சிந்தித்த லுந்தெளி வாமே!**

நன்மாணுக்கன் தான் தன் குருநாதனின் திருமேனியைக் காணுதல் மெய்யுணர்வுதரும்; அவர் திருப்பெயரையும் புகழையும் மகிழ்ந்து கேட்டல் மெய்யுணர்வு தரும்; அவர் தம் திருவாய்மொழியைச் செவியேற்றல் மெய்யுணர்வுதரும், மற்றும் அவர் தம் திருவுருவத்தைத் தியானித்தலும் மெய்யுணர்வுதரும் என்க.

[தெளிவு = மெய்யுணர் வாகிய ஞானம் இதனை "ஐயத்தின் நீங்கித் தெளிந்தார்க்கு வையத்தின், வானம் நணிய துடைத்து" என்னுந் திருக்குறளானும் அறியலாம். தெளிவுக்குரிய காரணங் களைக் காரியமாகவே கூறப்பட்டது. இவை அனுபவ மொழி.]

---

தோற்றுவாய்

முருகப்பெருமானின் திருநாமத்தைக்கூற அச்சம் நீங்கும், அவனை வழிபட்டால் அவன் வேல் எல்லா வினைகளையும் விலக்கும், என்கிறது இப்பாட்டு.

[நேரிசை வெண்பா]

103. **ஆறுமுகம் என்றளவில் அச்சந் தவிருமே**
**வேறுவினை வந்தால் விலக்குமே—சீறியெழும்**
**வாரியொக்க சூரபன்மன் மார்பிளக்க**
**வேதுளைக்கும்**
**வீரியத்தி னுல்மிகுந்த வேல்.**

உலகீர்! எம்பெருமானுகிய இறைவனை எண்ணி ஆறுமுகமே! என்ற அளவில் உம்மை வாட்டும் அச்ச

மெல்லாம் நீங்கும். மேலும், கடல் அலைகள் போலப் படைகளோடு சீறியெழுந்த சூரபன்மாவின் மார்பு பிளக்குமாறு பேராண்மையோடு எறிந்த வேலானது ஊழால் பிறவினைகள் வந்தாலும் விலக்கிவிடும் ஆதலின் அவன் திருநாமத்தைச் சொல்லி வழிபடுங்கள்.

[வேறுவினை = ஊழ்வினை. மார்பு பிளக்கும் என்றது மார் பிளக்கும எனக் குறைந்து நின்றது.]

---

தோற்றுவாய்

சான்றாண்மையுடைய நல்லோர்க்கும் அஃதில்லாத கயமையுடையோர்க்கும் உரிய பெருமை சிறுமைகளை உவமை வாயிலாக விளக்குகின்றார் ஒருபுலவர்.

[கட்டளைக் கலித்துறை]

104. மெய்யினும் நல்லவர் ஈனம்பொ
ருர், மயிர் வீழ்ந்தொடுங்கச்
செய்யினும் மானக் கவரியுய்
யாச்சிற் றினக்கயவர்
வையினும் வாழ்வர் தகரினைக்
காதும் மயிருமொக்கக்
கொய்யினும் பின்செலுங் காண்ஆரை
வாழ்கங்கை கொண்டவனே!

திருவாரூரிலே கோயில்கொண்டு, கங்கையைச் சடைமுடியிற்றரித்து விளங்கும் இறைவா! தன்னுடம்பின் கண் உள்ள மயிர்க்கற்றையுள் ஒன்றை வீழச்செய்தாலும் மானத்தையே பண்பாக உடைய கவரிமா உயிர்

வாழாது, (அப்பொழுதே இறந்துபடும்) அதுபோல உடம்பாலும் உரையாலும் உள்ளத்தாலும் தூய்மை யுடைய நல்லவர்கள் தமக்குச்சிறிது ஈனம்வந்தாலும் உயிரைப் பொருத்து வாழமாட்டார்கள். (அதற்கு மாருக) ஆட்டின் காதுகளையும் மயிரையும் ஒருசேரக் களைந்து சிறுமை செய்தாலும் தனக்குற்ற குறையை எண்ணுமல் அது ஒருவர்பின் செல்லும். அதுபோலப் பொறுக்கலாகாத வசைமொழிகளைக் கூறி யேசினும் சிற்றினத்தைச் சேர்ந்த கயவர்கள் அவ்வசைமொழி களைத் தாங்கிக் கொண்டு உயிர்வாழ்வார்கள்.

[மெய்யினும் என்ற எச்ச உம்மையால் உரையாலும் உளத் தாலும் நல்லவர் எனக்கொள்ளப்பட்டது. மெய்யாகவே நல்ல வர்கள் என்றும் பொருள் கொள்ளலாம். 'மானக்கவரி' என்ப தனை மானுகிய அக்கவரி என்றும் கூறலாம். தகர்=ஆடு. கொய்தல்=அறுத்தல். காதினை அறுப்பது பெரியதோர் அவ மானமாகக் கருதப்படும். ஆரை=திருவாரூர். இரு உவமை களும் எடுத்துக்காட்டுவமைகள். இப்பாட்டு, மயிர்நீப்பின் வாழாக் கவரிமா அன்னர், உயிர்நீப்பர் மானம்வரின் என்ற திருக்குறளிற்கு விளக்கமாக அமைந்துள்ளமை காண்க.]

---

தோற்றுவாய்

யாக்கையின் தூய்தன்மையையும் நிலையாமையையும் பற்றிக் கூறுகிறது இப்பாடல். இறுதியடி செம்மையாக இல்லை.

[கட்டளைக் கலித்துறை]

105. விடக்கே பருந்தின் விருந்தே
கமண்டல வீணனிட்ட
உடற்கே உயிர்வந் துறைவிட
மேயெண்ணில் ஒன்றுமிலாச்

**சடக்கே யறிவு கலங்கிற்றென்**
**றூற்பெற்ற தாயுந்தொடர்ந்**
**துடக்கே புணைப்பிரிந் தேனினிப்**
**பூரைச் சுமந்ததுவே.**

கையிற் கமண்டலமேந்தி விளங்கும் (பிரமன்) வீணனுகியவன் படைத்துவிட்ட இந்தத் தசைப்பிண்டத்திற்கே, பருந்துகளுக்குணவாகும் இதற்கே (அஃதாவது) இவ் உடலானது உயிர்வந்து சிறிதுபொழுது தங்கும் உறைவிடமே என்று எண்ணினுல் ஒருநிலையுமில்லாச் சடமே இது என்று புலனுகும். இந்த உடம்பின் அழிவிற்கும் இடையூற்றினுக்கும் அறிவு கலங்கிற்றென்றூல் பெற்ற தாயும் தொடர்ந்து துடக்கே புணைப்பிரிந்தேனினிப்பூரைச் சுமந்ததுவே.

[பாடல் தெளிவின்மையின் கிடந்த முறையிற் பொழிப்புரைக்கப்பெற்றது. திருந்தியபாடம் கிடைப்பின்நலம்.]

---

தோற்றுவாய்

தலைவன் பரத்தையிற் பிரிந்தானுகக்கருதி ஊடல் கொண்ட தலைவியை நயவுரையால் வேண்டிக்கொள்ள வந்த பாணனிடத்தில் அவள் கூறியது. இப்பாடல் 'பாணனை வாயில் மறுத்தல்' என்னும் அகத்துறையைச் சேர்ந்தது.

[கட்டளைக் கலித்துறை]

106. **மனந்தாவு வெண்பரிச் செண்பக**
**மாறன் மதுரைப்பிரான்**
**இனந்தான் பயிலும் இயற்பாண**
**னேநீ இலத்தில் மிகச்**

**சினந்தாவு காமக் கடலிற்பொற்**
**பாலகச் சில்லந்தட்டித்**
**தனந்தாழ்வு பட்டது கண்டோ**
**வரத்துத் தவிர்ந்ததுவே ?**

மனம்போல விரைந்து தாவிச்செல்லும் வெண்மையான குதிரையையுடைய சண்பகமாறனுடைய மதுரைப் பதியில் பிரானாகிய என் தலைவனுடைய இனத்தோடு பழகிவாழும் இயல்பையுடைய பாணனே! நீ என்மனையிடத்திற்கு வாயில் வேண்டி இப்பொழுது வந்துள்ளாய். இதற்குமுன் உன்வரவு தவிர்ந்தமைக்குக்காரணம் யாது? ஒருவேளை, (காமமிகுதியாகிய) அலைகள் தாவும் காமக்கடலிற் பொற்பாலகச்சில்லந்தட்டித் தனமும் தாழ்வுபட்டமைகண்டோ? கூறுவாயாக!

[மதுரைப்பிரான் என்றது தலைவனை. இயற்பாணன் என்றது இசையறிவு வாய்க்கப் பெருமையின் இந்த வாயில்போகும் தொழிலை மேற்கொண்டான் எனக்கருதி. மூன்றும் அடியின் இறுதிப் பாடம் சிதைந்துள்ளது. 'பால்' 'கச்சு' என்ற இரண்டு சிலேடைப் பொருள்தரும் சொற்கள் ஆண்டிருத்தல் வேண்டும் இளமகவுடையதாயாதலின் - பாலும், மேற்கச்சும் சூழ்ந்துள்ள தனம் என்பது பொருள். தனம்=நகில் (பொருள்) நகில் திரைந்து சாய்ந்தமையைச் செல்வக்குறைவினால் ஏற்பட்டதோ என்பதுபோலச் சிலேடையாக அமைந்துள்ளநயம் சுவையானது.]

---

**தோற்றுவாய்**

சீகாழியில் விளங்கும் இறைவனுக்குத் தோணியப்பர் என்ற திருநாமம் உண்டு. இப்பெயரை வைத்துப் பாடப்பெற்றது இவ் அம்மானைப்பாடல்.

[ தரவு கொச்சகக்கலிப்பா ]

107\. **ஆதிநகர்க் காழியர்கோன் அன்பர்களைத்**
**துன்பமெனும்**
**பூதியினின் றேற்றிவிடும் புண்ணியன்காண்**
**அம்மானை**
**பூதியினின் றேற்றிவிடும் புண்ணியனேல்**
**காசனைத்தும்**
**சோதித்து வாங்கத் துணிவதேன் அம்மானை ?**
**தோணி விடுவார்க்குத் துறையன்றோ அம்மானை !**

பதிகளுக்கெல்லாம் முதன்மையான சீர்காழியில் எழுந்தருளியிருக்கும் இறைவன் தன்னை வணங்கி அன்பு செய்யும் அடியவர்களை உலகத்துன்பங்களாகிய சேற்றினின்றும் இன்பமாகிய கரைக்குச் செல்லும் வண்ணம் மேலே ஏற்றியருள்செய்யும் புண்ணியவான் என உணர்வாயாக (என்று ஒருத்தி கூற) அவ்வாறு புழுதியினின்றும் கரையேற்றிவிடும் புண்ணியனானால் அன்பரிடும் காசுகளைச் சோதனை செய்து வாங்குவதற்குத் துணிந்து வாங்கியது எப்படிப் பொருந்தும் (என மற்றொருத்தி வினவ) கரை சேர்க்கும் பணியை மேற்கொண்டு வெள்ளத்திலே தோணி விடுவார்க்குச் சோதனை செய்து பார்ப்பதும் ஒரு கூறல்லவோ (என்று முடித்தாள் ஒருத்தி).

[காழியர்கோன் = சீகாழி சட்டநாதக்கடவுள். அவர் உலகமெல்லாம் ஊழி வெள்ளத்தில் அழியும்போதுதான் ஒரு தோணியை இயக்கி அதனுள் காக்கவேண்டியவற்றைக் காப்பார் என்பதைச் சீகாழி தலபுராணத்தால் அறியலாம். பூதி=புழுதி ஈண்டு சேற்றை உணர்த்திற்று. துன்பமென்னும் சேறு என்றதனால் இன்பமென்னும் கரைஎன வருவிக்கப்பட்டது. காசினைச் சோதித்து வாங்கிய புராண நிகழ்ச்சி தெளிவாகத் தெரியவில்லை. " தோணி விடுவார்க்குத் துறை " என்பதே இதனுள் அமைந்த நயம். படகு செலுத்துவோர் ஏற்றிச் செல்லும் பொருள்களை

ஆராய்ந்தே செய்வர். ஆதலின் கரையேற்றிவிடும் அன்பர்களைச் சோதித்தல் அவர் பொறுப்பாயிற்று எனக் குறிப்பாகச் சுட்டினராதலின்]

தோற்றுவாய்

பிரமனல் படைக்கப்பெறும் பிறவிக் கடலில் வீழ்ந்து வருந்துவோர் இறந்தும் பிறந்தும் கொள்ளும் துயர் போகத் தோணியப்பரை நினையாதிருப்பதுபற்றி வருந்தி ஓர் அடியார் கூறுவது.

[ அறுசீர் ஆசிரிய விருத்தம் ]

108. **வேணிமேல் முடித்தும்நெடும் கானடைந்தும்**
**இலைகனிகாய் மிசைந்தும் வாடி**
**வாணிமேல் விருப்பகலான் படைக்குஞ்சென்மக்**
**கடல்வீழ்ந்து வருந்து வீர்காள்!**
**பாணிமேற் கொண்டுலகம் பதினாலும் .... .... ....**
**ஒடுங்கக்கண் படரும் போது**
**தோணிமேல் இருப்பவரை நினைந்துகரை**
**ஏருமற் சுழல்கின் றீரே ?**

தவவேடமாகிய சடைமுடியைத் தாங்கி முடித்தும் பெரிய கானகத்திற்குச் சென்று இலை தழைகளையும், கனி காய்களையும் (நோன்பிருப்பார் போல) உண்டும் உடம்பு வாடி, கலைமகள் கணவனாகிய பிரமன் அவரவர் செயலுக்கு ஏற்பப் படைக்கும் எழுவகையான பிறவிக் கடலிலே மூழ்கி வருந்துபவர்களே! பிரளயமாகிய வெள்ளமானது மேலோங்கிப் பதினாலு உலகங்களும் முழுகுமாறு இடமெங்கும் படருங்கால் தான் அழியாமல் தோணியின்மீது அமர்ந்திருக்கும் சீகாழிப் பெருமானை நினைந்து (அப்பிறவிக் கடலைக் கடந்து) கரை ஏறுமல் மயங்குகின்றீர்களே! (என்ன அறியாமை)

[வேணி = சடை. 'முடித்து' என்பதால் அவ்வேடத்தையே தாங்கினர்கள் என்றும் 'இலை கனி காய் மிசைந்து' என்றதனல் பசியை வென்ருரில்லை. அதுவும் வேடமே என்றும் ஆம். வாணி = கலைமகள். வாணிமேல் விருப்பகலான் என்றது பிரமன் என்ற அளவில் நின்றது. பரணி = நீர், ஈண்டு ஊழி வெள்ளத்தைக் குறித்தது. உலகம் பதினன்கும் அழியும் போதும் இறைவன் தோணியில் இருந்தான் என அவனுக்கு முடிவின்மை சுட்டும்போதே வெள்ளத்தில் ஆழ்பவரைத் தோணி மேல் இருப்பவரால்தான் கரையேற்ற முடியும் என்ற நயமும் தோன்றப் பாடிய சிறப்பு சுவை தருகின்றது.]



தோற்றுவாய்

சிவபெருமான் தோணியப்பராகக் கடல்மேலும் பெரியநாயகராக மலைமீதும் அமர்ந்துள்ள சிறப்பை நகைச்சுவை தோன்றக் கூறுகிறது இப்பாடல்.

[அறுசீர் ஆசிரிய விருத்தம்]

109. **கலைமேற்கொண் டிடப்பெறுமோர் கலைமதியம்**
**தலைப்படைக்கும் கருத்தோ சொல்வீர் !**
**அலைமேற்கொண் டிடவகன்றும் ஆயிரமா**
**முகப்புனலும் அன்னந் தேடும்**
**தலைமேற்கொண் டிருக்கவுமோர் திமிலேறி**
**பழவசனந் தனையெண் ணுமல்**
**மலைமேலும் இருக்கின்றீர் பித்தரென்கை**
**யோவேணு வனத்தினீரே ?**

இறைவனே! நாள்தோறும் வளரும் கலைகளை மேற்கொண்டுளதோர் கலைமதியைத் தலையிலே படைத்திருக்கும் கருத்தினலோ நீர் அலைகளை மேற்கொண்டு இடமகன்று வினங்கும் ஆயிரமாம் முகத்தோடு பாயும்

கங்கை வெள்ளத்தைப் பிரமன் தேடிக் காணாத சடை முடையின் மேல் கொண்டிருக்கவும் தோணியின் மேலேறிக் கடலிலிருந்தீர் (கையிலே வெண்ணெய் இருக்க நெய்க்கு அழுவார் என்னும்) பழமொழியையும் எண்ணாமல் இருப்பதோடல்லாமல் (அருவிநீர் பாயும்) மலைமேலும் இருக்கின்றீர். வேணுபுரமாகிய சீகாழியில் இருப்பவரே! உம்மைப் பித்தரென்று சொல்வதனாலோ இவ்வாறு இருக்கின்றீர்? சொல்வீராக!

[கலை = சந்திரகலை. மதி = சந்திரன் ஈண்டுச் சிலேடை வகையால் கலைஞானத்தோடு கூடிய அறிவாகத் தொனிக்குமாறு வைத்துக் "கலைமதியந்தனைப் படைக்குங்கருத்தோ" என்றார். 'அன்னம்' பிரமன் அன்ன வடிவெடுத்துச் சிவபெருமான் தலை முடியைத் தேடினாகலின் 'அனனந்தேடும் தலை' என்றார். கங்கை ஆயிரம் ஆயிரம் கால் கொண்டு பாய்தலின் 'ஆயிரமா முகப்புனல்' என்றார். திமில் = ஓடம் (தோணி). மலை=சீகாழி யில் இருக்கும் கட்டுமலை. தலைமேலே நீரிருக்கவும் கடல் மேலே தோணிவிட்டு நீரைத் தேடுவதாக வைத்துப் பேசுகிறார் ஆத லின் பழவசனம்தனை யெண்ணாமல் என்றார். கையிலே வெண் ணெய் இருக்க நெய் தேடுதல் போன்றென்பது பழவசனம். (பாடலாசிரியர் கருதியது வேறு பழமொழியாகவும் இருக்கலாம்) மலை மேலும் இருக்கின்றீர் என்பது ஆண்டும் நீரைத் தேடுவ தாகக் கொண்டு கூறப்பட்டது. பித்தர் = சிவபெருமான். 'பித்தரென்கையோ' என்றது, நீர் இவ்வாறு இருப்பது கருதித் தான் உலகத்தார் உம்மைப் பித்தனென்கின்றார் போலும் என நினைந்து. வேணுவனம்=சீகாழி. (பாடலில் சில எழுத்துக்கள் பிறழ்ந்துள்ளமையின் ஒருவாறு பொருள் கொள்ளப்பட்டது.)

---

### தோற்றுவாய்

பிறவி தீர்க்கும் மருந்தாம் இறைவனை அம்மானைப் பாடலில் இருபொருள் தோன்ற வைத்துப் பாடியது இப்பாட்டு.

[ தரவு கொச்சகக்கலிப்பா ]

110. நாவலர்சூழ் (சிரபுரத்துச்) நாதனுர் ஆலநிழல்
மேவியறங் கூறியங்கே வீற்றிருந்தா ரம்மானை ;
மேவியறங் கூறியங்கே வீற்றிருக்கும் மெய்ப்
பொருளைப்
பாவியென்று நல்லோர் பகர்வதேன் அம்மானை ?
பகராரோ சென்மப் பகையாறு லம்மானை ?

கற்றறிந்த நாவலர்கள் வழிபடச் சூழும் சீகாழிப் பதியிலே விளங்கும் இறைவனுர் கல்லால மரத்தின் கீழ்ப் பொருந்தி உண்மை ஞானத்தை நால்வருக்கும் மொழிந்து ஆங்கே வீற்றிருந்தார் அறிவாயாக ! (என்று ஒருத்திகூற) அவ்வாறு பொருந்தி யிருந்து அறங்கூறி வீற்றிருக்கும் மெய்ப்பொருளாகிய இறைவனைப் ‘பாவி’ என்று நல்லோர் பலரும் விளம்புவது ஏன் ? (என மற்ருெருத்தி வினவ) பிறவிப் பகையாக விளங்கினுல் யார் தான் அவ்வாறு சொல்லாதிருப்பார், சொல்லுவார்கள் என்ருள் அவள்.

[‘நாவலர்சூழ்’ என்பதற்குச் சம்பந்தப்பெருமான் பிறந்தருளிய பதியாகலின் அதனை மிதிக்க அஞ்சி வலம் வந்த சுந்தரமூர்த்தி நாயனுரைச் சுட்டுவதாகவும் பொருள் காணலாம். நாவலூரரை நாவலர் என்ருர் என்க. சிரபுரம் = சீகாழி (இவ்விடம் பாடம் சிதைந்துள்ளது) அறங்கூறியது சனகாதி நால்வருக்கு. வீற்றிருத்தல் பிறருக்கில்லாத சிறப்பொடு இருத்தல் ‘பாவி’ பாவனை செய்வாயாக என்ற பொருளில் நல்லோர் கூறியதை பாவமுடையவன் என்று தொனிக்கும் படியாக வைத்த சிலேடை நயமும் “சென்மப்பகை“ பிறவித் துன்பத்தை நீக்கும் என்ற பொருளில் சன்மப்பகை என்றதை பிறவி முழுதும் நமக்குப்பகை புரிபவன் என்று தொனிக்குமாறு வைத்த சிலேடை நயமும் இப்பாடலின் சிறப்பாகும். பகர்தல் = சொல்லுதல், நல்லோர் = ஞானிகள்.]

தோற்றுவாய்

வறுமை காரணமாக (அது தீர்வதற்காக)க் கொடையாளரை நாடிச்சென்ற புலவன் ஒருவன், கல்வியின் பெருமையறியாத செல்வர் சிலர் தனக்குச்செய்த செயல் பற்றி நகைச்சுவை தோன்றக் கூறுவது இப்பா. இஃது முற்றுப்பெறவில்லை. ஆயினும் இருக்குமளவிற் சிறப்பாக உளது.

[ ஆசிரியப்பா ]

111. வெள்ளியின் எழுந்து வள்ளியோன் நாடி
பாற்கான் உதயம் பார்த்திருந் தெழுந்து
நாற்கட லுலகம் நாடொறுந் திரிந்தும்
நல்லார் ஒருவரை நாடியுங் காணேன்
கல்லாப் புல்லர் கட்சென் றணுகி

நான்முறை நலியும் வறுமைபின் தள்ள
நானவர் தம்மை நண்ணுற் றணுகி
அருங்கவி யுரைத்தும் மருங்குட னிருந்தும்
எழுதியிரங் .... .... .... .... இடமணித் தென்றல்
பழுதில் கிளவி பலபல உரைத்தும்

அந்தியில் ஊண்பெறின் இந்துவின் திவசமும்
உறுபகல் முழுதும் உபகரித் திருந்தும்
மறுபகல் ஊண்பெறின் மாதவன் திவசமும்
.... .... .... .... .... .... .... .... ....
ஈயாதவனைச் சேயோ னென்றும் .... ....

கீழைவானில் வெள்ளிமீன் முளைக்கும் போது உறக்கமின்றி எழுந்து வள்ளன்மை யுடையோனைச் சிந்தித்துப் பால்போலும் கதிர்களை வீசும் கதிரவன் உதயத்தை எதிர்பார்த்துச் சுடரவன் தோன்றிய போதே எழுந்து நடந்து சென்று நாற்கடலாலும் சூழப்பெற்ற இவ்வுலகத்தில் இடந்தொறும் நாள்தொறும் சுற்றியும் என்

ஊனப்பேணிப் போற்றும் நல்லார் ஒருவரைத் தேடியும் காணுதவனய் நாள்முறை தவருது நின்று வருத்தும் பசிப்பிணி வறுமை என்பிடர் பிடித்துப் பின்னின்று தள்ள யான் (செல்வமுடையாரை நோக்கி (க்காப்பார் என்னும் அவாவிஞலே) அவர்களை நெருங்கிச் சென்று அடைக்கலமாகி அரும் பொருள் நிறைந்த கவிகள் பல வற்றை உரைத்தும் அவர் பக்கத்தில் அகலாதிருந்து அவர் உவக்குமாறு பேசியும், எழுதியும் .... .... ... 'இட மணித் தென்றல்' முதலாகப் பல அகப்பொருட் கிளவி களைப் பலப்பல முறையில் நயம் நிரம்ப உரைத்தும் அதற்கு மகிழும் உணர்வில்லாராய் இரவலர்க்கு ஈவது போல அவர் தரும் உணவைப் பிற்பகலிற்பெற நேர்ந் தால் அன்றைக்கு அமாவாசையாக எண்ணி உண்டும், பகல் முழுவதும் அவர்கட்கு உபகாரமாய் இருந்தும் உணவு பெருமல் மறுநாள் பெற நேர்ந்தால் அன் றைக்கு ஏகாதசிப் பின்னுன துவாதசியாக எண்ணியும் துன்புற்று .... .... .... .... .... ஒரு கால் மனமுவந்து ஈந்தா லும் ஈவான் என்று கருதி அவ் உலோபனை முருகனே! இந்திரனே! எனப்புகழ்ந்தும் .... .... .... .... .... (முற்றுப் பெறவில்லை)

[பாற்கான் = பால் போன்று ஒளியைக் காலும். புல்லர் = சிற்றினத்தார். 'இடமணித்தென்றல்' இஃது ஓர் அகப்பொருட டுறை. 'இந்துவின திவசம் மாதவன் திவசம' என்றவை நய மான பகுதிகள். திவசம = திதி அல்லது நாள். இப்பாடலின் குறை நமக்கு ஒரு குறையேயாம.]

---

## தோற்றுவாய்

பொல்லாதவர்க்குப் புத்தி கூறுவதனுற் கூறு வோர்க்குச் சிறிதும் நன்மையில்லை, அவரைத் திருத்த

இயலாதென வேற்றுப் பொருள் வைப்பணி வாயிலாக வலியுறுத்துகின்றது இப்பாடல்.

[ நேரிசை வெண்பா ]

112. மலட்டை யணைத்து வடித்தும்பா லாகா
கலட்டைவிடி னும்கற் கரையா — தலட்டைவிடீர்
பொல்லாற்குப் புத்திசொன்னால் புண்ணியவா
னுவானோ
நல்லவா மோவேட்டை நாய் ?

மலட்டுப் பசுவை மிகநெருங்கி மடியைப் பிடித்துக் கசக்கி வடித்தாலும் பால்பெறலாகா, கல் நிலத்தினின்றும் பெயர்த்தெடுத்தாலும் கல்கரைந்து சேறாகாது. எனவே நீங்கள் உள்ளத்தை அலட்டிக் கொள்ள வேண்டா; அறிவில்லாத பொல்லாதவனுக்கு நல்ல புத்தி சொன்னால் அவன் அதைக் கேட்டுப் புண்ணியவானுவானோ ஆகான். எவ்வாறு எனின் வேட்டை நாய் நல்ல நாயாகுமோ அதுபோல என அறிக.

[இப்பாடல் இலக்கியப்பயிற்சி யில்லாதார் ஒருவர் இயற்றியதாகத் தெரிகிறது. கலடு = கல்நிலம். அலட்டை = அரற்று என்பதன் கொச்சைச் சொல்.]

---

சுந்தரமூர்த்தி நாயனாரால் முதலை வாய்ப்பிள்ளையை அழைப்பித்த அவிநாசி திருப்புக் கொளியூரிடைச் சென்ற ஒரு அடியார் அவ்விடங்களைக் கண்டு வியந்து மகிழ்ந்து கூறுவது.

[ நேரிசை வெண்பா ]

113. இதுவோ அவிநாசி இவ்வாறே நல்லா(று)
இதுவோ புகலூரின் எல்லை — இதுவோதான்
மூவாண்டு சென்ற முதலைவாய்ப் பிள்ளைதனை
வாவா என அழைத்த மண் ?

இதுதான் அவிநாசி என்னும் திருப்பதியோ? இவ் ஆறு தான் நல்லாறு எனப் புகழப்பெறுவதோ? இது தான் புகளூரின் எல்லையோ? இதுதானே விழுங்கப் பெற்று மூவாண்டு கழிந்தபின் அம்முதலையின் வயிற்றில் உள்ள பிள்ளையை வாவா என (ச்சுந்தர மூர்த்திகள்) அழைக்க அப்பிள்ளை உயிரோடும் வளர்ச்சியோடும் வந்த நிலம்?

[புராணத்துள் திருப்புக் கொளியூர் என்றும் ஐந்தாண்டு நிறைந்த பிளளை என்றும் காணப்படுகிறது இதனுள் புகளூர் எனவும் மூவாண்டு என்றும் கூறியுள்ளார் இவ்வாசிரியர். இவ் வரலாற்றைப் பெரிய புராணத்துட் காணலாம்]

---

தோற்றுவாய்

மணமக்களை வாழ்த்தும் முறையில் அமைந்த பாடல் இது. இதனுள் மணமக்களையும் அவர் தம் பெற்றோ ரையும் சுற்றத்தாரையும் உடன் வாழ்த்துப்பெறும் முறை காணப்பெறுகிறது.

[ நேரிசை வெண்பா ]

**114.** **மணவாளன் வாழி மணவாட்டி வாழி!**
**மணவாளன் தந்தைதாய் வாழி — மணவாளன்**
**சுற்றமும்மற் றுள்ளோரும் தொல்லுலகில் எந்நாளும்**
**மற்றிணையில் லாமல்வா ழி!**

[பொருள் வெளிப்படை. இதனுள் மணமகள் தாய் தந்தை யர் முதலானோரை வாழ்த்தவில்லை; அவளுக்கு எனத் தனித் தன்மை இல்லை என்னும் கருத்துப்போலும்.]

---

தோற்றுவாய்

இரவுக் குறியிடத்து வந்த தலைமகன் தலைவி அல்ல குறிபட்டுச் சென்றதை யறியாதவனாய் அவள் காணாமை எண்ணி நெஞ்சோடு கூறும் அகப் பொருட்டுறையைச் சார்ந்தது இப்பாடல். இதனுள் பாட்டுடைத் தலைவனாகத் தெள்ளாறெறிந்த நந்திவர்மன் காணப்படுகிறான். நந்திக் கலம்பகத்துள் இப்பாடல் இல்லையாதலின் நந்திவர்மனைப் பற்றியதோர் தனிப்பாடலாகத் தெரிகிறது.

[கட்டளைக் கலித்துறை]

115. **நறையிட்ட புள்ளின் தழும்பறத்**
**தாட்கொண்ட, தாழ்கதிரோன்**
**முறையிட்ட கோயில் திறந்தவ**
**ரார்? மன்னர் மூவரையும்**
**திறையிட்ட கோனந்தி தேசபண்**
**டாரிதெள் ளார்றையுளே**
**உறையிட்ட வேலன்ன கண்ணியெங்**
**கேபுக் கொளித்தனளே?**

சேர சோழ பாண்டியராகிய மூவேந்தரையும் வென்று அவர்களைத் தனக்குத் திறையிட்டு வாழுமாறு ஆணையிட்ட பேரரசனாகிய நந்திவர்மப் பல்லவனாகிய தேசபண்டாரி, முன்பு தெள்ளாறையிற் போரிட்ட போது வென்று உறையிலிட்ட வேல் போன்ற கண்ணை யுடைய தலைவி, தான் வாழும் படியான தேன் நிறைந்த, வண்டுகள் மொய்த்த் சுவடில்லாதபடி குவிந்து நின்ற, கதிரவன் தாழ்ந்து தன் கிரணங்களால் தட்டி முறையிட்டுத் திறக்கும்படியான (தாமரையாகிய) திருக்கோயிலை யார் திறந்தார்கள்? இப்பொழுது அவள் எங்கு சென்று ஒளிந்தாள்? நெஞ்சமே நீ அறிவாயோ கூறுக! என்றான்.

[தலைவியை இலக்குமியாகவே கருதினான் ஆதலின் அவள் இருப்பிடத்தைத் தாமரையாகிய கோயில் என்றான். அக் கோயில் வளம் நிறைந்தது, பகைவரால் மாசுபடாதது என்பான் நறையிட்ட, புள்ளின்தமும்பற என்றான. நறை=தேன். புள்= வண்டு. வைகறையில் கதிரவன் தோற்றங்கண்டு தாமரை மலர் தலின் கதிரவன் முறையிட்டுத் திறக்கும் கோயில் என்றான். இரவுக்குறியாதலின் கதிரவன இல்லை எனவே கோயில் திறந்த வர் யார் என்றான். "கதிராயிரம் இல்லை ஏழ்பரித்தேரில்லை காவல் வெய்யோற்கு எதிராதல் சோமற்கியைவதன்றால் நும்மில் யார் திறந்தார்" என்னும் தஞ்சைவாணன் கோவைப் பாடலுள் இககருத்தும கற்பனையும் அமைந்துள்ளமை காண்க. தெள் ளாறு=ஓர் ஊர். தலைவியின் செவ்வரி பரந்த கண்களுக்கு உவ மையாதலின் பகைவரை வென்று அக்குருதி படிந்த வேலைக் கருதிக் கூறினான். இப்பாடல் அகப்பொருட்சுவை மிளிரப் பாடப்பட்டுள்ளது.]

---

தோற்றுவாய்

மறக்குலத்தலைவன் ஒருவன் தன்மாட்டுப் பெண் விரும்பித் தூதுவிட்ட மன்னனைப் பழித்துரைக்கும் 'மறம்' என்னும் கலம்பகத் துறையைச் சேர்ந்தது இப்பாடல்.

[பதினான்குசீர் ஆசிரிய விருத்தம்]

116. அள்ளி யேயுறி வெண்ணெய் யுண்டருள்
செழியர் பூபதி பாலை .... .... ....
.... .... .... .... .... .... வாழ்ந்த கால
மகிப .... .... ... .... மறவர்பெண்

பள்ளி யேறி மிதிக்க வென்று
சடங்கு பேசிய மன்னவன்
பாது காவலின் மீது கோலிநம்
படையெ டும்மொரு நொடியிலே

கொள்ளை கொண்டுதி ரும்படாகுல
மாத ரைச்சிறை பிடியடா
கொடுமு டித்தலைவெட்ட டாகொடி
வழியெ லாமொடி எறியடா

கள்ள ஓலையின் வாயி லேவனை
தடியெ டுத்துமமுக்கடா
கட்கு வாளெடு தூத னைப்பிடி
காதி ரண்டும றுக்கவே.

உறிமேல் ஏறி வெண்ணையைக் கவர்ந்துண்ட கண்ணனாகிய திருமாலின் மரபில் வந்த பாண்டிய மன்னர் ஆளும் நாட்டில் வாழும் கானவர் தலைவனான மறவனின் பெண்ணை, அவள் பள்ளிக் கட்டிலில் உடனமர எண்ணிச் சடங்குபேசிவரத் தூதுவிட்ட மன்னனின் பாதுகாவல் அமைந்த நாட்டின்மீது நம் படைகளை அழைத்துக் கொண்டு சென்று அவன் மதிலை வளைத்து ஒரு நொடிப் பொழுதில் வென்று அவன் பொருளை யெல்லாம் கொள்ளைகொண்டு, திரும்படா! மேலும் அம்மன்னனின் உரிமை மாதர்களைச் சிறைசெய்து கொண்டுவா. எதிர்க்கும் மன்னனையும் வீரர்களையும் அவர்களின் முடியோடு கூடிய தலைகளை வெட்டு. அவர்களின் கொடி வழியை இல்லாமல் எறிந்து கொல்லு. வஞ்சமிக்கத் தூதுவன் கொண்டுவந்த ஓலையை வளைதடியைக் கொண்டு வெட்டிச் சிதைத்து மழுங்கச்செய்! அத்தூதனின் கண்களைத் தோண்டுவதற்கு வாளை எடு! அவன் காதுகளை அறுப்போம் அவனைப்பிடி! (எனத் தன்படை மறவர் தலைவனைப்பணித்தான்.)

[முதலடி சிதைந்துள்ளமையால் ஒருவாறு கருத்துக்கொள்ளப்பட்டது. 'பள்ளியேறுதல்' என இடக்கரடக்கலால் கூறி

ளுன். சடங்கு = மணவினை பேசும் முறையைக் குறித்தது. கொடிவழி = பரம்பரை. மழுக்குதல் = நையச் செய்தல். பிற நயங்களையும் சுவைத்தறிக.]

---

தோற்றுவாய்

பிறப்பும் இறப்பும் இல்லாப் பெம்மானாகிய அருணேசரை யன்றிப் பிறரெல்லாம் பிறப்பிற்குட்பட்டவரே எனக் கூறுகிறது இப்பாடல்.

[ நேரிசை வெண்பா ]

117. **ஆரிருக்கப் போரூர் அருணேச ரேயுலகில்**
**நீரொருத்தர் அல்லாமல் நின்றபேர் — நீரும்**
**பிறவாம லேயிருந்தீர் பின்பிறந்தோ ரெல்லாம்**
**இறவாமல் மண்மே லினி.**

, அருணாசலத்திற் குடிகொண்டிருக்கும் அருணேசரே ! உலகில் நீர் ஒருத்தரே அல்லாமல் இங்கு உலவுகின்றவர்களுள் (இறவாமல்) யார் இவ்வுயிருடம்போடு இருக்கப் போகிறார்கள் ? நீரோ பிறவாமலே இருக்கின்றீர் (ஆதலின் இறப்பில்லை) பின்னர்ப் பிறந்தவர்கள் எல்லோரும் இறவாமல் இனி மண்மேல் இருக்க இயலாதே (பிறந்த காரணத்தால்).

[ பிறவாதிருக்கின்ற காரணத்தால் இறவாதிருக்கின்றாய் என்றபடி. பின்பிறந்தோர் எல்லோரும் மண்மேல் இறவாமல் நீ இனிப்பாயாக (அருள் செய்வாக) என ஒரு பொருள் தோன்ற நின்றது.]

---

தோற்றுவாய்

மதுரையில் விளங்கும் சொக்கலிங்கப் பெருமானே தான் திருவண்ணாமலையிலும், காஞ்சிபுரத்திலும் திருவாரூரிலும் இருந்து அருள்புரியும் லிங்கமூர்த்தியாவார் என்கிறது இப்பாடல்.

[ நேரிசை வெண்பா ]

118. **அண்ணா மலையில் அமர்ந்தலிங்கம் காமாட்சிக்**
**கண்ணாள் கரத்தி லிருந்தலிங்கம் — நண்ணும்**
**திருவாரூர்ச் சோலையிலே சேர்ந்தவர்க்கு முத்தி**
**தருவார்நம் சொக்கலிங்கந் தான்.**

திருவண்ணா மலையின்கண் அடியார்க்கு அருள அமர்ந்திருக்கும் லிங்கமூர்த்தியும், காமாட்சியாகிய அங்கயற்கண்ணியின் கரங்களால் தழுவிக் கொள்ளப் பெற்றுக் காஞ்சியிலே விளங்கும் லிங்கமூர்த்தியும், அடியார்கள் நெருங்கி வழிபடும் திருவாரூர்ச் சோலையின்கண் இருந்து தன்னைச் சேர்ந்தவர்களுக்கு வீட்டின்பத்தை அருளும் லிங்கமூர்த்தியும் ஆலவாயில் அமர்ந்திருக்கும் சொக்கலிங்க மூர்த்தியேதான் என அறிவீராக !

[இப்பாடல், மதுரையில் மீனாட்சியம்மைக்கே சிறப்பெல்லாம் உளதெனக் கருதுவார்க்கு அண்ணாமலை முதலிய தலங்களில் உள்ள பெருமானுக்கு உள்ள பெருமை சொக்கலிங்கப் பெருமானுக்கும உண்டெனபதைக் காட்டுவதற்காக எழுந்தது போலும்.]

தோற்றுவாய்

மனச்செம்மை யில்லார்மாட்டுச் செல்வமிகின் அவர் மக்கட் பண்பை இழந்து விடுகிறார்கள், அவர்களை மீண்டும் வறுமையாலன்றி மாற்ற இயலாதென்கின்றது இப்பாட்டு.

[ கலி விருத்தம் ]

119. பெருத்திடு செல்வம் பெற்ற போதுகண்
உருத்தெரி யாதுகண் ணொளிம ழுங்கிடும்
மருத்துள தேதெனி லவர்ம னத்திடை
தரித்திரம் எனவரும் மருந்திற் றீருமே.

சிலருக்குப் பெரிய செல்வம் (அவர் முயற்சியாலன்றி) வந்து நிறைந்தபோது கண்தெரியாமல் ஒளி மழுங்கிவிடும் (அக்குறை நீங்க) மருந்தொன்று உளது. அஃது யாதெனில், அவர்கள் உள்ளத்தில் (அச்செல்வமெல்லாம் பயன்படாது) வறுமை உணர்வு என வரும் மருந்து. அதனால் அவர் பார்வைக்குறை நீங்கும் என்க.

[கண்ணொளி மழுங்குதலாவது செல்வச் செருக்கினால் பண்டு தன்னோடுற்ற நண்பர்களையும், உறவினர்களையும் அறியார் போலச் செருக்கியிருத்தல். இதற்குக் காரணம் செல்வம் ஆதலின் அதற்குமாறாய தரித்திரம் அந்நோய் போக்கும் என்றார்.]

---

தோற்றுவாய்

திருக்குடந்தையில் விளங்கும் ஆராவமுதப் பெருமானைப் பழிப்பது போலும் புகழ் புலப்படுத்தல் என்னும் அணிநயம் விளங்கப் பாடப் பெற்றது இது.

[ நேரிசை வெண்பா ]

120. அய்யா திருக்குடந்தை ஆரா வமுதரே!
செய்யாத காரியங்கள் செய்தீரே?—மெய்யாக
மாமனையும் கொன்றீர் மாமியையும் கைப்பிடித்தீர்
காமனையும் பெற்றெடுத்தீர் காண்,

திருக்குடந்தையில் வீற்றருளும் ஆராவமுதராகிய ஐயனே! நீர் செய்யத்தகாத காரியங்களைச் செய்துள்ளீர்; என்னவென்றால் உண்மையாகவே உம்முடைய மாமனைக் கொன்றீர், பின் மாமியைக் கைப்பிடித்தீர், மேலும் காமனையும் பெற்றெடுத்தீர், காண்பீராக.

[மாமன் = கம்சன் : மாமி = இலக்குமி; அஃதாவது செல்வத்திற்குத் தலைவி என்ற கருத்தில் நின்று, மாமன் மனைவி என்னும் சிலேடைப் பொருளையும் தந்தது: ஆடவர் மகப்பேறுற்று ஈனுதல் இல்லை, நீர் பெற்றீர் என்றது திருமால் தன் எண்ணத்தால் காமனைப் பிறப்பித்தமை எண்ணி]

---

தோற்றுவாய்

அஞ்சலென்று அடைக்கலமானாரைக் காத்தருள்பவன் ஆராவமுதனன்றிப் பிறதெய்வமில்லை எனச் சான்று காட்டி வலியுறுத்துகிறது இப்பாட்டு.

[நேரிசை வெண்பா]

121. **வாராய் மடநெஞ்சே வானோர், திருக்குடந்தை**
**ஆரா வமுதைப்போல் ஆர்காப்பார்?—ஓரானை**
**வாவென்ற கூக்குரற்கு முந்திற்றே வன்முதலை**
**கூவென்று வீழ்ந்த குரல்.**

அறியாமை மிக்க நெஞ்சமே வருக! வானவர்களுள் திருக்குடந்தையில் விளங்கும் ஆராவமுதப் பெருமானைப் போல் அடைக்கலம் என அழைத்தவுடன் வந்து அருள் புரிந்து காப்பவர் யார்? (அவர் ஒருவரே காப்பார்; எவ்வாறெனின்) முன்பு ஒரு யானையானது 'வா' என்று அபயக்குரல் கொடுத்தவுடன் முந்தியதனாலும் அப்பொழுதே அக்கொடிய முதலையின் குரல் 'கூ' என வீழ்ந்ததனாலும் உணர்வாயாக.

[இவ்வரலாற்றைக் கஜேந்திர மோட்சத்துள் காண்க. அபயம் தந்து ஆளுதலேயன்றி அச்சத்திற் குரியவற்றையும் களைந்து அருள்புரிவான் எனக் குறித்த நயம் காண்க.]

---

தோற்றுவாய்

*தன்னை இடித்துரைத்த பாங்கனிடம் தன் உள்ளத்தைக் கவர்ந்த தலைவியின் பேரழகைக்கூறி அவளை மறக்க இயலாமையை ஒரு தலைவன் கூறுவது. இப் பாடல் அகத்துறையைச் சார்ந்தது.*

122. **சுறவேய் குழையும் மழைபொரு
கூந்தலும் சூழ்வளைத்த
நிறவே யழகார் புருவமும்
நெற்றியும் நேரிடையும்
அறவே கனதன பாரமும்
ஆரமும் அல்குலுஞ்செம்
மறவே லிணைவிழி யும்மற
வேனுயிர் வைகினுமே.**

*இடித்துரை கூறும் என் இனிய நண்பனே! யான் கண்டு துய்த்த காரிகையின் சுறுமீன் வடிவார்ந்த காதணிகளையும், முகில் போன்ற கரிய கூந்தலையும் சூழ்ந்து வளைந்து நிறத்தோடு விளங்கும் அழகிய புருவங்களையும் நெற்றியையும் மெல்லிய இடைஒடியும்படியாகக் கனத்துத் திரண்டுள்ள தனபாரங்களையும் அணிந்துள்ள முத்து வடத்தையும் அல்குலினையும் சிவந்த போர் வேலைப்போன்ற இணைந்த கண்களையும் என் உயிர் போயினும் மறவேன். மறக்க இயலாது.*

[புலமை நிரம்பார் பாடியது போலக் காணப்பெறு கிறது இப்பாட்டு.]

---

இப்பாடல் சிவபெருமானை நிந்தாஸ்துதியாகப் பாடிய தாகத் தெரிகிறது. பாட்டு செம்மையாக அமைய வில்லை.

[கலி விருத்தம்]

123. **மன்றென்ன குன்றென்ன மானம் அழிந்தவர்க்குக்**
**கொன்றென்ன குன்றென்ன கொலைகாரர் ஆனவர்க்கு**
**கன்றென்ன கிடாவென்ன கழுதைநந்த வனம் புகுந்தால்**
**ஒன்றென்ன ஒன்பதென்ன பொறையூர் அப்பரே.**

[இரண்டாமடியில் "குன்றென்ன" என்பது "வென் றென்ன" என்றும் இறுதியடியில் "பொறையூர் அப்பரே" என்பவை "ஒற்றியூர் அப்பருக்கே" என்றும் இருந்திருக்க லாம். கழுதை நந்தவனம் புகுந்தபின் அக்கழுதை கன்றுனு லென்ன கிடாவானுலென்ன தூய்மை குறைந்தது குறைந்ததே யாம். அவ்வாறே ஓட்டில் இறந்துண்டு மானம் அழிந்தவர்க்குப் பொன் மன்றமும் வெள்ளிக் குன்றமும் இந்ததனுல் பயனென்ன என்னும் கருத்தில் முதலடி அமைந்தது போலும். பிறவும் இவ் வாறே இறைவன் திருவிளையாடல்களை நிந்தாஸ்துதியாகப்பாடு கின்றவர் வேற்றுப் பொருள்வைப்பணியும் அமையப் பாடியுள் ளார்.]

---

தோற்றுவாய்

திருமுட்டத்தில் கோயில்கொண்டிருக்கும் வராகப் பெருமானைப் பொருளாகக்கொண்டு பாடிய அம்மானைப் பாடல் இது. திருமுட்டம் = ஸ்ரீமுஷ்ணம்.

[ தரவு கொச்சகக்கலிப்பா ]

124. **தெள்ளுதமி ழோர்போற்றுந் திருமுட்டத்**
**தெம்பெருமான்**
**உள்ளநில மெல்லாம் உழுதிருந்தா ரம்மானை**
**உள்ளநில மெல்லாம் உழுதிருந்தா ராமாயின்**
**கள்ளனென்று தாமிவரைக் கட்டுவதே னம்மானை?**
**கட்டாரோ போரிற் கதிர்மறைத்தா லம்மானை?**

தெளிந்த தமிழ் ஞானியர்கள் (ஆழ்வார்கள்) போற்றிவழிபடும் திருமுட்டத்தில் விளங்கும் எம்பெருமான் உள்ள நிலம் யாவற்றையும் உழுதிருந்தார். (என்று ஒருத்திகூற) அவர் அவ்வாறு நிலத்தை உழுது (பயிரிட்டுவாழும் உழவராயின்) இருப்பாரானல் அவரைக் கள்ளன் எனக் கட்டுவது ஏன்? (என்ருள் மற்ெருருத்தி) போரின் கண்ணே சென்று கதிரை மறைத்தால் கட்டாதிருப்பாரோ? எனவே கட்டினர் என்ருள் அவள்.

[ "தெள்ளுதமிழோர்" = ஆழ்வார்களையும் அடியார்களையும் குறித்தது. வராகப்பெருமான நிலத்தைக் குத்திக் கீண்டு இரணியகசிபுவினிடமிருந்து மீட்டதை எண்ணி உள்ள நிலமெல்லாம உழுதிருந்தார் என்ருள். அதனை உழுதுண்டு வாழ்பவராக எண்ணி, இந்த நற்றொழில் செய்பவரைக் களளனெனக் கட்டியதேன் என்ருள். அஃதாவது பாரதத்தில் மாயவனைச் சகதேவன் கட்டியதையும்—கோகுலத்தில் ஆய்ச்சியர் கட்டியதையும் உட்கொண்டு. கள்ளன = திருடன் = மாயன். அதறகு மற்றவள் போரிற் கதிர்மறைத்தால் கட்டாரோ என்ருள். நெறகளத்தில் உள்ள போரில் உள்ள நெற்கதிர்களை மறைத்தால் என்னும பொருள்படக் கூறினள். அஃதாவது: பாரதப் போரில் விசயன் கதிரவன் சாயுமுன் அபிமன்னனைக் கொன்ற செயத்தரசனைக் கொல்வேன் இனறேல் நெருபபில் வீழ்ந்திறப்பேன் என்ற சூளுறவை எண்ணிய கண்ணன அவனுக்காகத் தன ஆழியால் பிற்பகலிற கதிரவனைச் சிறிது பொழுது மறைத்தமையை உட்கொண்டு கூறினள். நிலத்தை உழுதல்—கள்ளனைக் கட்டுதல்—

கதிர்மறைத்தல் என்ற சொற்றொடர்களை வைத்து இரு பொருள் பட அம்மானையில் அமைத்துப் பாடியதே இப்பாடலின் நயமும் சிறப்புமாகும்.]

—oo✲oo—

தோற்றுவாய்

சிதம்பரமாகிய தில்லைச் சிற்றம்பலத்திற்கு முன்னர்ப் பள்ளிகொண்டிருக்கும் கோவிந்தராசப்பெருமாள் அரிதுயில் கொண்டிருப்பதற்குக் காரணம் கூறுவார் போல அத்தலத்தைச் சிறப்பித்துப் பாடிய பாடல் இது.

[ தரவு கொச்சகக்கலிப்பா ]

**125. ஊரென்றால் தில்லைவனம், உட்புகுந்தால் பாம்புபுலி**
**பாரென்றால் சுடுகாடு பள்ளிகொள்வ தெப்படிதான்?**
**தேரென்றால் ஆகாசம் தில்லைக்கோ விந்த..........**
**நீரென்றால் பயங்காலி நித்திரையும் வாராதே.**

ஊர் என்று சொன்னால் அது தில்லை வனமாக உளது. மேலும் அதனுட் புகுந்து பார்ப்போமானால் ஆண்டு பாம்பும் புலியுமே காணப்படுகின்றன. மேலும் பார் என்று சொல்லிப் பார்க்கப்புகுந்தால் சுடுகாடாக உள்ளது. (அஞ்சாமல் உள்ளத்தமைதியோடு) பள்ளி கொண்டு உறங்குவது எவ்வாறாகும்? (இயலாது, மேலும் விரைந்து மீளுவோம் என்று) தேரைப் பார்த்தால் அஃது ஆகாசமாக உள்ளது. தில்லைக் கோவிந்தராசப் பெருமாளுக்கு நீர் என்று சொன்னால் பயங்காலியாவார். எனவே அவருக்கு நித்திரை எவ்வாறு வரும்? வராது.

[தில்லைச் சிற்றம்பலத்தைச் சிறப்பிக்கும் இப்புலவர் அவ் வூரின் பெயராகிய தில்லை 'வனம்' என்றதைக் காடு எனத் தொனிக்கும்படியாகவும் பதஞ்சலி வியாக்கிரபாதர்களைக் காட்டில் வாழும் பாம்பும் புலியும் எனத் தொனிக்கும்படியாகவும், இறை

வன் ஆடும் இடத்தைச் சுடலைக்காடு என்றும் தேரினை ஆகாசம் (ஆகாசம் எனின் இல்லை என்றபடி) என்றும் குறிப்புப் பொருள் பட வைத்து, ஆண்டுள்ள கோவிந்தராசப்பெருமாள் பள்ளி கொண்டாலும் நித்திரை வாராமல் இருக்கின்றார்போலும் என நகைச்சுவை தோன்றப் பாடியுள்ளார். இப்பாடலுள் எழுத்துக்கள் பிறழ்ந்துள்ளமையின் சுவைமுழுதும் அறியக்கூடவில்லை. 'பயங்காலி' இது பயங்கொள்ளி என்றிருக்க வேண்டும் போலும்.]

---

தோற்றுவாய்

சிவபெருமானின் நெருப்புவண்ண மேனியையும் திருமுடியில் விளங்கும் கங்கையையும் பொருளாகக் கொண்டு அம்மானைப் பாடலால் சிறப்பித்துப் பாடியது இப்பாடல்.

[ தரவு கொச்சகக்கலிப்பா ]

126. ஆரத் தடவயல்சூழ் ஆர்மாதை வாழழகர்
தாரொத்த மேனித் தழலர்காண் அம்மானை
தாரொத்த மேனித் தழலரே யாமாயின்
ஈரத் தவியா திருப்பதேன் அம்மானை ?
ஈரம் பெருநெருப்பிற் கில்லையே அம்மானை !

உயிர்களெல்லாம் உண்டு வாழ்தற்கான விளையுள் தரும் அகன்ற பெரிய வயல்கள் சூழ்ந்து நிறைந்துள்ள மாத்தூரின்கண் கோயில் கொண்டெழுந்தருளியுள்ள அழகர் (சுந்தரப்பெருமான்) தம் மாலை நிறைந்த திருமேனி முழுதும் நெருப்பாகவே கொண்டுள்ளார் காண்பாயாக! (என ஒருத்தி கூற) அவ்வாறாயின் அத் திரு

மேனியின் தழல் (சடையிலுள்ள கங்கை) நீரால் அவியா திருப்பதெதனல்? (என்று வினவ) நீ அறியாய்; பெரு நெருப்பிற்கு ஈரம் உண்டோ? இல்லையே! என்ருள்.

[மாதை = மாத்தூர். பெருநெருப்பிற்கு ஈரமில்லை என்ற குறிப்பால் இறைவனின் பேராற்றலை விளக்கினுளாம்.]

---

தோற்றுவாய்

தினைப்புனத்தைக் காவல்செய்யும் ஒரு மங்கையின் குரலைக்கேட்ட ஒருவன் புனைந்துரைவகையால் அதனைச் சிறப்பித்தது. இது கைக்கிளையின் பாற்படும்.

[கட்டளைக் கலித்துறை]

127. பேயோ எயினர் முதுமலை
யத்துப் பிறந்த (பெண்ணை)
ஏயோ தினைப்புனம் காக்கவைத்
தார்எழு பாருமுய்ய
மாயோன் எனவந்த மாமால்
அரங்கர் மணிவரைமேல்
ஆயோ எனுங்குரல் ஐயோ
புனத்தை அழிக்கின்றதே!

ஏழுலகத்தையும் தன் அருளால் வாழ்விக்க வந்த 'மாயோன்' என ஞானிகள் கூறிப்புகழ இம் மண்ணுலகில் தோன்றி விளங்கும் பெரிய திருமாலாகிய திருவரங்கரின் அழகிய மலைகளுள் ஒன்ருகிய முதுமலையத்தில் இருக்கும் எயினர்கள், பேய் போலும் இரக்கமில்லாதவர்களே! (ஏனெனின்) அருமையாகப் பிறந்த இம் மங்கையை (க்கொடிய விலங்குகள் திரியும்) தினைப்புனத்

தைக் காவல் செய்யுமாறு வைத்துள்ளார்களே! அவள் தான் (தினைப்புனத்தில் வந்து மொய்க்குங் கிள்ளைகளை ஒப்புதற்காக) எழுப்பும் 'ஆ' 'யோ' எனுங்குரல், புனத்தை (காப்பதற்குமாறுக) அழிக்கின்றதே! இஃது வியப்பேயாம்.

[எயினர்=மலைவாழ் மக்களாகிய வேடர். மெல்லியலார் என இரங்காமல் புனங்காக்க வைத்தமையால் "பேயோ" என்றான். 'ஆ' 'யோ' என்பன கிளிகளை ஓப்புங்குரல். அக்குரல் கிள்ளை மொழிபோல் இனிதாக இருந்தமையின் கவண் முதலியவற்றிற்கு அஞ்சிப் பறந்து சென்ற கிளிகள் அக்குரலைத் தம் இனமாகிய கிளியின் குரலாக எண்ணி மீண்டுங் கூட்டமாகப் பறந்துவந்து தினைகளை உண்டனவாதலின் "புனத்தை" அழிக்கின்றதே! என்றான்].

---

தோற்றுவாய்

உலகியல் துன்பத்திற்கு அஞ்சிய ஓர் அடியார் நீயே என்னை ஒறுத்து ஆட்கொள்ள வேண்டுமென அங்கயற் கண்ணம்மையிடம் முறையிடுவதாக அமைந்துளது இப் பாடல. பாடம் பிறழ்ந்துள்ளதாகத் தெரிகிறது.

[கட்டளைக் கலித்துறை]

128. **பாட்டிற் படவரு மோஅடி**
**யேன்செய்த பாவத்தினாற்**

**பூட்டிக் கழுத்தறுத் தாலும்நன்**
**றேபுரம் மூன்றெரியச்**

**சாட்டிச் சரந்தொட்ட ஏழரை**
**நாட்டுச் சனியன்கையில்**

**காட்டிக் கொடாதேயம் மாகூடல்**
**வாழுங் கயற்கண்ணியே!**

மதுரையில் விளங்கும் அங்கயற்கண்ணம்மையாகிய தாயே! அடியேன் செய்த பாவங்களைப் பாட்டினாற் பாடவருமோ. அப்பாவங்காரணமாக என்னை வாள் கொண்டு பூட்டி என் கழுத்தை அறுத்தாலும் எனக்கு நன்றே எனக்கொள்வேன். அன்றி முப்புரங்கள் எரியு மாறு சாட்டி, இறைவனின் அம்புகளை எய்யச் செய்த ஏழரைநாட்டுச் சனியன் கையில் என்னைக் காட்டிக் கொடுத்துவிடாதே அம்மா! காத்தருள்வாயாக.

['பாடவருமோ' என்றது குறைத்தல் விகாரமாய்ப் 'பட வருமோ' என நின்றது. ஏழரைநாட்டுச் சனியன்தான் முப்பு ராதிகளின் அறிவைத்திரித்துச் சிவபெருமானின் அம்புக்கு இரையாக்கியது என்னும் கருத்தால் புரம் மூன்றெரியச் சாட்டிச் சரந்தொட்ட ஏழரைநாட்டுச் சனியன் என்றார். சாட்டி=சார்த்தி என்பதன் கொச்சை வழக்கு. தொட்ட=தொடச்செய்த எனப் பிற வினையாகக் கொள்ள நின்றது. சனி பிடித்தால் அறிவு திரியுமாதலின் நின்னை வேண்டி வழிபடவும் இயலாதென்னும் கருத்தால் காட்டிக்கொடாதேயம்மா என்றார். இச்செய்யுள் நன்கமைய வில்லையாதலின் ஒருவாறு பொருள்செய்யப்பட்டது.]

---

தோற்றுவாய்

திருவரங்கப் பெருமான்மேல் மையலுற்ற ஒருபெண் ணின் நிலைக்கு இரங்கிச் செவிலித்தாய் தன் வருத்தந் தோன்றக் கூறியது. இப்பாடல் அகத்துறையைச் சார்ந்தது.

[ எண்சீர் ஆசிரிய விருத்தம் ]

129. **செழுந்தளிர்க்கை மலர்குவிக்கும் தலைமேல் வைக்கும்**
**தென்னரங்கம் எத்திசைக்கே செல்வே**
**[னென்னும்**

**அழுந்திமைக்கண் புனல்சொரியும் ஆவி சோரும்**
**அரங்கரே யான்செய்வ தறியேன் என்னும்**
**விழுந்திருக்கும் நினைந்தெங்கும் விழிக்கும் பார்க்கும்**
**வேர்விழுந்த கங்குலின்னும் விடியா**
**[தென்னும்**
**எழுந்திருக்கும் திருவரங்கம் பெரிய கோயில்**
**என்றரற்றும் என்பேதைக் கென்செய் வேனே!**

என் உயிரினும் இனிய இப்பேதையானவள் தன்னிலை மறந்தவளாய்த் தன் இரண்டு செழுமையான தாமரை மலர்போன்ற கைகளைக் குவிக்கும், குவித்தபின் குவித்தபடியே தலைமீது வைத்துக்கொள்ளும், வைத்த படியே தென்னரங்கம் ஆகிய திருப்பதி எத்திசையில் உள்ளது; அத்திசை நோக்கிச் செல்வேன் என்று பிதற்றும். அப்பொழுதே மூடியிருக்கும் கண்ணிமை கள் திறவாமலேயே அருவிபோலப் புனலைச் சொரியா நிற்கும். உயிர்தளர்ந்து சோரும். திருவரங்கப்பெரு மானே! யான் செய்வது ஒன்றும் அறியேன்; என் செய்வேன் என்று வாய் வெறுவி நிற்கும். ஆங்கே உடல் தளர்ந்து கீழே விழும். விழுந்துகிடந்தவாறே அப்பெரு மானை நினைந்து விழிக்கும். விழித்து எங்கெங்கும் பார்க் கும். (இருள் புலராமையாலே) வேரூன்றி நிலைபெற் றிருக்கும் இப்பொல்லாத இரவு இனி விடியாது என்று வெருவும். வெருவி எழுந்திருக்கும். (எழுந்து அதோ) திருவரங்கம்; (அதோ, எம்பெருமான் திகழும்) பெரிய கோயில்! பெரிய கோயில்! என்று அரற்றும். ஐயோ இவ்வாறு அரற்றித் துயருறும் என் பேதைக்கு யான் என் செய்வேன்? பெருமானே நீயே அருளவேண்டும்.

[காதலாகிக் கசிந்து கண்ணீர்மல்கிப் பரவசமுற்று அரற்றும் விரகதாபநிலை நன்கு வருணிக்கப்பெற்றுள்ளது. இப்பாடலுள்

'நிலைபெற்ற இருள்' என்பாள் 'வேர்விழுந்த கருங்குல்' என்ருள். கங்குல்=இருள். 'அறிவு முற்றப்பெருதாள்' என்பாள் 'பேதை' என்ருள். அவள் துயரைப்போக்க என் செய்வேன் என்றபடி].

---

தோற்றுவாய்

திருப்புறம்பை என்னும் தலத்துள் கோயில் கொண்டிருக்கும் இறைவன்பால் வேட்கைகொண்ட தலைவி ஒருத்தி இறைவனும், தானும் பலவகையாலும் நிகராக விளங்கும்போது இறைவனுக்குத் தோற்ற மாரவேள் தன்னை மட்டும் வருத்துவது எவ்வாறு? எனத் தன் மையல் தோன்றக் கூறுகிருள். இதனுள் தனக்கும் இறைவனுக்கும் உள்ள ஒற்றுமையைக் கூறும் பகுதி இலக்கியச் சுவைதோன்ற மிளிர்கின்றது.

[பதினுன்குசீர் கழிநெடில் ஆசிரிய விருத்தம்]

130. நலமொடு தரித்த நவ்வியுண் டுனக்கு
நயனமாம் நவ்வியுண் டெனக்கு
நதிதிகழ் சடைமேல் பிறையதுண் டுனக்கு
நன்னுதல் பிறையதுண் டெனக்கு
இலகிடுங் கயிலை மேருவுண் டுனக்கு
இருதன மேருவுண் டெனக்கு
இப்படி உனக்கு நிகர்த்திடு எனக்கின்(று)
இக்குவேள் எதிர்ப்பதே துரையாய்?
பலவுமா வனமும் சண்பக வனமும்
வன்னியும் புன்னையும் கோங்கும்
பாதிரித் திரளும் தாழையுங் கமுகும்
பழமுதிர் வாழையும் தெங்கும்

**தலமெலாந் தழைக்கத் தழைத்தரு ளாலுஞ்**
**சந்ததம் வளமையா கையினல்**
**தருக்குலம் புடைசூழ் திருப்புறம் பையில்வாழ்**
**சம்புவே சாட்சிநா யகனே!**

பலா மரங்களும் மா மரங்களும் மிக்க வனமும், சண்ப வனமும் வன்னி மரமும், புன்னை மரமும் கோங்கும், பாதிரித் திரளும், தாழையும் கமுகு மரங் களும் பழம்முதிர்ந்து தொங்கும் வாழையும், தென்னையும் இடமெங்கும் தழைக்க, தழைத்து முதிர்ந்தளிக்கும் உன் அருளாலும் எந்நாளும் வளமை மாருது விளங்கும் தருக்குலங்கள் புடைசூழ்ந்து விளங்கும் திருப்புறம்பை என்னும் தெய்வப்பதியுள் வாழும் சம்புவே! யாவற் றிற்கும் சாட்சியாக விளங்கும் நாயகனே! நன்மைமிக நின் திருக்கரத்திலே நீ தாங்கும் நவ்வியுண்டு உனக்கு. அவ்வாறே அழகிய விழிகளாகிய நவ்வியுண்டு எனக்கு. மேலும் கங்கை திகழும்படியான உன் சடாமுடியின் மேல் பிறைமதியுண்டு உனக்கு. அவ்வாறே நறிய நுத லாகிய பிறை மதியுண்டு எனக்கு. மேலும் விளங்கித் தோன்றும் கைலாயமாகிய மேரு மலையுண்டு உனக்கு. அவ்வாறே இரண்டு தனங்களாகிய மேருமலைகளுண்டு எனக்கு. இவ்வாருக உனக்கு ஒப்பாகத்திகழும் எனக்கு இந்நாள் (உன்னிடம் தோற்று நெற்றிக்கண்ணுல் அழிந்தவனுகிய) கரும்புவில்லை ஏந்திய மாரவேள் எதிர்ப் பாகத் துன்புறுத்துவதற்குக் காரணம் என்னவென்று உரைப்பாயாக!

[நவ்வி=மான், இலங்கிடும் கைலை என்பது தொகுத்தல் விகாரமாய் இலகிடு கைலை எனநின்றது. தனம்=நகில். நிகர்= ஒப்பு. இக்கு = கரும்பு. கமுகு=பாக்குமரம். "அருளாலும்" கருணையால் புரக்கும் என்றயடி. தருக்குலம் = மரக்கூட்டம்.

திருப்புறம்பை=திருப்புறம்பியம் என்னும் பதியாக இருக்கலாம் எனத் தோன்றுகின்றது. உலகெலாம் அழியுங் காலத்தும் தானழியாது நிற்கும் தலைவன் ஆதலின் "சாட்சிநாயகனே" என்றார்.]

தோற்றுவாய்

'திம்மப்ப மகிபாலன்' என்னும் குறுநிலமன்னரின் வள்ளன்மையையும் உதவியையும் சிறப்பித்துப் பாடிய பாட்டு. இதன் மூன்றும் அடி எவ்வாற்றானும் செப்பனிட இயலாததாக உளது.

[பன்னிருசீர் ஆசிரிய விருத்தம்]

131. பொங்காழி நீர்முகந் தருளுமுகி லுக்குதவி
பூதலம் புரிவதுண்டோ?
பொறையுயிர்த் திடுமன்னை அருமைய
[றிந்துதவி
போதச்செய் வாருமுளரோ?

அங்காத ரத்தினுல் அடையப்பிர தாபஞ்செய்
ஆருயிர் மீதளித்தாய்
ஆதலால் நீயுதவும் உதவிக்கு வேறுதவி
அம்புவியி லுண்டாகுமோ

[சங்கிராம தண்டதோள் சத்துருகுலதானகேச
கண்டீர் வாசமண்பை காடவி
வாசுதேவ சரணம் போ போசசஞ்சரி
தசாம் பிற்சாய]

சிங்காத னுருடைய கச்சிவரு கத்தூரி
செல்வக்கு மாரதீரா!
செயவிசய விசயரா கவபோசன் மனமெச்சும்
திம்மப்ப மகிபாலனே!

பெருமை பொருந்திய சிங்காதனத்திற்கு உரிமை யுடைய, திருக் காஞ்சிமாநகரில் தோன்றிவரும் ‘கத்தூரி’ என்னும் பெருமகனுக்கு அருமையாகத் தோன்றிய செல்வக்குமரா! (பகைவரை வென்று வாகை சூடும்) தீரா! வெற்றிமேல் வெற்றிபெற்றோங்கும் செயவிசய விசயராகவன் என்னும் போசமன்னர் உள்ளமுவந்து பாராட்டும்படியான திம்மப்ப மகிபாலனே! அலைபொங் குங் கடலிடையே படிந்து அந்நீரை முகந்து தூய மழை யாக அருள்புரியும் வான்முகிலுக்கு உலகோர் கைம் மாறு செய்வதுண்டோ? மேலும் ஐயிரண்டு திங்கள் அருந்துன்பத்துடன் கருவைச் சுமந்து பெற்றிடும் அன்னையின் அருமையை அறிந்து அவளுக்குக் கைம் மாறாக ஒப்பான உதவி செய்வார் இவ்வுலகத்தில் உண்டோ? இல்லை. அவற்றை ஒப்பப் பேரன்பினாலே உன் புகழைக் கேட்டு உன்னிடம் வந்தடைந்தோருக் கெல்லாம் அவர்தம் உயிரும் உணர்வும் மகிழ அருள் புரிந்தளித்தாய். ஆதலின் நீ உதவும் இவ் அரிய உத விக்குக் கைம்மாறாக வேறுதவி இந்த அழகிய மண் ணுலகில் உண்டோ? இல்லை ஆதலின் நீ வாழ்வாயாக.

[மூன்றும் அடிக்குப் பொருள் எழுதவில்லை. அதனுள் “கஸ்தூரி” என்னும் இந்தத் திம்மப்ப மகிபாலனின் தந்தை யின் சிறப்புபட்டுமே யமைந்துளது ஆதலின் பாடலின பொருள் புலப்பாட்டிற்கு அது தடையாக இல்லை. இப்பாடலுள் எடுத் துக்காட்டிய உவமைகள் நயம் பொருந்தியவை. ஆழி=கடல். முகில்=கார்மேகம். பொறையுயிர்த்தல்=கருவையீனுதல். போத =நிறைய (ஒப்பாக). அங்கு=உவம உருபு. ஆதாம்=பேரன்பு. அம்புவி=நீரால் சூழப்பெற்ற உலகம். மகிபாலன் = மண்ணுல கைக் காப்பவன்.]

தோற்றுவாய்

வெறும் வேடம் கொள்ளாமல் உண்மையாகவே உனது பாதத்தைத் தொழுதுய்ய அருள்வாயக, என மீனாட்சியம்மையை வேண்டுகிறார் ஒரு அடியார்.

[கட்டளைக் கலித்துறை]

132. **ஊனாட்சி யானபல் சின்னமி**
**டாமல் உனதுபதம்**
**நானாட்சி யாகத் தொழுதிடு**
**வேன்சொக்க நாயகர்க்குத்**
**தானாட்சி யான சவுந்தரி**
**யே! சைவ நாயகியே!**
**மீனாட்சி என்னுமம் மா! சிவா**
**நந்த விளக்கொளியே!**

எனது ஊனுடம்பின்மேல் ஆட்சி செய்யும் திருநீறு கண்டிகை முதலிய சின்னங்களை இட்டு (உன்னை மறந்து) வீணாகாமல் நானாட்சியாக உன்னையே தொழுதிடுவேன். மதுரை சொக்கநாயகர்தான் ஒருகூறாக ஆட்சி செய்யும் சவுந்தரவல்லியே! சைவ நாயகியே! மீனாட்சி என்று அடியார்கள் போற்றித் தொழும் தாயே! சிவாநந்தமாகிய விளக்கின் ஒளியே! நீ அருள்வாயாக!

[நான் என் புலன்களை ஆட்சிசெய்து என்பார் நானாட்சியாக என்றார். சொக்கநாதரை ஆட்சிசெய்யும் என்றும் பொருள் காணலாம். மதுரைக்கு அரசியாதலின் மீனாட்சி. கண்ணால் அருள்புரிபவள் என்பதை விளக்கி நின்றது.]

---

தோற்றுவாய்

இறைவன்மேல் வேட்கையுற்ற மங்கை யொருத்தித் தன் விரகதாபம் தோன்றக் கூறுவது இப்பாடல்.

[ தரவு கொச்சகக்கலிப்பா ]

133. **செங்கரும்பை வில்வளைத்துச் சிலையிறுக்கி**
**நாணேற்றிப்**
**பங்கயப்பூ வாளிதொட்டுப் பாவிமதன்**
**வருகின்றான்**
**இங்கொருத்தர் துணைகாணேன் எப்படிநான்**
**தனியிருப்பேன்**
**மங்கை,யெங்கள் ஆனந்த வல்லிமகிழ்**
**நாயகரே!**

ஆனந்தவல்லி மகிழும் நாயகரே! செங்கரும்பை வில்லாக்கி வளைத்துச் சிலையிறுக்கி நாணினை ஏற்றித் தாமரை மலராகிய அம்பினை அதன்கண் வைத்துத் தொடுத்துப் பாவியாகிய மன்மதன் என்னை நோக்கி எய்வதற்காக வருகின்றான் மங்கையாகிய எனக்குத் துணைபுரிவார் (நின்னையன்றி) ஒருவரையுங் காணேன். மெல்லியலாகிய யான் எவ்வாறு தனியிருப்பேன்? வந்து அவனை வென்றருள்வீராக!

[பங்கயப்பூ=தாமரை. வாளி=அம்பு. "நெடுங்கமலம் நினைவிழக்கும" ஆதலின் பங்கயப்பூவாளி என்றாள். தொட்டு=தொடுத்து. தனியிருப்பாரை வருத்துபவனாதலின் 'பாவி' என்றாள்.]

---

தோற்றுவாய்

மகப்பெற்ற தாய் ஒருத்தித் தலைவன் புறத்தொழுக்கங்கருதி வருந்திக் கூறுவது. இஃது "பாலனைப் பழித்தல்" என்னும் அகத்துறையின்பாற்படும்.

[கலித்துறை]

134. **அரும்பாக்கி யகொங்கை பாலாக்கி...........**
**..................... அப்பன்நெஞ்சை**

**இரும்பாக்கி என்னெஞ்சைப் பித்தனை
யாக்கியென் அங்கையரைக்
கரும்பாக்கி என்னையும் வேம்பாக்கி
இவ்வண்ணம் கண்டனையே
பெரும்பாக்கி யம்மல்ல வோஐய
ரே! உம்மைப் பெற்றதன்றே?**

என் அருமை மகவாகிய ஐயரே! தாமரை யரும்பு போன்ற கொங்கையைப் பாலாக்கி (........ உன் அருமை) அப்பனுடைய நெஞ்சத்தை இரும்பாக்கி என் நெஞ்சத்தைப் பித்துப் பிடித்த வளை யாக்கி என் தங்கை யரை (உன் அப்பன் விரும்பும்) கரும்பாக்கி (அந்நிலை யில்) என்னையும் வேம்பாக்கி இவ்வாருக ஓர் மாறுபாட் டினை உண்டாக்கி விட்டாயல்லவோ? உம்மைப் பெற் றது எனக்கு ஒரு பெரும் பாக்கியமல்லவோ?

[மகவை ஈனுமுன் இருந்த நிலையை அரும்பு என்ருள். ஈன்ற தாயாதலின் பாலாக்கி என்ருள். தன்மேல் இருந்தவேட்கை மாறியதாக எண்ணி இரும்பாக்கி என்ருள். தலைவனையே எண்ணி அவ் எண்ணத்தையும் வெளியிட இயலாமல் வருந்து கின்ருளாதலின் பித்தளையாக்கி என்ருள். பித்து—அளை எனப் பிரித்துப் பொருள்காண்க. இரும்பு, பித்தளை என்ற நயமும் காண்க. அங்கையர்—தங்கையர். பரத்தையரைத் தலைவி தங்கை என்று குறித்தல் அகப்பொருள் இலக்கியமரபு. தனக்குப் பின் தன் தலைவனுல் விரும்பப்பெற்று கூடுகின்றவர்களாதலின் பரத்தையரைக் கரும்பு என்றதற்கேற்பத் தன்னை 'வேம்பு' என் ருள் அவன் காதலின்மை தோன்ற. மகனை 'ஐயரே' என்றது வருத்தத்தின்கண் வந்த ஒருவரைக் கூறும் பன்மைக்கிளவி; குறிப்பு மொழி. அன்றும் ஏயும் அசைகள்.]

*தன்னுடைய உடலுறுப்புக்கள் யாவும் திருவரங்கப் பெருமானையே வழிபாடாற்ற வேண்டுமென்று கருதி அடியார் ஒருவர் விரும்பிக் கூறுகிறார்.*

[ நேரிசை வெண்பா ]

**135. கேசவனை யேசெவிகள் கேட்க! திருவரங்கத்(து)**
**ஈசனையே சென்னி இறைஞ்சிடுக!—நேசமுடன்**
**கண்ணனையே காண்கஇரு கண்ணிணைகள்! காயாம்பூ**
**வண்ணனையே வாழ்த்துகவென் வாய்!**

*என் செவிகள் கேசவனின் திருநாமங்களையும் அவன் பெரும் புகழையுமே கேட்பதாக! என் தலை திருவரங்கத்திற் பள்ளிகொண்டிருக்கும் ஈசனையே இறைஞ்சி வழிபடுவதாக! என் இரண்டு கண்களும் பெரு விருப்பத்தோடு கண்ணனின் திருவடிவத்தையே காண்பதாக! என் வாய் அந்தக் காயாம்பூ வண்ணனையே வாழ்த்துவதாக !*

['தலையே நீ வணங்காய்' என்னும் திருநாவுக்கரசரின் தேவாரப் பாக்களை நினைவூட்டுகின்றது இப்பாடல். இதனுள் கேசவன், திருவரங்கத்து ஈசன், கண்ணன், காயாம்பூவண்ணன் எனக் கூறியவாற்றால் திருமாலின் பல மூர்த்தங்களும் பெயர்களும் ஒரே பரமபொருளைக் குறிக்கும் என்ற தத்துவத்தைப் பெறப்படவைக்கும் நயம் காண்க.]

---

தோற்றுவாய்

*ஒருவன் முன்கூடிய குறியிடத்துச் சென்ற தலைவி ஒருத்தி அவன் பிரிவாற்றாமையால் வருந்திக் கூறியது. அகப்பொருளைச் சார்ந்தது இப்பாடல்.*

[கட்டளைக் கலித்துறை]

136. ஏவென்றி டாத இலங்கே
சனையின்று போய்விடிய
வாவென்ற பள்ளிகொண் டான்மழ
வேசன் மணிவரைமேற்
காவென்று சென்றிருந் தேன்அன்பர்
போனதைக் கண்டுசற்றே
கூவென் றதுகுயில் அப்போ
மதன்படை கோவென்றதே!

விற்போரில் தன்னை வெல்ல மாட்டாமல் தோற்ற இலங்கேசனாகிய இராவணனை இன்று போய் (நாளை) விடிய மீண்டும் வா என்று அருள் செய்த பள்ளி கொண்ட மழவேசன் நாட்டின்கண் விளங்கும் அழகிய வரையிடத்தில் உள்ள சோலை என்று கருதிச் சென்றி ருந்தேன் தலைமகன் எனைப் பிரிந்து போனமையை அறிந்து குயிலானது சிறிதே 'கூ' என்ற குரலை எழுப் பியது, அப்பொழுது மாரவேள் படையாகிய என்தோழி கள் வாய் 'கோ' என்றதே, என்ன வியப்பு!

['பள்ளிகொண்டமழவன்' ஓர் குறுநில மன்னன் இவனைப் பற்றிய பாக்கள் மூன்றும் வந்துள்ளன. ஈண்டு அவனைத் திருமாலாகவே கருதி இராமபிரான செயலை அவன்மேல் ஏற்றிக் கூறப் பட்டது. விடிய என்றது நாளை என்ற பொருளை தந்தது. மணி= அழகு. வரை = மலை, இரத்தினங்கள் மிக்குள்ள மலை எனறு மாம். தலைவனை முதற்கண்காட்சியில் கண்ட இடமாதலின் அங்குச் சென்றாள் தன் பிரிவுத்துயர் சிறிதே நீங்குமென்று கருதிச் சென்றாள் என்க. சற்று=சிறிது. பிரிவுத்துன்பத்தை மிகுவிக்கும் குயில் கூஎன்றது. அத்துயர் தாங்காள் எனறு கருதித் தோழிமார்கள் தலைவன் வருகின்றான் என்ற பொளில் 'கோ, கோ' என்றனர். கோ=தலைவன்—பெண்டிரை மாரவேளுக்குப் படையென்பாராதலின் மதன் படை எனப்பட்டது.]

—oo:o:oo—

தோற்றுவாய்

பல்லவர்கோன் நந்திவர்மனைக் கலந்தமையால் வறுமை நீங்கிப் பேறு பெற்றோம் எனப் பரத்தையர் தம்முள் கூறுவதாக அமைந்துள்ளது இப்பாட்டு. இது கலம்பகத்தில் வரும் துறைகளைச் சார்ந்தது. நந்திக் கலம்பகத்தில் காணப்பெறவில்லை. எனவே தனிப்பாடலாக இருக்கலாம்.

[ நேரிசை வெண்பா ]

137. செய்ய கமலத் திருவுக்கு முன்பிறந்த
தையல் உறவுந் தவிர்ந்தோமே—வையம்
மணக்கும் பெரும்புகழான் மாறைவளர் நந்தி
இணக்கம் பிறந்தநா ளின்.

இவ்வுலகெங்கும் பரந்து விளங்கும் பெரும் புகழை உடையவனும மாறை என்னும் பதிக்குத் தலைவனுமாகிய நந்திவர்மப் பல்லவ வேந்தனோடு கூடி மகிழும் நாளி லெல்லாம் செந்தாமரை மலரில் விளங்கும் திருமகளுக்கு முன்பிறந்தவளான மூதேவியின் தொடர்பு நீங்கி வாழ்கின்றோமல்லவோ ?

[முன் பிறந்த தையல்=மூதேவி. நந்தியோடு கூடாத நாளில் களிப்பும் செல்வமுமின்றி மடிந்திருக்கும் நிலையை எண்ணித் தவிர்ந்தோமே என்றார்கள். மாறை=ஓரூர். இணக்கம்=கூட்டம் இக்கூட்டம் கனவில் நிகழ்ந்ததை உண்மை எனக்கொண்டு கூறியதாகக்கொள்க.]

தோற்றுவாய்

விரகதாபத்தால் வருந்தும் ஒருத்தி ,தென்றல் என் மீது படின் உயிர்வாழேன் என அஞ்சிக் கூறியது இப் பாட்டு.

[ நேரிசை வெண்பா ]

**138. கண்டங் கரியான் கயிலைமலை காண்பனே**
**அண்டர்பி ரானின்கைம் மாஅறிவன்–புண்டரிக**
**வாவிமங்கை வேந்தே மலையா னிலம் இந்தப்**
**பாவிமங்கை மீதே படின்.**

தாமரைமலர்கள் பூத்து விளங்கும் வாவிகள் நிறைந்த 'மங்கை' என்னும் ஊருக்குத் தலைவனே! தென்றற் காற்று பாவி மங்கையாகிய என்மீது வீசினால், அப் பொழுதே நீலகண்டனாகிய சிவபெருமான் வாழும் மலையைக் காண்பேன், அன்றி தேவர் தலைவனாகிய இந்திரன் ஊர்ந்து செல்லும் வெள்ளானையை அறிந்து அங்கிருப்பேன்.

கண்டங்கரியான் = நஞ்சுண்ட கண்டத்தையுடைய சிவன். அண்டர்=தேவர். கைம்மா = துதிக்கையை உடைய யானை. தென்றலின் காமவேகம் தாங்காமல் உயிர்விடுவேன் ஆதலின் உடனே தேவலோகத்தையும் கைலாயத்தையும் அறிவேன், காண்பேன் என்றாள். அதன் கொடுமையைச் சமத்காரமாகக் கூறியநயம் சுவையுடையது.புண்டரிகம்=தாமரை. வாவி=குளம் வாவிப் புண்டரிக மங்கைஎன மாற்றி திருமகளுக்குக்கணவனாகிய திருமால்போன்றவனே எனப் பொருள்கொள்ளினும் அமையும். 'மங்கை' எனப் பல ஊர்ப்பெயர்கள் உள்ளன. மலயானிலம்= பொதியமலையிடத்து இருந்துவரும் காற்றாதலின் தென்றற்கு இதுவும் ஒரு பெயர். மலயம்=பொதிகை. அநிலம=காற்று.]



தோற்றுவாய்

திருவரங்கப்பெருமானைத் தான் விரும்பி அவர்பால் தன் காதலைச் செப்பி வருமாறு வண்டினைத் தூதுவிட்ட தலைவி ஒருத்தி அது செம்மையாகச் செயலாற்றுமோ ஆற்றாதோ, என ஐயுற்றுக் கூறுவது. 'இப்பாடல் வண்டுவிடுதூது' என்னும் கலம்பகத் துறையைச் சார்ந்தது.

[ நேரிசை வெண்பா ]

139. **மறக்குமோ காவில் மதுவருந்தி? அப்பால்**
**பறக்குமோ? சன்னிதிமுன் பாமோ?—சிறக்கத்**
**தருவரங்கள் கேட்குமோ தாழ்க்குமோ அங்கே**
**திருவரங்கர் பால்போன தேன்?**

தோழீ! என்னுடைய ஆராக்காதலை எடுத்துக்கூறி அவர் தரும் வரங்களைப்பெறயான் திருவரங்கப் பெருமானிடத்து தூது போகவிட்ட வண்டானது, திருவரங்கத்தைச் சூழ்ந்துள்ள பூங்காவில் விளங்கும் மலர்களிடையே தேனையுண்டு தான் சென்ற செயலை மறந்துவிடுமோ? (மலர்கள் தரும் மதுவை உண்டு மயங்கி விடாமல்) அப்பால் அவர் திருக்கோயிலை நாடிப் பறக்குமோ (பறந்து சென்று சிறந்த முறையில் என் வேணவாவைக்கூறி அவர் தரும் வரங்களைக் கேட்குமோ? (அவருடைய பேரழகில் ஈடுபட்டுச் சென்றதை மறந்து) அங்கேயே தங்கிவிடுமோ? யாதொன்றும் அறியாமல் என் உள்ளந் தடுமாறுகின்றதே!

[கா = சோலை. மது = தேன். சன்னிதி = திருமுன்பு. வரங்கள் = அப்பெருமான் தரும் உடன்பாட்டு மொழிகள். தாழ்தல் = தங்குதல். தேன் = வண்டு. தூதுப்பொருளிடத்துக் கொண்ட ஐயத்தை இனிமையாக விளக்குகின்றது இப்பாடல்.]

---

தோற்றுவாய்

திருவாரூர்த் தியாகப்பெருமான் மேல் மையல் கொண்ட ஒருத்தி அவர்பால்கொண்ட காமங் காரணமாக நெகிழ்ந்த கலையை மீண்டும் அவர் தருவாரோ

எனக் கேட்பதாக அமைந்துள்ள இப்பாடலில். ஆடைகளின் பெயர்களைச் சிலேடை நயம் தோன்றக் கூறுகின்றாள்.

[அறுசீர் விருத்தம்]

**140. கோமகனைப் பழிகொண்ட ஆரூரர்**
**நாமுன்னாட் கொண்டு போன**
**ஏமமிகு என்கலையை திரும்பவரக்**
**காட்டிலவர்க் கீனமாமோ?**
**காமனையும் வரக்காட்டிக் கண்ணனைச்**
**சேலைவரக் காட்டி, வெள்ளைச்**
**சோமனையும் வரக்காட்டி. உருமாலை**
**தந்தஇந்தத் தோகை யேற்கே?**

நெஞ்சே! (பசுவாகிவந்து) அரசனுடைய மகனைத் தேர்க்காலில் இடச்செய்து பழிக்குப்பழி வாங்கிய ஆரூர் தாம் (என்னை மயக்கி) முன்னாள் கொண்டுசென்ற பாது காப்புடைய என்கலையை (ஆடையை—அறிவை) யான் திரும்பவும் பெறும் வண்ணம் வரக்காட்டினால் அவர்தம் பெருமைக்கு ஏதேனும் குறைவு வந்துவிடுமோ? சோலையில் உள்ள மனையிடத்திற்கு வரச்செய்து என் கண்களாகிய கயல் மீன்களை அவர் இன்புறுமாறு காட்டி, வெண்மையான இடையாடையையும் வரச்செய்து மேலாடையாகிய உருமாலையையும் வரக்காட்டித்தந்த மயில்போல்பவளாகிய எனக்கே.

[காமனை = கா—மனை: சோலையில் அமைந்த வீடு. இது தலைவி சென்ற குறியிடம் சேல்=மீன் சோமன்=ஆடை உருமாலை=உத்தரியம். பின் இரண்டடியில் அமைந்துள்ள சிலேடையாவது:—காமனாகிய மன்மதனை என்பால் விட்டு என் அறிவை மயக்கி எனக்குக்கண் போனற என் சேலையை அவர் பால் வரச்செய்து மேலும் வெண்மையான சந்திரனை என்பால்

விட்டு வருந்தச் செய்தலோடு அச்சம் பொருந்திய மாலைக் காலத்தையும் (உரு—மாலை) தந்து வருந்தச் செய்த தோகையாகிய எனக்கே என்பதாம். (இனி "உரு மாலை என்பதற்கு உடல் மயக்கம் என்றும் பொருள் காணலாம். சேலை—சோமன், உருமாலை என்ற சொற்களை நயமாகப் பயன்படுத்திய சிறப்பு சுவைக்கத்தக்கதாம்.]

---

தோற்றுவாய்

திருவாரூர்த் தியாகப்பெருமான் மேல் காதல் கொண்ட தலைவி பிரிவாற்றாமையால் காரும், பனியும், மாலைக்காலமும் வந்த போது வருந்திக் கூறுவது. இதனுள் காதல் கொண்டு காதலரைக் கூடப் பெறாதாரை வருத்தும் பொருள்களை வரிசையாக நயம் படவைத்துக் கூறும் சிறப்பு சுவைக்கத்தக்கது.

[ பதினான்குசீர் விருத்தம் ]

141. தேரின் வந்தனன் மாரன் அன்றியோர்
தென்றல் வந்தது வந்தபின்
திங்கள் வந்தது கங்குல் ஆருயிர்
தின்ன வந்தது; தாயெனும்
ஓரி வந்துமுன் ஊளை யிட்ட(து)
உடந்தை யாக மடந்தைமீர்!
ஒன்று வந்தபின் ஒன்று வந்ததென்
ஊழ்வி னைப்பயன் அல்லவோ?
மாரி வந்தபின் வாடை வந்தது
கமலை வந்ததி யாகனார்
மருவ வந்திலர் என்செய் வேன்முழு
மயலும் வந்தது பாவியேன்

**ஆரும் வந்தினி ஆவ தேதுயிர்**
**போக வந்தது தூதுபோய்**
**அன்னம் வந்தில தின்னும் முந்தியிவ்**
**அந்தி நேரமும் வந்ததே!**

என் உயிரன்ன தோழியரே! (ஆரூர்த்தியாகராயர் மேல் காதல் கொண்டயான் அவர் அருளைப் பெறுவதற்காக அன்னத்தைத் தூதுவிட்டுள்ளேன் இந்நிலையில்) கரும்புவில்லை ஏந்தி, விரகதாபமுற்றிருப்பாரை எய்யும் மாரவேள் வசந்தமாகிய தேரின் கண் ஏறி என்னை வதைக்கவந்தனன், அவனுக்குப்பின் தென்றலும் வந்தது, தென்றல் வந்தபின் வானத்தில் நிலாவும் தோன்றி வந்தது. அதனோடு கூட என் அரிய உயிரைத் தின்பதற்காக இராப்பொழும் வந்தது இந்நிலையில் எனக்குத்தாயென்று (நீங்கள்) கூறும் நரியானது வந்து என் முன்னின்று (இடித்துரை மொழிகளாக) ஊளையிட்டது. என்ன செய்வேன் ஒன்று வந்தபின் ஒன்று வந்து (தொடர்ச்சியாக எனனைச்சூழ்ந்து துன்புறுத்தி) நிற்பது என்னுடைய பழையவினைப்பயன் போலும் அல்லவா? மேலும், மாரிக்காலம் வந்தபின் வாடைக்காலம் வந்து அடைவது போன்று இவை வந்துள்ளன. ஆனல் கமலாலயத்தினில் விளங்கும் தியாகராசப்பெருமான் என்னை இதுவரை (அத்துன்பங்கள் நீங்குமாறு) கட்டியணைத்துத் தழுவ வந்திலர்; என் செய்வேன்? சிறிதும் குறையாமல் மூழுமையலும் வந்து என்னைப்பற்றிக் கொண்டது. இனி யார் வந்தும் ஆவதேது? ஒன்றுமில்லை. ஆக எல்லாம் சேர்ந்து வந்தமையால் என் உயிா போகும் நிலையை எய்தியது. தூது போன அன்னம் இன்னும் வந்திலது எனினும் இறுதியாக (உயிரைப் பிரியப்பதற்குரிய) அந்தி நேரமும் வந்து விட்டது.

["மடந்தைமீர்" என ஆறுதல் கூற வந்த தோழியரை நோக்கிக் கூறினாள் தலைவி என்க: திங்கள்=நிலவு. ஓரி நரி. கொடுஞ்சொற்களைப் பேரொலியிட்டுக்கூறினளாகலின் தாயென்னும் ஓரி என்றாள். ஊளை=நரியின் சப்தத்தைக்குறிக்கும் மரபுச் சொல். மாரி=மழை—வாடை=பனி. உயிர்போகும் நிலையில் எனக்குயார் வந்து ஆறுதல் கூறினாலும் பயனில்லை என்பாள் ஆரும் வந்தினியர்வதேதுஎன்றாள். "அந்தி" என்பது முடிவு என்றபொருளையும் தந்து நிற்பது நயமானதாகும். இப்பாடலில் பிரிந்தாரைத்துன்புறுத்தும் பொருள்களை எல்லாம் சுவைபட ஒருங்கே அமைத்துள்ள சிறப்புப் போற்றத்தக்கதாம்.

---

தோற்றுவாய்

இறைவன் மீதுமையலுள்ள தலைவி ஒருத்தி அவ்விறைவன் கோயில் முற்றத்தில் நின்று தனக்குற்ற நிலையைக்கூறுவதாக அமைந்துள்ளது இப்பாடல்.

[ பதினான்குசீர் கழிநெடிலாசிரிய விருத்தம் ]

142. வாரு லாவிய கொங்கை பங்கர்
வசந்த ராயர் இசைந்ததோர்
மன்றல் வீசிய தென்றல் வாசலில்
வந்து நின்றவ ருக்கெல்லாம்

நாருலாவிய பூவில் வாசமும்
நாசி மேல்நெடி யேறுமோ?
நாகரீகமும் அமுத பானமும்
நஞ்சு போல விருக்குமோ

நீரிலேயெழு கின்ற திங்கள்
நெருப்பை வாரி இறைக்குமோ?
நித்தி லங்களும் அங்க ராகமும்
நித்த லுந்தழ லாகுமோ?

**ஆரை நாமினி நோவ திப்படி**
**இன்ப மாயவை துன்பமாய்**
**அனுபவிப்பதும் உயிர்த விப்பதும்**
**அவரவர்க்குள நேரமே.**

தோழியே! கச்சணிந்த மார்பினையுடைய உமாதேவியை உடம்பிலே ஒருபங்காகக் கொண்டு விளங்கும் இறைவனாகிய வசந்தராயர் எழுந்தருளிருக்கும், மணம்கமழும் தென்றல் வீசும் திருமுற்றத்தில் (அவரை வணங்கியருள் பெற) வந்து நின்ற மங்கையர்க்கெல்லாம் நாரால் தொடுக்கப்பெற்ற நல்ல மலர்கள் வீசுகின்ற நறுமணம் மூக்கினால் தாங்க முடியாத அளவிற்கு நெடியேறுமோ? நாகரீகமும், அமுதம் போன்ற பானமும் கொடிய நஞ்சு போல்வெறுப்பாக இருக்குமோ? (குளிர்ந்தகடல்) நீரிலே தோன்றி எழுந்து வருகின்ற திங்களாகிய நிலா சுடுகின்ற நெருப்பைவாரி இறைக்குமோ? குளிர்ச்சிதரும் முத்துக்களும் உடம்பிலே பூசிக்கொள்ளும் நறுமணப் பொருள்களும் நித்தமும் நெருப்பாகவே இருக்குமோ? (அல்லது எனக்கு மட்டும்தான் இப்பொருள்கள் இவ்வாறு இருக்கின்றனவோ? எனக்குமட்டும் இவை இவ்வாறிக்குமானல்) இனி நாம் யாரை இத்துன்பத்திற்குக் காரணம் என்று நொந்து கொள்வது? இப்படி இன்பந்தரும் இயல்பையுடைய பொருள்யாவும் துன்பம் தருவதாகமாற அவற்றை அனுபவிப்பதும் அக்காரணத்தால் உயிர்தவிப்பதும் அவரவர்க்குள்ள காலவினையேயாகும்.

[இறைவன் வசந்த மண்டபத்தில் எழுந்தருளிய காலை வணங்க வந்து அவர்மீது மையலுற்றுக் கூறிய ஒருபெண்ணின் கூற்றாக அமைந்த இச் செய்யுளில் விரகமுற்றோரை வருத்தும்

மலர், அமுதம், திங்கள் முதலாயவற்றைத் துன்புறுத்துவனவாகக் கூறிய நயம் சுவையாக உள்ளது. வசந்தராயர் காரணப் பெயராலாம்.) எந்தக் கோயிலின் இறைவன் பெயர் என்பது புலனாகவில்லை) இசைந்த = வீற்றிருந்த மன்றல்=நறுமணம். நாசி=மூக்கு நெடி = வேண்டாத மணத்தைநுகருங்கால் ஏற்படும் மெய்யப்பாடு. "நாகரிகம்" என்பது சந்தம் நோக்கி "நாகரீகம்" என நின்றது. இச்சொல் இவ்விடத்தில் பொருத்தமின்றி உளது. நித்திலம் = முத்து. அங்காரகம்=சந்தனம் புழுகு முதலிய மெய்வாசப் பொருள். நேரம் என்பது தீவினைநிகழும் காலத்தை (விதியை)ச் சுட்டி நின்றது.

---

அம்மானை

'கந்தன்' என்னும் பலபொருளொரு சொல்லை நயம்பட வைத்துச் சோணசல இறைவன் மீது அம்மானையாகப்பாடப்பெற்றது இச்செய்யுள்.

[தரவு கொச்சகக் கலிப்பா]

143. **சந்ததமும் போற்றுகின்ற சயவர்சோணசலனார்**
**கந்தனுட மாமிதனைக் கைப்பிடித்தார் அம்மானை**
**கந்தனுட மாமிதனைக் கைப்பிடித்தா ராமாகில்**
**இந்த உலகத்திற் கேற்குமோ அம்மானை?**
**ஏற்குமென்றே கையில்மழு வேந்தினர்காணம்மானை**

எப்பொழுதும் யாவரும் வணங்குகின்ற வெற்றியை உடையவராகிய சோணசல இறைவர் (மன்மதனாகிய) கந்தனுடைய மாமி (முறையான உமாதேவி)யைக் கைப்பிடித்தாரம்மானை என்று ஒருத்திகூற(கந்தனை முருகன் என்ற பொருள்பட மயங்கிய) ஒருத்தி கந்தனுடைய மாமி (இலக்குமி)யைக் கைப்பிடித்தார் என்பது உண்மையானால் அம்முறை இந்த உலக வழக்கத்திற்கு

ஏற்புடையதாகுமோ எனவினவ, அதற்கு அவள் ஏற்கும் என்றே கையில் வெற்றிக்குரிய மழுவை ஏந்தியுள்ளார் என்றாள்.

[இதனுள் குமரக்கடவுளுக்கும் மாரவேளுக்கும் பொதுவான 'கந்தன்' என்ற பெயரை வைத்து நயமாகப்பாடப்பெற்றுள்ளது. திருமாலின் மைந்தன் காமன் என்றும் பார்வதி திருமாலின் தங்கை என்றும் கூறும் புராணவரலாறு நோக்கிக் காண்க. "மழுஏந்தினர்" என்பது வெற்றிக்காகவும் எதிர்ப்போரை வெல்லுவதற்காகவும் என்றும் பொருள்பட நின்றது.

—∞—

தோற்றுவாய்

திருமால்மேல் மையல் கொண்ட மங்கை ஒருத்தியின் நிலை கண்ட செவிலித்தாய் கூற்றாக அமைந்தஇப் பாடல்.

[அறுசீர் விருத்தம்]

144. மய்யாரும் வழியானை என்றனுயிர்ப்
பெண்மானை மயக்கஞ் செய்த
அய்யாநீர் வடமலையில் ஒளிந்தாலும்
பெண்பழிதான் அகலப் போமோ?
நெய்யாரும் பாலுடனே வெண்ணெயுண்ட
செங்கனிவாய் நெடிய வாழ்வே
பய்யாரும் அரவணையிற் பள்ளிகொளும்
பெருமானே பச்சைமாலே

நெய்யையும் நிறைந்த பாலையும் வெண்ணெயையும் கோகுலத்தில் இல்லந்தோறும் உண்டு சிவந்த கனிபோலும் வாயை உடைய முடிவில்லாத வாழ்வே! படங்கள் நிறைந்த பாம்பணையின் மீது பள்ளி

தோற்றுவாய்

"அரவென்னும்" என்னும் தொடரை "அர", என்னும் "அரவு" என் னு ம் என இருபொருள்படப் பிரித்து ஆதிசேடனாகிய அனந்தனுக்கும் சி வ பெரு மானுக்கும் சிலேடையாக அமைத்துப் பாடப் பெ று கின்ற இப்பாடல் அவ் அனந்தனே சிவபெருமான் என நயம்படக் கூறுகின்றது.

[அறுசீர் விருத்தம்]

145. தேடுகின்ற மால்முதலா அனந்தனே
கால்தெரியாச் செய்கை யாலும்
கூடுகின்ற ஐந்துதலை பெறலாலும்
விடங்கொண்ட கொள்கை யாலும்
நீடுகின்ற புற்றிடங்கொண் டிடாலலும்
படமெடுத்து நின்று மன்றுள்
ஆடுகின்ற அதனாலுஞ் சங்கரநா
ராயணரை "அர"வென் பாரே

திருமால் முதலாகத் தேடிச்செல்லுகின்ற கார ணத்தால் (சிவபெருமான்) அனந்தனே (யாவார். எவ்வாறு எனின்) கால் தெரியாத செய்கையாலும் கூடித்திகழ்கின்ற ஐந்து தலைகள் பெற்றிருத்தலாலும், நஞ்சு கொண்டிருக்கின்ற கொள்கையாலும் நிலைபெறு கின்ற புற்றினை இடமாகக் கொண்ட விளங்குதலாலும் படத்தைத் தூக்கி நின்று மன்றத்தில் ஆடுகின்ற காரணத்தாலும் சங்கரநாராயணரைச் சான்றோர்கள் "அர"வென்பார்கள்.

[அனந்தனுக்கு:— திருமாலைத் தனக்கு முதல் வணைக் கொண்டுதேடிச் சேறலும் கால் இல்லாமையும் ஐந்து தலையுடைமையும் பற்களிலே நஞ்சினைக் கொண்டிருத்தலும் புற்றிலே வாழ்வதும் படம் விரித்து நின்று மகுடியிசை கேட்டு மன்றத்தில் ஆடுவதும் பொருளாகக் கொள்க.

சிவனுக்கு:— சிவபெருமானின் பாதங்களை திருமால் தேடிச் சென்று காணப் பெருமையும், ஐந்து திருமுகம் உடைமையும் ஆலகால விடத்தைக் கண்டத்திலே அருள்காரணமாக அடக்கிக்கொண்டமையும் திருவாரூரிலே புற்றினை இடமாகக் கொண்டு உள்ளமையும் குஞ்சிதபாதத்தை (படத்தை)த் தூக்கி நின்று பொன்னம்பலத்தில் ஆடுகின்றமையும் பொருளாகக் கொள்க. படம்=பாம்பின் படம், குஞ்சிதபாதம். ஈற்றடியில் "அர" என்பார் "அரவு" என்பார் எனப்பிரித்துப் பொருள்நயங் காண்க.

---

தோற்றுவாய்

புள்ளிருக்குவேளூர் வைத்தியநாதசுவாமியைப் பற்றிப் பழிப்பது போலும் புகழ்தலாகிய அணிபற்றிப் பாடியது இப்பாடல்; அச்சில் உளதாயினும் பாடவேறுபாடு சிறப்பாக உள்ளது.

[நேரிசை வெண்பா]

146. **மண்டலத்துக் கெல்லாம் வயித்தியரா ரம்**
**[நோய்பிணிகள்**
**கண்டமட்டும் தீர்க்கின்ருர் கண்டீரோ?—தொண்டர்**
**விருந்தைப்பார்த் துண்டருளும் வேளூர ராஞர்**
**மருந்தைப்பார்த் தாற்சுத்த மண்**

எல்லா உலகத்துக்கும் (புவிக்கும்) இவர் வயித்தியராம் நோயையும் பிணியையும் கண்ட அளவிலே தீர்த்து விடுகிறார் இதனைப் பார்த்துள்ளீரோ; சிறுத்தொண்டர்தரும் பிள்ளைக்கறி விருந்தைப் பார்த்துண்டு அருளும் வேளூரராகிய இவரின் மருந்தைப் பார்த்தால் சுத்தமண்ணாக உளது.

[மண் X தலம்—மண்டலம். கண்டமட்டில் என்பதற்கு ஆலகால விடத்தைக் கண்டத்தின் அளவில் நிறுத்தியவர் என்ற குறிப்புப் பொருளும் காணலாம். 'வேளூரார்' என்றது சொந்த ஊரில்லாதவர் என்பது கருதி. சுத்தமண் = தூயதிருநீறு பயனற்ற மண் என்ற பழிப்புணர்த்தி நின்றது.]

—∘∘:∘:∘∘—

தோற்றுவாய்

இதுவும் மேலைக்கவி போன்றதே. மழவையூரில் உள்ள வயித்தியநாதசுவாமியைப்பற்றியது.

[ நேரிசை வெண்பா ]

**147. வலிய மழவை வயித்திய நாதர்க்குத்**
**தலைவலியாம் நீரேற்றந் தானும்—குலைவலியாம்**
**கையோடு சூலையாம் கால்வாத மாங்கண்ணில்**
**ஐயோ எழுஞாயி ரும்,**

வன்மையுடையவராகிய மழவை வயித்தியநாதர்க்குத் தலைவலியாம் எப்பொழுதும் நீரேற்றந்தானும் குலைவலியாம் கையிலே ஓடு சூலை (நோ)யாம் காலோ வாதமாம் ஐயோபாவம் கண்ணோ காலைக்கண்ணும்,

[சிவபெருமானின் தலையில் உள்ள கங்கையையும் புலித்தோலாடையையும் கரங்களில் உள்ள பிரமகபாலத்தையும் சூலத்தையும் தூக்கிய திருவடியையும் ஞாயிற்று விழியையும் கருத்தி

சிலேடைப் பொருள் தோன்ற அமைத்துள்ள நயம் சுவை தருகின்றது. நீரேற்றம்=தடுமம் குலேவலி=வயிற்றுவலி—ஓடுசூலே=ஒருநோய் = வாதம் = முடக்கு நோய். எழுஞாயிறு= மாலேக்கண் என்பது போல காலேயில் தெரியாத கண்ணேய் போலும்.

தோற்றுவாய்

தஞ்சையை ஆண்ட நாயக்கர் மரபில் வந்த இரகுநாத பூபதி(நாயக்கனே)யைப்பாட்டுடைத்தலேவனக வைத்துப் பாடிய அகத்துறைபாடல் இது. தலேவனேப் பிரிந்து வருந்தும் தலேவி ஒருத்தி நித்திரையின்றி விரகதாபப்படும் துறையைச் சார்ந்ததாக அமைந்துள்ளது. இஃது இவன் மீது பாடப்பெற்ற தனிப்பாடலோ அல்லது கோவைப்பாடலில் ஒன்றோ என்பது புலனுகவில்லே.

[ கட்டளேக் கலித்துறை ]

148\. தாங்கி யணேத்துக் கொடுங்கையி
லேந்தித் தழுவியகை
வாங்கிட நெஞ்சம் பகீரிடு
மேமண்ட லிகர்மெச்சும்
ஓங்கிய கீர்த்தி ரகுநாத பூபதி
தஞ்சை வெற்பில்
நீங்கித் தனியிருந் தால்தரு
மோகண்கள் நித்திரையே?

அரசர்கள் எல்லாம் போற்ற எங்கும் பரந்து ஓங்கிய புகழை உடைய இரகுநாத பூபதியின் தஞ்சை வெற்பிடத்தே (என் உயிரனேய) தலேவன் என்னேத்

தாங்கி அணைத்துத்தன் வளைந்த கைகளால் ஏந்தித் தழுவி இன்புறுத்தும் அக்கைகள் சிறிதே நழுவினும் என்னெஞ்சம் "பகீர்" என அப்பிரிவிற்கு அஞ்சி வருந்துமே, அதுபோக அத்தலைவனை விட்டுப் பிரிந்து தனியே இருந்தால் என் கண்கள் எனக்கு உறக்கத் தைத்தருமோ? தரமாட்டா

[பூவிடைப்படினும் யாண்டுகழிந்தன்ன பொற்புடைப் புணர்ச்சியை வேண்டுபவளாதலின் இவ்வாறு கூறினள். "பகீர்" அச்சக்குறிப்பைத்தரும் இடைச்சொல். மண்டலிகர்= அரசர்]

---

தோற்றுவாய்

தஞ்சை இரகுநாத பூபதியிடம் படைத் தலைவனாக இருந்து வீரச்செயல்கள் புரிந்தவனும் குன்றையூரில் வாழ்ந்த வள்ளன்மையுடைய சந்திரசோமன் மகனும் ஆகிய "குமாரகம்பீரன்" என்பவனுடைய விற்போரின் ஆற்றலை விளக்குவதாக அமைந்துள்ளது புறப்பொருளுள் வாகைத்திணை பற்றிய பாடல் இது. இவ்வரலாறு இப்பாடலால் உய்த்துணரப் படுகிறது.

[பதினன்குசீர் கழிநெடிலாசிரிய விருத்தம்]

149. குதிரைக்கு நகுலன் அறிவுக் ககத்தியன்
கொடைக்கன்னன் சந்திர சோமன்
குன்றைதனில் வாழ்வான் எம்மய்யன் [தந்தருள்
குமாரகம் பீர தீரன்
எதிரிட்ட மன்னியர்கள் ஏரும் பயங்கரன்
எரியரா உய்த்த மிண்டன்
இரகுநாத ரிருபாதம் மறவாத அச்சுதன்
இராமபா ணமீ தேறினல்

**மதுரைக்கு ளுண்டான மன்னரும் சேனையும்**
**மயங்கிட்டு வலசை வாங்கும்**
**வாதிட்ட விருந்திட்ட கொங்குரா ராபுரமும்**
**மலையாள மேபி டிக்கும்**
**சிதறிக் களக்காடும் கன்னியா குமரியாம்**
**தேசமும் தத்த ளிக்கும்**
**திருச்சிராப் பள்ளியும் கோட்டையும்**
**[கொம்பையும்**
**செந்தூரள் எழுந்து விடுமே.**

குதிரையை அதன் தன்மை நிலை முதலாயவற்றை அறிந்து செலுத்துவதில் நகுலனாகவும், அறிய வேண்டுவனவற்றை அறிந்து விளங்குவதில் அகத்தியனாகவும் கொடையில் கன்னனாகவும் திகழும் 'சந்திரசோமன்' என்னும் புகழ் வாய்ந்த பெயரோடு வாழ்பவனாகிய எம்முடைய அய்யன் தவத்தால் தந்தருளிய அருமருந் தன்ன மைந்தன், குமாரகம்பீரதீரன் தன்னோடு போர்க் களத்தில் எதிரிட்ட மன்னவர்களை வெல்லும் ஏறாக விளங்குபவன், பகைவர்களுக்கு மிக்க அச்சத்தை தருபவன் நெருப்பைக்கக்கும் நாகம் போன்ற அம்புகளைப் பகைவர்பால் செலுத்தும் மிண்டன், இரகுநாத பூபதியின் திருவடிகளை மறவாதவன், அழிவில்லாத பெருமையை உடையவன், அவன் தன்கையில்வில்லை ஏந்தி இராமபாணம் போன்ற அம்புகளைத் தொடுத்துப் போர் முகத்துஏறிச் செல்லுவானாயின், மதுரையை ஆளும் மன்னரும் அவர்தம் படைகளும் அஞ்சி மயங்கி வலசை வாங்கிப் புறமுதுகிட்டுடையும், எதிர்வாதம் செய்து இருந்திட்ட கொங்குராரபுரத்தரசரும் அஞ்சி மலையாளம் நோக்கி ஓடி ஒளிவார்கள். களக்காடு

கன்னியா குமரி நாடும் சிதறுண்டுதத்தளிக்கும் திருச்சி ராப்பள்ளியும் அதன் கோட்டைகளும் கொம்பையும் செந்தூள் எழப் பாழாய்விடும்.

[இப்பாடலின் பாடம் ஏடு எழுதுவோரால் பிழைபட்டுளது இருந்தவாறு ஓாளவிற்குப் பொருள் எழுதப்பட்டுளது' நகுலன் முதலாயினோர் அவ்வத்துறையில் தலைசிறந்தவர்களாதலின் அ:த்துறைகளில் வல்ல சந்திரசோமானை அவர்களாகவே கூறியுள்ளார் ஆசிரியர். குன்றைதனில் வாழ்வான் எம்மய்யன் தந்தருள் என்பதால் குமாரகம்பீரன் சந்திரசோமனின் மகன் எனக்கருதலாம். மற்றும் இக்குமாரகம்பீரன் இரகுநாதரிரு பாதம் மறவாத அச்சுதன் என்பதால் இவன் படைத்தலைவன் எனவும் குன்றைதனில் வாழ்வான் என்பது சந்திரசோமனையே எனவும் கருதலாம். ஒருகால் இவனே மேலே கூறிய சிறப்புக்கு உரியவனாகவும் இருக்கலாம். "குமாரகம்பணன்" என்னும் பெயர் படைத் தலைவர்கட்கும் சிற்றரசர்களுக்கும் வரலாறுகளில் பயின்று காணப்படுகிறது. எதிரிட்ட=பகைத்த. ஏரும் என்பதற்கேற்ப அரசர்களை 'மன்னியர்கள்' எனப்பெண்பால் போலக் கூறிய நயம் சுவையுடையது. இராமபாண மீதேறினால் என்பதற்கும், வாதிட்டவிருந்திட்ட என்பதற்கும் ஒருவாறு கருத்துப் பொருள் கொள்ளபட்டுள்ளது. மிண்டன் = பெருவலிமையுடையவன். "கொம்பையும்" என்றதன்பொருள் விளங்கவில்லை, கொம்மை = பருமை என்ற பொருள் தரும் உரிச்சொல்லாகவும் கருதலாம். பொதுவாக இப்பாடல் வரலாற்றுக் குறிப்புடையதாக உள்ளது.]

தோற்றுவாய்

திருப்புறம்பியத்து விளங்கும் இறைவன்பால் ஓர் அடியார் வரைவின் மகளிர்பால் செல்லும் தன்மனத்தை மாற்றி அருள் புரியுமாறு வேண்டுமுகத்தான் பாடப் பெற்றதிப்பாடல். இதன் இறுதி இரண்டடிகளும் இறை

வன் திருநாமங்களைக் கூறுவதாக உள்ளன அவைஎழுத்துக்கள் பிறழ்ந்தும் சிதைந்தும் க்காணப்படுதலின் பொருள் தெளிவாகவில்லை.

[ பதினான்குசீர் கழிநெடி லாசிரிய விருத்தம் ]

150. வசிகர திலகம் நுதலிலே தரித்து
வார்குழல் கோதியே முடித்து
மஞ்சளால் மினுக்கிச் செஞ்சொலா லுருக்கி
வாள்விழிக் கடையினால் மருட்டிக்
கசிவுறும் இதயம் ஒருவன்மே லிருத்திக்
காதலை ஒருவனுக் களித்துக்
கைப்பொரு ளளவும் கலவியே செலுத்தும்
கன்னியர்க் கிரங்கிவா டுவனோ
சுசிதர வரதா அரகர நிமலா
சுத்தபஞ் சாட்சரத் தியானா
சுவசுரூ பாயா சிவமகா தேவா
சுரகண சுர...............
சசிதர தளவ பதுமதா ளிதனே
தாண்டவா திருநடந் தருக்கும்
திருப்புறம் பியம்வாழ்
சம்புவே சட்டைநா யகனே!

தூய அருளாகிய வரத்தைத்தருபவனே! அரகர நிமலா............சிவமகாதேவா தாண்டவம் புரியும் இறைவா திருப்புறம் பியத்திலே எழுந்தருளியிருக்கும் சுயம்புவே சட்டைநாதக் கடவுளே! உள்ளத்தைக் கவரும் படியாகத்திலகத்தை நெற்றியிலே தரித்து,

நீண்ட குழலைஅழகொளிர வாரி முடித்து மஞ்சள் பூசி மேனியெல்லாம் மினுமினுக்கி இனிய சொற்களால் உள்ளத்தை உருக்கி வாள் போலும் கண்ணின் கடை நோக்கால் அறிவை மருளச்செய்து உண்மையன்பு திகழும் நெஞ்சத்தை ஒருவன் மேல் வைத்து உடற் காதலை (போலியாக) ஒருவன் பால் அளித்து அவரவர் கொடுக்கும் பொருள் அளவிற்கேற்ப அவ்வவரோடு கூடிக்கலவி செலுத்தும் தூய்மையில்லாத வரைவில் மகளிரை எண்ணி எண்ணி இரங்கி வாடுவேனோ (இனி வாடமாட்டேன் உன்னையே பற்றி இருப்பேன் அருள் வாயாக)

---

தோற்றுவாய்

புள்ளிருக்குவேளூர் இறைவனைப் போற்றி அவன் பாதத்தைத் தொழுவோரைத் தீவினைகளும் புல்லி சூனியங்களும் நீங்கும் என்கிறது இச் செய்யுள்.

[அறுசீர் விருத்தம்]

151. புல்லிசூ னியங்களெல்லாம் போக்கிவிடும்
பூதங்கள் பொடியாய் ஓடும்.
எல்லையில்லாப் பிசாசுபிணி மிடியெல்லாம்
பறந்தோடும் எழில்வே ளூர்வாழ்
செல்லஉமை யாள்தையல் சிந்தைமகிழ்ந்
திடுசிவனுர் திருத்தாள் போற்றித்
தொல்லைவினை தீர்த்திடவே துலங்கியிடும்
ஈசர்பதம் தொழுவோ மன்றே

அழகுமிக்க புள்ளிருக்குவேளூரில் வாழும் செல்வ உமையாளாகிய தையல் தன் சிந்தை மகிழ்ந்திடும் சீர்த்திவாய்ந்த சிவபெருமானின் திருவிளங்கும் திருத் தாள்கள் உயிர்களனைத்தையும் பாதுகாத்து அவற்றின் பழவினைகளைத் தீர்த்திடவே துலங்கியிடும் (இதனால்) புல்லி சூனியங்கள் முதலாகிய பகைவர் செய்யும் தீவினைகளை எல்லாம் போக்கிவிடும் குறள் பூதத்தால் வரும் குற்றங்கள் பொடிப் பொடியாய் ஓடி விடும் அளவற்ற பிசாசுகளால் ஏற்படும் பிணிகளும் வறுமைப்பிணி முதலிய யாவும் பறந்தோடிவிடும் எனவே அவ்ஈசனுடைய பாதங்களைத் தொழுதுய் வோமாக

[பகையால்வருவன, தெய்வத்தால் வருவன, கருஞ்ஞால் வருவன வாகிய முப்பிணிகளையும் முதலிரண்டடிகளில் வைத்துப்பாடியமை போற்றத்தக்கது. தொல்லை வினை=ஊழ்வினை. அன்று ஏ அசைகள்]

தோற்றுவாய்

புலமைத்திறம் அறியாமல் தக்கபரிசளித்து போற்றாத நிலையில் 'வணங்காமுடி' என்னும் சிற்றரசன் பால் வந்த ஒரு பெரும் புலவர் அவன் தந்த சிறு பரிசிலைக் கொள்ளாமல் தன் பெருமிதந் தோற்றக் கூறியதாக அமைந்துளது இப்பாடல்.

[கட்டளைக் கலித்துறை]

152. கவிச்சுவைப் பாவறி யார்உப்பி
லாத கறிகளைப்போல்
அவிச்சுவைப் பார்கள் அதுகவி
யோ? அறி வாளர்க்கெல்லாம்

செவிச்சுவைப் பாவென் கவியல்ல
வோபொற் றிரளையள்ளிக்
குவிச்சுவைப் பார்கள்கண் டாய்வணங்
காமுடிக் கொற்றவனே!

வணங்காமுடியாகிய பேரரசனே! கவிதைச்சிறப்பும் எண்சுவையும் அமைந்த பாக்களின் பெருமையை அறியாத அறிவிலிகளின் முன்னர் (க்கல்லாக்கவிஞர் சிலர்) உப்பில்லாத கறிகளைப் போல் சொற்பொருளை அவித்துக்கவி போல வைப்பார்கள். அவை கவிதைகளாகுமோ? (கவியின் சீர்த்தி அறியும்) அறிவாளர்க்கெல்லாம் செவிச்சுவை பயக்கும் பாக்கள் என்னுடைய கவிகள் அல்லவோ? அதனால் கேட்ட அளவிலேயே செம்பொன்னைத்திரள் திரளாக அள்ளி என் முன் பரிசிலாக்குவித்து வைப்பார்கள் காண்பாயாக.

[பாஅறியார், பா வறியார் எனச் சிலேடையாகவும் நின்றது. அவிச்சுவைப்பார்கள் என்றதும் இரு பொருள்பட அமங்கலமாக நின்றமைகாண்க. "அறிவாளர்க் செல்லாம்" எனவே நீ அறிவில்லாதவன் எனக்குறித்தார், அவித்து, குவித்து எனபன எதுகை நோக்கி அவிச்சு, குவிச்சு எனப்பாமர வழக்குச் சொற்களாய் நின்றன, பிறநயங்களும காண்க]

தோற்றுவாய்,

அங்கையற் கண்ணம்மையின் அருளை வேண்டும் ஓர் அடியார் அம்மை தனக்கு அருள் புரியும் போது சிவபெருமானும் அருள்புரியப் பரிந்துரை செய்ய வேண்டுமென்று கூறுகிறார். இவ்வுத்தி நயமாகஉளது.

[ கட்டளைக்கலித்துறை ]

153. தீதுக் குழன்று விழிதடு
மாறியென் சிந்தை கன்றி
வாதைப் படுத்தனி யேனை
இனிக்கா மனதிரங்கும்
போதக் கருணையைப் போற்றிடும்
வேளையில் சொக்கருடன்
காதுக் கிரசியம் சொல்வாய்என்
அங்கயற் கண்ணம்மையே

அங்கையற் கண்ணம்மையே தாயே! உலகத்துன்பங்களாகிய தீமைகளுக்கே உழன்று விழிதடுமாறி என் சிந்தனை நைந்து துயரப்படுவேனாகிய என்னை இனியாவது காத்தருள்வாயாக! அங்ஙனம் காப்பதற்கு உன் உள்ளம் இரங்கும் போது அவ்அருளை போற்றி எனக்களிக்கும் வேலையில் உன் கணவராகிய எம்பெருமான் காதுகளில் அவரையும் அருள்புரியுமாறு இரகசியமாகச் சொல்லி யருள்வாயாக.

[உழலுழதல்=அலைக்கழிதல். விழிதடுமாறல்=பொய்யை உண்மை என நோக்கி மாறுபடுதல். வாதை = துன்பம். கா=காப்பாயாக. போற்றியிடும். என்பதும் இரகசியம் என்பதும் செய்யுளோசையின் பொருட்டுக்குறைந்து நின்றன: இப்பாடலுக்குப் பொருந்து மாற்றால் பொருள் காணப்பெற்றது.

தோற்றுவாய்.

வன்மீகநாதர்மேல் விருப்புற்றெழுகும் ஒரு மங்கையின் செவிலித்தாய் அவள் அவரைப்பிரிந்திருக்கும் போதும் கூடியிருக்கும் போதும் பாதிஉடம்பாகவே காணப்படுகிறாள் என நயமாகப் பேசுகிறாள் இப் இப்பாடலுள்.

[ கட்டளைக்கலித்துறை ]

154. நேரார் புரஞ்செற்ற வன்மீகர்
மேவிய நேரிழைக்கே
ஓராக மான தொருபோது
மில்லை உடனவரைச்
சேராத போதும் அரையாக
மாம்அவர்ச் சேர்ந்தணைந்தால்
ஈராக மன்றி யரையாக
மாம்என் இளங்கொடிக்கே.

பகைவர்களின் முப்புரங்களையும் அழித்தவராகிய வன்மீகநாதப்பெருமானை விரும்பி மணந்த என் மகளுக்கு அவளுடம்பு முழுமையானதாக ஒருபோது காணப்படுவதில்லை. அவ்இறைவரைச் சேராமல் பிரிந்திருக்கிற போதும் (பிரிவுத்துயரால் இளைத்து) என் இளங்கொடி போன்ற மகளுக்கு பாதி உடம்பாகவே இருக்கும். அவரைச் சேர்த்து அணைத்திருப்பாளானல் இருவருடலும் ஒன்றி ஒருடம்பாக ஆதலின் அப பொழுதும் பாதி உடம்பாகவே காணப்படும் இஃது என்ன வியப்பு

[நேரிழை, இனங்கொடி இரண்டும் அன்மொழித்தொகை வன்மீகர்மேவிய, அவர்ச்சேர்ந்து, இவை இரண்டாம் வேற்றுமை விகாரப்புணர்ச்சி தலைவன் தலைவி, கூட்டத்தை இவ்வாறமைத்த நயம் சுவையுடையது.]

தோற்றுவாய்

மழவ பூபதியின் நாட்டில் ஒரு மறப்பெண்ணின் தோற்றத்தைக்கண்டு மயங்கிய காளை ஒருவன் அவள் அழகை வியந்து கூறும் கைக்கிளைப் பாடல் இது.

[பதினன்கு சீர் சந்தவிருத்தம்]

155. தேன ளந்தமொ ழிச்சி யார் கொலை
நஞ்ச ளந்தவி ழிச்சியார்
செண்ப கத்தின் நிறத்தி யாரொரு
பெண்பி றப்பில்ம றத்தியார்

நான றிந்தவி தத்தி யார்பல
நாட றிந்தது வக்கியார்
நல்ல திங்கள் முகத்தி யார்உயிர்
கொல்லு மின்பந கைச்சியார்

வான விந்துத ழைக்க வந்தருள்
செண்ப கப்பள்ளி கொண்டவள்
மழவ பூபதி வாளே மேவிய
பொய்கை நாட்டின் மடந்தையார்

ஆன கொண்டைமு டிப்பமீள்ளஅ
விழ்ப்பள் கோதுவ ளொருகையால்
அவிழ்ந்த பாளையும் இளைஞர் ஆவியும்
அள்ளி ஒக்கமு டிப்பளே!

மழவ பூபதியின் வாளைமீன்கள் மிக்குத்திரியும் நீர் நிறைந்த பொய்கை வளம் பொருந்திய நாட்டில் தோன்றி விளங்கும் இம் மடந்தையார் தேனின் சுவையை அளந்த இனியமொழியையுடையார் கண்டாற் கொல்லும் நஞ்சினது கொலைத் தன்மையை அளந்த விழியையுடையவள். செண்பப்பூவின் நிறத்தை உடையவள் ஆயினும் பிறப்பால் மறவர்குலப் பெண்ணாக உள்ளாள்; நானறிந்த வகையில் சிறந்த அழகினை உடையவள் எனினும் பல நாடறிந்த கவர்ச்சியை உடையவள் கண்டு கேட்போர் உயிரைக்கொல்

னும் படியான நகையினை உடையவள் விண்ணிடத்து முழுநிலா தழைக்க வந்ததுபோன்ற வெண்மையும் செம்பகமலரால் நிறைந்ததுமான படுக்கையைக் கொண்டவளான இவள் தன் கொண்டையை முடிப்பாள். மீளவும் அவிழ்ப்பாள் பின்பு கோதுவாள், ஒருகையால் அவிழ்ந்த பாளைபோல் விளங்குங்கூந்தலையும் கண்டுருகும் இளைஞர் தம் ஆவியையும் அள்ளி ஒரு சேர முடிப்பாள்.

*[அளத்தல்—அவ்வத்தன்மையில் எதனுடைய ஆற்றல் மிகுதியென அளத்தல். இஃதோர் உவமை நயம். துவக்கு=கட்டு ஈண்டு இவள் தன் அழகால் பிறர் நெஞ்சத்தைப் பிணித்தலை உணர்த்திற்று. நகை=முறுவல் இந்து=சந்திரன் 'அவிழ்ந்த பாளை' ஈண்டு கோதிவிடப்பட்டிருக்கும் கூந்தலை உருவகத்தால் உணர்த்தி நின்றது]*

தோற்றுவாய்

ஒரு தலைவன் தான் முன்பு கூடிக்களித்த ஒரு பெண்ணின் எழிலையும் அந்நிலையில் அவள் புரிந்த செயலையும் பிற்காலத்து எண்ணி ஏங்கிப் பேசுதல் போல அமைந்துளது இப்பாடல்.

156. தட்டி விட்டபுழு கைக்க லந்துதலை
யிட்டொ ருத்தர்குழல் கோதவே
தக்க குங்குமம் அரைப்ப ரைத்துவடி
தெளிந்த தண்பனி நீரிலே
வட்ட மொத்தகுழல் அசைய முழ்கிவந்
துலர நின்றது புலந்தபின் ர்

மாசி லாதமரு முல்லை செண்பகத்
தோடு மல்லிகை வைத்துளே
முட்டறக் கொடியின் முத்து ரத்னமணி
மண்ட பத்துமல ரணையிலே
மூடுகோபுரமும் வெள்ளி லைச்சுருளும்
மதியை யார்முக மருந்தவே
எட்டொ ணாதபதம் நல்கொ ணாதமலை
அருளி னாள்அவளும் யானுமாய்
இருந்த செல்விநலம் எய்துமோபுவியில்
இன்ன மின்னமொரு காலமே.

தூய்மை செய்த புழுகைக் கலந்து தலையிற்பூசி ஒரு தோழி கூந்தலைக் கோதி விடவும் ஒருத்தி மணமிக்க குங்குமத்தையே அரைப்பாக அரைத்து வடி கட்டித் தெளிவாக்கிய குளிர்ச்சி மிக்க பனிநீரிலே நீராட்ட, வட்டமாக ஒத்து வளர்ந்துள்ள கூந்தல் அசையுமாறு நீராடி முழுகி எழுந்து அக் கூந்தல் உலர்ந்து புலருமாறு செய்து நன்குலர்ந்தபின் குற்றமற்ற நறுமணம் பொருந்திய முல்லைமலரையும், செண்பக மலரோடு மல்லிகை மலரையும் உள்ளே மணம் பொருந்த வைத்து முட்டுப்பாடில்லாக் கொடி போல முத்துக்களைக் கோத்துத் தொங்க விடப்பெற்ற இரத்தின மணி மண்டபத்திலே மலராலாகிய பள்ளியணையிலே அமர்ந்து மூடுகோபுரத்தையும் வெள்ளிச்சுருளையும் மதியை ஒத்த முகத்தட்டிலேயான் அருந்துமாறு செய்து பின் எட்டிப் பொருந்துதற்கரிய பதத்தையும் கொடுப்பதற்கரிய மலையையும் எனக்கு அருளினாள். அப்பொழுது ஆங்கே அவளும் யானுமாகி இருந்த இன்பச்செல்வியும் நலமும் இனி ஒருகால் இவ்வுலகத்தில் எனக்கு எய்துமோ?

[புழுகு=புனுகு 'அரைப்பு' தொழிலாகுபெயர். பனிநீர்=பன்னீர். மூடுகோபுரங் வெள்ளிலைச்சுருள் என்பன முறையே வாயிதழையும், நாவையும் குறிப்பதாகலாம். பாடம் தெளிவாக இல்லை. எட்டொணுதபதம் நல்கொணுதமலை இவை முறையே இடக்கற் பொருளையும் தனங்களையும் குறிப்பனவாம்.]

தோற்றுவாய்

மறவர் குலப் பெண்ணொருத்தியை மணம் பேச விடுத்த மன்னன் ஒருவன் தூதன்பால் அம்மறவர் மகட்கொடையை மறுத்துத்தம் வலிமை கூறுவதாக அமைந்ததிப்பாடல். இது கலம்பகத்தில் வரும் "மறம்" என்னும் புறத்திணையைச்சேர்ந்தது.

[பதினுன்குசீர் சந்த விருத்தம்]

157, பேச வந்த தூத! செல்ல ரித்த ஓலை செல்லுமோ
பெருவ ரங்கள் தகுவ ரங்க ராய கேள்வர்
[தாளிலே
பாசம் வைத்த மறவர் பெண்ணை நேசம் வைத்து
[முன்னமே
பட்ட மன்னர் பட்ட தெங்கள் பதிபு
[குந்து பாரடா
வாச லுக்கி டும்ப டல்க வித்து வந்த கவிகைமா
மகுட கோடி திணைய ளக்க வைத்த
[காலும் நாழியும்
வீசு தால மாங்கு டில்தொ டுத்த கற்றை சுற்றிலே
வேலி யிட்ட தவர்பி டித்த வில்லும்
[வேலும் வாளுமே

அறிவின்றி எம்மிடத்து மணம் பேச ஓலையொடு வந்துள்ள தூதனே! செல்லரித்த ஓலை (யின் கருத்து

எங்கள் செவியில்) செல்லுமோ? நாங்கள் யார் தெரியுமோ? வழிபடுவார்க்குப் பெரும் வரங்களைத்தரும் திருவரங்கராய பெருமானின் திருவடிகளிலே அன்பு வைத்து வாழும் மறவர் ஆவோம். உன் மன்னனைப் போலவே முன்பு பல மன்னர்கள் எம்முடைய பெண்ணை மணப்பதற்குப் பற்றுக் கொண்டு (யாங்கள் மறுத்தமையால் படையொடு) வந்து பட்டழிந்து போன நிலைமைகளை எம்முடைய குறிச்சியுள் புகுந்து பாரடா. இதோ இந்த மனைவாசல்களிலே இட்டு வைத்திருக்கும் படல்கள் அம் மன்னர்கள் பிடித்து வந்த கொற்றக் குடைகளேயாம். அவர்கள் அணிந்திருந்த கோடி கோடி மணி முடிகள்தாம் தினையளக்கும் மரக்கால்கள் நாழிகள், பொருள்களை இட்டளிக்கும் தாலங்களாம் குடில்கள் தோறும் சுற்றுமதிலாக அமைந்தருப்பவை அம்மன்னர்கள் பிடித்து வந்த வேற்படைகளும் வாட்படைகளுமேயாம் (இனியும் உன் மன்னருக்கு மண விருப்பம் இருக்குமாயின் இந் நிலைக்கு ஆளாகச் செல்; செல்! என்றான் மறத் தலைவன்)

[செல்லரித்த ஓலை என்றதில் 'செல்' என ஏவல் மொழிக் குறிப்பாக நின்றது. வாசல் = மனை வாயில். கவிகை= குடை. வீசுதல் = பிறருக்கு அளித்தல். தாலம் = உண் கலமாகிய தட்டுக்கள். 'கற்றை சுற்று = மதிள் சுவரைக் குறித்தது:]

தோற்றுவாய்

இதுவும் மேலைக்கவி போன்று 'மறம்' என்னும் துறையைச் சார்ந்ததேயாம். இதனுள் பாட்டுடைத் தலைவன் சேர மன்னனைக்காணப்பெறுகிறான்.

[ பதினான்குசீர் சந்த விருத்தம் ]

158. மின்னி லங்கிய வாகுசேர்நர
பாலன் வஞ்சி வரோதயன்
வீரகேரள வேந்தன் நற்பதம்
மேவி டாத குறும்பரூர்
சொன்ன ராதிபதி தாள தாக்கிய
மறவர் என்பதும் நாமலோ?
தோகை யைத்தர வேணு மென்றுரை
சொல்லி விட்டவன் எவனடா
மன்ன வன்திரு முகமு மிப்படி
மூன்று நாலு மடிப்பதாய்
வரிந்து கட்டிய தன்பு றத்தினில்
மண்ணும் அப்பியி ருக்குமோ?
என்ன பாதகம் இப்பெ ரும்பிழை
எவரு டன்செய வந்தனே?
எறிய டாவனை தடியை நின்றுவேல்
எய்ய டாகுடல் பறியவே.

மின் போலும் ஒளிவீசும் வாகுவளையம் பூண்ட நரபாலன், வஞ்சியம்பதிலே தோன்றிய வரோதயன் வீரகேரள வேந்தனுடைய திருவடிகளை வணங்கிப் பொருந்தாத பகைவருடைய ஊர்களைப் புகழ் சான்ற அவ்வேந்தனுடைய அடிகளின் இடமாக ஆக்கி நிற்கும் மறவர்கள் இவர்கள்; எனச்சான்றோர்கள் கூறுவதும் நம்மையல்லவோ? அத்தகைய நம்முடைய தோகையை (மணப்பதற்காக)த்தரவேண்டும் என்று ஓலை மூலம் தூது) சொல்லி விட்டவன் எவனடா? (இத்தூதன் நம்மிடம் தருவதற்காக வைத்திருப்பது மன்னவன் திருமுகமாம்) மன்னவனுடையதிரு முகமானால் இப் படி மூன்று நான்கு மடிப்புடையதாய்க் கயிற்றால்

வரிந்து கட்டப் பெற்று அதன் புறத்தே மண்ணைக் குழைத்துப் பூசப் பெற்று இருக்குமோ? தூதனே இஃதென்ன கொடுஞ் செயல் இத்தகைய பெரும் பிழையை எவரிடத்துச் செய்ய (உன் மன்னன் ஏவலால்) வந்துள்ளாய்! (தன் அருகே உள்ள மறவனைப் பார்த்து அடே!) இவன் மீது எறியடா வளை தடியை, வேல் அம்புகளை எய்யடா குடல் பறியட்டும்.

[நரபாலன் = மக்களைப் புரப்பவன் என்னும் பொருள் பட்டு அரசனை உணர்த்தும். வரோதயன் = வரத்தால் தோன்றியவன். வாகு = வாகுவலயம். குறும்பு = சிறுசெயல் தோகை = உவமை ஆகுபெயரால் பெண்ணை உணர்த்திற்று. திருமுகம்=ஓலை. இதனை முகம் என்ற பொருளில் வைத்து நகையாட்டாகப்பழித்துக் கூறிய நயம் சுவைக்கத்தக்கது. மண் = அரக்கு முத்திரை. ஓலையை மடித்து அரக்கு முத்திரை யிட்டிருந்ததைக் கண்டு இவ்வாறு கூறினன்.]

தோற்றுவாய்

இச்செய்யுளும் 'மறம்' என்னும் அத்துறையமைந்த பாடல்

[எண் சீர் விருத்தம்]

159. வரிக்கரையான் அரித்தபனங் கருக்கோடா தூதா
மன்னரசன் திருமுகமோ வந்ததெங்கள்
[செந்தேன்
அரிக்கயலார் விழியைவிலைத் தருக வெனப் பேச
அவனிதனில் மேற்பரிசம் யாரேடா
[விடுத்தார்
கரிக்கரட வரைப்படுத்தூர் எயிலரணங் காக்கும்
கருவேடன் மகன்பயந்த பெருவேடன்
[மடந்தை

**திருக்குலமென் றறிந்தில........வெற்றி அம்புச்**
**சிலைகொடுவா இது நினைந்தோன்**
**[தலை கொடுவந்திடவே!**

ஏதூதனே! நீ கொண்டுவந்த இது வரிக்கயையான் தின்று அரித்து விட்ட பனைமடலின் கருக்கோ அல்லது இதுதான் நீ கூறிய மன்னனான அரசனது திருமுகமோ? எங்களுடைய, செந்தேனைப் போன்றவளும் செவ் வரிபரந்த கயல்போலும் விழியையுடையவளும் ஆன என்மகளை மணவிலையாகத் தருகவெனப் பேசுமாறு இவ்வுலகத்தில் அவள்மேற் பரிசங்கூற யாரடாஉன்னை விடுத்தார்? (வந்த அரசர்களின்) மதம் ஒழுகும் யானைப் படைகளைக் கொன்று எயில் சூழ்ந்த எங்கள் ஊர் மதிலைக் காக்கும் வலிய வேடனாகிய எங்கள் வேடவர் தலைவனாகிய பெருவேடன் தவமடந்தையை அவள் திருக் குலத்தின் பெருமையறியாது மணம் பேச நினைத்த அவ்வரசனின் தலையைக் கொய்து கொண்டுவர வெற்றி மிக்க எனது அம்பையும் வில்லையும் கொண்டு வா.

ஓலையைத்திருமுகம் என்றதனால் கறையான் அரித்த பனங்கருக்குத்தான் உன் அரசன் திருமுகமோ என எள்ளிக் கூறினான். பரிசம் = மணப்பொருள் கரிக்கரடம் = கரடக் கரி என மாற்றுக. எயில் = மதில் உறுப்பு, அரணம்=மதில் சிலை = வில் இப்பாடல் சிதைந்துள்ளமையின் ஓரளவு செப் பனிட்டு உரை எழுதப்பட்டது.

தோற்றுவாய்

தலைவன் பிரிவினால் வருந்தும் தலைவி ஒருத்தி கடற்கானலில் அமர்ந்திருக்கும் நாரைகளைப்பார்த்து மன்மதனுடைய மலரும்புகளும் நிலாவொளியும் தன்னை வருத்துவதாகக் கூறியது. இப்பாடல் 'காமமிக்க கழி படர்க்கிளவி' என்னும் அகத்துறையைச் சேர்ந்தது.

[ எண்சீர் விருத்தம் ]

160. செய்யோனக ளங்கன்மகிழ்
செழியன் சோ ளேசன்
சென்னிக்குல தீபன்வளர்
பொன்னித்திரு நாடன்
பொய்யே யொரு சற்றும்பொருந்
தாதார்மனத் துங்கன்
போர்வல்லவன் வரைக்கேபுகப்
போகுங்குரு கீரே!
அய்யோஅவ ரைப்போலொரு
நிட்டூரரு முண்டோ
அஞ்சம்படர் கைக்கோ?அலர்
நெஞ்சம்புலர் கைக்கோ?
வெய்யோன்விழ கைக்கோ?மதி
வந்தேஎழ கைக்கோ!
விரகந்தரு கைக்கோ அவர்
விட்டுப்பிரிந் தாரே

செம்மேனியையுடைய முருகன், குற்றமற்றவன் மகிழ்ச்சிக்குரிய செழியன் சோளேசன், சென்னிக்குலதீபன் பொன்னித்திருநாடன் சிறிதும் பொய்மை பொருந்தாத (வீரர்கள் உள்ளத்தும் புலவர்கள் உள்ளத்தும்) வர்களின் மனத்து விளங்கும் தூயவன், போர் புரிதலில் வல்லவன் என்று சான்றோர் புகழும் படியான என் தலைவரின் மலைப்பக்கத்தே பறந்து செல்லும் குருகு களே! ஐயோ அத்தலைவரைப் போன்ற கொடுமை யுடையவர்கள் உலகில் உண்டோ? மாரவேளின் அம்புகளைந்தும் என்னை அடர்த்துக்கொல்லவோ, ஊரார் தூற்றும் பழிமொழிகளால் என் நெஞ்சம் புலர்ந்து வற்றுகைக்கோ, (என் துயர் காணாது) கதி

ரவன் மறைவதற்கோ அல்லது மதியானது எழுந்து துன்புறுத்துதற்கோ மீளாத விரகதாபத்தைத் தருகைக்கோ எதற்கோ அவர் என்னைவிட்டுப் பிரிந்தார்.? எனக் கேட்பீராக!

[செய்யோன் = முருகன். அகளங்கன் = குற்றமில்லாதவன் செழியன் = பாண்டியன். சென்னி = பாண்டியன். பொன்னித் திருநாடு = காவிரிபாயும் சோழநாடு இப்பாட்டுடைத்தலைவன் பாண்டி நாட்டை வென்று வாழ்ந்த ஓர் சோழவேந்தன் எனத் தெரிகிறது இருவர் பெயராலும் கூறப்படுதலின். மேலும் சிறந்த வள்ளன்மையுடையவனென்பது. பொய்யே ஒரு சற்றும் பொருந்தாதார் மனத்துங்கன் என்பதனால் தெரிகிறது. வரை = மலை. கடற்கரையினின்றும் மேற்கு நோக்கிச் செல்லும் நாரைகளைப் பார்த்து அவன்மலைக்குச் செல்வதாகக் கருதிக் கூறினாள், 'ஐயோ' என்பது அவலக் குறிப்புச்சொல். நிட்டூரம் = கொடுமை அஞ்சம்பு = மன்மதனின் ஐந்தம்புகள். மதியின ஒளி விரகத்தை மிகுவிக்கும் ஆதலின் எழுகைக்கோ என்றாள். நீங்கள் கேட்பீராக என்பது இசையெச்சமாக நின்றது.]

தோற்றுவாய்

'திருஆனைக்காவில் விளங்கும் இறைவன்மேல் மையல் கொண்ட நங்கையொருத்தி அவர் பாற்சென்று அவர்கவர்ந்த கைவளையல்களை வழக்கிட்டாவது பெறுவேன் அன்றி அவர் போரிடுவாரானால் யானும் போரிட்டு என் எண்ணத்தை நிறைவேற்றிக் கொள்வேன் எனக்கூறுவதாக அமைந்துள்ளது இப்பாடல். பெருந்திணைவகையைச் சார்ந்து பாடப்பெற்ற இச் செய்யுளில் வருந்தலைவியின் வீரமொழிகள் மிகச்சுவையாக உள்ளன.

[எண்சீர் விருத்தம்]

161. ஓராணைவ னத்தேதிரு வெண்ணாவல்நி ழற்கீழ்
உறையும்பெரு மான்வீதியு லாவும்பவ
[னிக்கே

நேராக நடப்பேன்வளை பறிபோனது கேட்பேன்
நில்லென்றுத டுத்தால்வகை சொல்லென்று
[தொ டுப்பேன்
போரானையை விட்டால் முலை யிரானைவி டுப்பேன்
பொழியம்புதொ டுத்தாலிரு விழியம்புதொ
[டுப்பேன்
தூராவழக் கிட்டாலினி வாராவழக் கிடுவேன்
தொல்லைக்கணை கொண்டேபடை
[வெல்லப்பொரு வேனே

தோழியே! (எல்லா நங்கையரும் போல யானும் வணங்குதற்குச் சென்று கண்ட பொழுது அவ்வளவில் என் கைவளையல்களை பற்றிக்கொண்டவராகிய) ஒப்பற்ற ஆனைக்காவிலே அழகிய வெண்ணாவல் மர நிழலில் வீற்றிருக்கும் சம்புநாதராகிய பெருமான், வீதியுலாவாக நம் தெருவகத்தே பவனி வருங்கால் அவருக்கு நேராக எதிர்செல்வேன். சென்று என்வளையல்கள் பறிபோயின உம்மால் அவற்றை இப்பொழுதே தருக எனக் கேட்பேன். அவ்வாறு கேட்க இயலா வகையில் அவர் என்னை 'நில்' என்று தடுத்தால் (அஞ்சாமல்) என் வளையலைப் பெறும் வழிவகையைச் சொல்லுக என்று தொடுத்து நிற்பேன், என்னை அச்சுறுத்த அவர் ஓர் யானையை ஏவினால் என்னுடைய தனங்களாகிய இரு கும்பயானைகளை அதற்கெதிராக விடுப்பேன். மழை போலப் பொழியும் அம்புகளை அவர் என் மீது தொடுத்தால் என் இரு விழியாகி அம்புகளை அவற்றிற்குமாறாக விடுத்து வெல்வேன்.

முற்றுப் பெறாத வலிவழக்கிடுவாரானால் இனி வழக்கே வாராநிலையில் முடிந்த வழக்கொன்றை இடுவேன், மேலும் பழமையான என் அம்புகளைக்கொண்டே அவர் படைகளையெல்லாம் வெல்லும் வகையில் போரிடுவேன் காண்பாயாக !.

['தோழி' முன்னிலையாகக் கொள்ளப்பட்டது. ஓராணைவனம் = திருவானைக்கா என்னும் சிவத்தலம். அத்தல விருட்சம் வெண்ணாவல் ஆதலின் அதன் கீழ்உறையும் பெருமான் என்றாள். வளை பறிபோனது கேட்பேன் என்றதனால் அவர்முன்பு கவர்ந்தமை குறிப்பாற் சுட்டினாளாம். 'வகை' என்றது நீதியை. தனத்தை யானை முகத்திற்கு ஒப்பாகக்கூறும் உவமைநயம் நோக்கி ஈரானை என்றாள், விழியும் அம்புக்கு ஒப்புமைப் பொருளாகலின் அவ்வாறு கூறினாள். இவற்றின் நயம் காணத்தக்கது. தூராவழக்கு = முடிவுபெறாத வழக்கு; தூர்தல் = நிரம்புதல். வாரா வழக்கு என்பது குறிப்பு அஃதாவது யான் இறந்துபடுவேன் எனவேவழக்கில்லை என்பதாம். தொல்லைக்கணை என்றது = தனது காதலை அன்றிச் சிறுகுறும்புகளாகிய தொல்லை எனறும் கொள்ளலாம்.]

தோற்றுவாய்

திருப்பனந்தாள் இறைவன்மேற் பற்றுக்கொண்ட ஒருவர் கூற்றாக அமைந்துள்ளது இப்பாடல் பெண்பால் கூற்றாகக் கொள்ளலாம்.

[அறுசீர் விருத்தம்]

162. சிலைச்சிக்கும் மதனெறிய விழிதிறந்த
திருப்பனந்தாள் சிவனே! மாயு
வலைச்சிக்கோ இடநினைந்தாய் உன்னையான்
வசப்படுத்த மாட்டே னென்றோ
கலைச்சிக்கோட் டன்னமின்னும் காணாத
சடைமவுலி மறைந்து போன
கலைச்சிக்கோ வளைந்ததுவும் கலயனுக்கோ
நிமிர்ந்ததுவும் கண்டுந் தானே.

[இப்பாடல் சிதைந்து இவ்வுருவில் காணப்படுகின்றது இத னுள் கூறப்பெறும் வரலாற்றுக் குறிப்பொன்று புதிதாக உளது திருப்பனந்தாள் இறைவன் தாடகை என்னும் அசுரமங்கையின் அன்பிற்குவந்து தன்முடியை வளைத்து அவள்சூட்டியமாலையை ஏற்றுக்கொண்டான் என்றும் குங்கிலியக் கலய நாயனார் தன் னெட்டியிற் கயிறுபூட்டி இழுக்கத் தலைநிமிர்ந்தான் என்றும் தல வரலாறு கூறுகின்றது. ஆயினும், இதனுள் "கலைக்சிக்கோ வளைந்ததுவும்" என்று கூறப்பட்டுள்ளது. ஆய்வுக்குரியதாக லின் ஈண்டு இப்பாடல் சுவடியில் உள்ளவாறே எழுதப்பெற் றது. கலைச்சிக்கோட்டன்னம்=பிரமதேவன்: கலை—சிக்கு—ஓட் டும் அன்னம் எனப்பிரிக்க. கலை = வேதம். 'அன்னம்' இறைவன். திருமுடிகளைக்காண பிரமன் எடுத்தவடிவம் ஆதலின் இவ்வாறு கூறப்பெற்றது.]

தோற்றுவாய்

பொதுவர்குலச் செம்மலும் நாங்கூரில் வாழ்ந்தவ னுமான திருமலையென்னும் வள்ளல்மீது ஒரு நங்கை கொண்ட விரகம்பற்றி அவள் செவிலித்தாய் கூறுவ தாக அமைந்துள்ளது இப்பாடல்.

[அறுசீர் விருத்தம்]

1௦3. வருமலைக்கும் தென்மலைக்கும் இருள்மலைக்கும்
வஞ்சியிவள் வாட மாரன்
பொருமலர்ச்செவ் வாளிவிட்டால் இளவயதில்
உளந்தரிக்கப் போமோ சொல்லாய்!
அரிமலைக்கும் சேதுவுக்கும் அடங்காத
கீர்த்திபெற்ற அரசே! நாங்கைத்
திருமலையே கூத்தனருள் தெள்ளமுதே
பொதுவர்குலச் செங்கண் மாலே!

வடக்கே திருவேங்கடமலைக்கும் தெற்கே சேதுவுக் குப் இடைப்பட்ட நிலமெங்கணும் அடங்காமல் விரிந்த

பெரும் புகழைப் பெற்றிருக்கும் அரசே! நாங்கூரில் விளங்கும் திருமலை என்னும் வள்ளலே! கூத்தன் என்னும் பெருமகன் தவத்தால் அருளிச் செய்த தெளிந்த அமிழ்து போன்றவனே! இடையர் குலத்திற்குச் செங்கண் மால்போல் விளங்குபவனே! வஞ்சிக்கொடி போலும் என்மகள் கடலிடத்தே பொங்கிவரும் அலைகளுக்கும் தென்பொதியிலிருந்து வீசும் தென்றற் காற்றினுக்கும், இருளாகிய மலைக்கும் மேனி தளர்ந்து உள்ளம் வாடி நிற்க, அவற்றிற்கும் மேலே மன்மதன் தன் போர் வில்லிலே மலர்களாகிய செவ்விய அம்புகளைத் தொடுத்து விடுவானாயின் இத்துணை இளவயதை உடைய இவள் தன் உள்ளம் பேதுறாமல் ஒருநிலையே நிற்கலாற்றுமோ? அறிவாற் சிறந்த நீயே கூறுவாயாக!.

[ வருமலைக்கும் = வரும் அலைக்கும். அலை — கடல்அலைகள். தென்மலை = பொதிய மலை. ஆகுபெயரால் ஆண்டிருந்து வீசும் தென்றற்காற்றுக்கு ஆயிற்று. இருள்மலை = இருளாகிய மலை. இஃது உருவகம்: இம்மூன்று பொருளும் காமுற்றுப் பிரிந்திருப்பாரை வருத்துவன. உளந்தரித்தல் = அமைதியாக இருத்தல். அரிமலை = திருவேங்கடமலை. அரி — திருமால். சேது—சேது அணைக்கட்டு. வடக்கும் தெற்கும் எல்லை கூறியது. மேற்கும் கிழக்கும் கடல் எல்லையாக நிற்றலின். அடங்காத கீர்த்தி எனவே இவ்வெல்லைக்குள் தோன்றிப் பிற இடங்களிலும் பரவுவதை உணரலாம். நாங்கை = நாங்கூர் என்னும் ஊரின் மரூஉப் பெயர். திருமலை—ஓர் குறுநில மன்னன் போலும். கூத்தன்—திருமலையின் தந்தை என்பது கூத்தனருள் தெள்ளமுதே என்பதால் உணரலாம்: தெள்ளமுதென்றருள் தலைவிக்கு அருள் செய்ய வேண்டுமென்று கருதி. செங்கண்மால் = கண்ணன். பொதுவர் = இடையர், ஆயர்.]

[தோற்றுவாய்]

நிலவொளியின் வரவால் பேதுற்று நிற்கும் ஒருதலைவியின் நிலையை அவள்தோழி எடுத்துக்கூறி வருந்துவ

தாக அமைந்துள்ளது இப்பாட்டு. இதனுள் குமரபூபதி என்னும் வள்ளல் கிளவித் தலைவனாகவும் பாட்டுடைத் தலைவனாகவும் சிறப்பிக்கப்பெறுகிறான்.

[அறுசீர் விருத்தம்]

164. கணநாதன் றனையும்மந்த வள்ளிநா
தனையும்மகம் புகுந்தான், லெட்சு
மணநாதன் அளித்தமைந்தன் குமரபூ
பதியனங்கன் மைய லாலே
பணநாத நிதம்பமயில் வெண்ணிலவுக்
கொதுங்கிமெத்தப் பதைத்தாள், பாம்பின்
அணைநாதன் மகன்கணைகள் அகந்துளைக்க
மெலிந்துமிக அயர்ந்திட் டாளே.

கணநாதனாகிய விநாயகனையும் வள்ளிநாயகனாகிய முருகனையும் தன்னெஞ்சத்திலே அமைத்துக்கொண்டவனாகிய இலட்சுமணநாதன் என்னும் தந்தையால் பெற்றளித்த மைந்தனாகிய குமரபூபதி என்னும் மாரவேளை யொத்தவன்மேல் கொண்டகாதல் மயக்கத்தாலே நாகத்தின் படம்போலும் அல்குலையுடைய மயிலன்னளாகிய இவள் வெண்ணிலவின் வெப்பத்திற்கு ஆற்றாமல் ஒதுங்கி, மிகவும் நெஞ்சு நடுக்குற்றாள்; அதற்குமேலே பாம்பணையின்மேல் துயில்கொள்ளும் திருமாலின் மகனாகிய மன்மதனின் மலரம்புகள் துளைக்க அதனால்மேனி மெலிந்து மிகவும் தளர்ந்தயர்ந்துள்ளாள் என்செய்வது நீயே அருள்புரிவாயாக.

[புகுந்தான் என்பதால் அக்கடவுளர் இருவரையும் மறவாமல் வழிபடும் நெஞ்சுடையான் என்பது புலனாகும். பணநாக நிதம்பம் = இடக்கர் உறுப்பு. பணம் = பாம்பின்படம். ஒதுங்கு

தல் = அஞ்சிமறைதல். பாம்பின் அணைநாதன் = திருமால். குமர பூபதி அனங்கனையொப்ப அழகுடையான் எனப்புலப்படுத்தினான்.]

**தோற்றுவாய்**

பேதைப் பருவத்தாள் ஒருத்தியின் நெற்றியழகிலும் கூந்தல் அழகிலும் மனம் பறிகொடுத்த காளையொருவன் தன் மையல் தோன்றும் வண்ணம் கூறிய கைக்கிளைப் பாடல் இது. இதனுள் குமரபூபதி சிறந்த சிவபக்தன் என்பது புலப்படுத்தப்படுகிறது.

[அறுசீர் விருத்தம்]

165. **எருக்கிலே விரிந்தமலர் இதழியிலே**
**விரிந்தசடை யீசற் கன்புப்**
**பருக்கிலே செயுமகிபன் குமரபூ**
**பதிநாட்டிற் பேதை யார்தம்**
**முருக்கிலே சிவந்தவிதழ் முகத்திலே**
**மொழியினிலே முகிழ்ப னிச்சைச்**
**சொருக்கிலே நெற்றியிட்ட சுட்டியிலே**
**என்னுவி சூழந் தானே.**

எருக்கஞ் செடியில் தோன்றி விரிந்த மலரானது கொன்றை மலரோடு இணைந்து கமழும்படியாக அணிந்த விரிந்த சடையையுடைய சிவபெருமானிடத்துப் பெருகிய அன்புசெய்து வழிபடும் குமரபூபதியின் நாட்டிலே வாழும் இப்பேதைப் பருவமுடையாளின் முருக்கமலர் போலும் சிவந்த வாயிதழ் அழகிலும், முகத்தழகிலும், மொழியினிமையிலும் முகிழ்ந்து விளங்கும் தலைக்கொண்டையைச் சொருகியிருக்கும் அழகிலும், நெற்றியிடத்துத் திகழும் சுட்டியின் அழகிலும் ஈடுபட்டு என் உணர்வு சூழும். என் செய்வேன்!.

[தாழ்ந்த எருக்கமலரும் உயர்ந்த இதழியோடு சேர்ந்து சடையிலே மலரும் என்று இறைவனின் பரங்கருணைத் திறத்தைச் சுட்டிய நயம் சிந்திக்கத்தக்கது. மகிபன் = மன்னன. பேதையார் என்பது ஒருவரைக்கூறும் பன்மைக்கிளவியாகிய உயர்சொல். முகத்தில், மொழியில், சொருக்கில் என்பதால் அவ்விடத்துள்ள அழகெனக் கொள்ளபபட்டது. சொருகு—சொருக்கென விகாரமாயிற்று. சுட்டி = சிறுமியர் நெற்றியில் அணியும் ஓர் அணிகலன். ஆவி = ஈண்டு அறிவோடு கூடிய உணர்வைச் சுட்டியது. தான்—அசை, தானே சூழும் எனப் பரவசமாகவும் கொள்ளலாம்.]

தோற்றுவாய்

குமரபூபதியின்மேல் காதல் கொண்டாள் ஒருத்தியின் நிலையைச் செவிலி கூறி அருள் செய்யுமாறு வேண்டுவதாக அமைந்துளதிப் பாடல். இதனுள் குமரபூபதியின் ஊர் பொன்மாறை என்பதும் இவன் ஓர் சிறந்த வள்ளல் என்பதும் புலவர்களைப் போற்றுபவன் என்பதும் புலப்படுத்தப்பெறுகின்றன.

[கட்டளைக் கலித்துறை]

166. படுக்கும் பொழுதும் குமரா
வெனும்பஞ்ச பாணன்முல்லை
தொடுக்கும் பொழுதும் அதுவேசொல்
லுந்துயர் தீர்த்தருள்வாய்!
அடுக்கும் பசுந்தமிழ் வாணருக்
கேநிதி ய்ள்ளியள்ளிக்
கொடுக்கும் கொடைகற்ற பொன்மாறை
வந்த குமரப்பனே!

செந்தமிழ்ச் சொற்களை யாப்பாலே அணிநயம்பட அடுக்கும் தமிழ்வாணர்களுக்கெல்லாம் செல்வத்தை அள்ளியள்ளிக் கொடுக்கும் கொடையாகிய கலையைத்

நிரியின்றிக் கற்றுப் பொன்மாறை நாட்டில் தோன்றி விளங்கும் குமரப்பபூபதியே! என்மகளாகிய இவள் உளஞ் சோர்ந்து படுக்கும்பொழுதும் "குமரா" என அடைக்கலம் மொழிவாள். மன்மதன் இவள்மீது முல்லைக்கணையைத் தொடுக்கும்பொழுதும் அவ்வாறே அப் பெயரையே சொல்லுவாள். ஆதலின் இவள் துயரத்தைத்தீர்த்து அருள் செய்வாயாக!

[படுக்கும் பொழுது என்பது, தலைவி தன்னோடு உறங்கப் பள்ளிகொள்ளும் பொழுது குமரா என்பாள் என்றாள். முதற்கண் அவள் குமரா என்றதும் முருகனைத்தான் வணங்கிமொழிகின்றாள் என நினைத்தேன். பின் பஞ்சபாணன் கணைதொடுக்கும் போதும் கூறியதால்தான் உன்னை எண்ணி மொழிகின்றாள் என உணர்ந்தேன் என்பாள் அதுவே சொல்வாள் என்றாள். தலைவனின் நாமத்தைத்தான் கூற நாணி அதுவே சொல்வாள் என்றாள் செவிலி. இந்நயம் சுவைக்கத்தக்கது. பஞ்சபாணன் = மாரவேள். முல்லைக்கணை :— தலையிடமாக எய்தப்பெற்று அறிவைக் கலக்கிக் கிடத்தும் இயல்பினதாகலின் முல்லை என்றாள், செய்யுளை, அடுக்கும் பசுந்தமிழ் என்றும் புலவர்களைப் பசுந்தமிழ் அடுக்கும் வாணர் என்றும் கூறும் நயம் மகிழ்ந்துணரத் தக்கது. அளவில்லாமல் என்பார் அள்ளியள்ளி என்றார். பொன்மாறை = ஊர்ப்பெயர்.]

**தோற்றுவாய்**

இதுவும் முன்னைப்பாடல் போன்றது. இதனுள், குமரப்பபூபதி தமிழ்ச் சுவையறிஞன் என்பதும் பொன்மாறை மருதநிலஞ் சான்றதொரு ஊர் என்பதும் புலப் படுத்தப்படுகின்றன.

[கட்டளைக் கலித்துறை]

167. தவிக்குஞ் சிறுபைங் கிளிமொழி
யாளைத் தழுவியனு

**பவிக்கும் படிக்கு நினைந்தரு**
**ளாய்பகர் வாக்கினுக்கும்**
**செவிக்கும் ருசிக்கத் தமிழ்கொள்ளு**
**வோய்குளச் செந்நெல்வளம்**
**குவிக்கும்பொன் மாறைப் பதிவாழ**
**வந்த குமரப்பனே!**

சொல்லுவோருடைய நாவுக்கும் கேட்போருடைய செவிக்கும் சுவைதரவல்ல செந்தமிழ்வாணர்தம் புகழ் மொழியைக் கொண்டு விளங்குவோய்! குளச்செந்நெல் லால் வளம் மிகுந்தோங்கும் பொன்மாறைப் பதியில் வாழும் குமரப்ப பூபதியே! உன்னை அடைந்து மணக் கத் தவிக்கும் என் மகளாகிய சிறிய பசுங்கிளிபோல் மொழி பகருமிவளை ஆரத்தழுவித் துய்ப்பதொரு அருளை நினைந்து அருள்வாயாக!

தவித்தல் = அடைய வேண்டுமென்ற மனத்துடிப்பு. படிக்கு —படியை என வேற்றுமை மயக்கம். படி ஈண்டு மனநிலை. தமிழ் = புலவர்தம் புகழ்மொழியாகிய பாடல்கள். அவை பாணர்வாயிலும் சான்றோர் செவியிலும் ஏறிச் சுவைதரும் எனக் குமரப்பபூபதி யின் தூயபுகழைச் சிறப்பித்தார். குளநெல் = நெல்வகைகளுள் ஒருசாதி.]

### தோற்றுவாய்

இது முதல் மூன்றுபாடல்கள் கதிர்காமம் திருத் தணி முதலிய பதிகளில் கோயில் கொண்டருளியிருக்கும் சுப்பிரமணியக் கடவுள்மீது அவனடியார் ஒருவர் பாடி யவைகளாகக் காணப்பெறுகின்றன. நயமும் சுவையு முள்ள இப்பாடல்கள் இடையிடையே சிதைந்துள்ளன. ஆதலின் பொழிப்புரையின்றிக் குறிப்புரைமட்டும் எழு தப்படுகின்றது.

[எண்சீர் விருத்தம்]

168. அங்கண் மாநிலத் தாய்கருப் பட்டிழி
அந்த நாள்முத லின்றள வாகவே
— ங்க ... யாலே.... தேவியுமென்
நோய்த விர்த்துன் ஒளிகொடுத் தாளுவாய்
சங்க ரற்குப் பிரணவப் பொருளினை
சாற்றி வாசத் தமிழ்க்கோன் எனப்பொலி
வங்க வாரி புடைசூழ் கதிரையில்
வந்த சுப்பிர மணியக் கடவுளே!

[அங்கண் மாநிலம் = இடமகன்ற பேருலகம். ஆய் — தாய் கரு = தோற்றம்: வங்கம் — கடற்கலம். வாரி = செல்வம். கதிரை = கதிர்காமம்.]

[எண்சீர் விருத்தம்]

169. நொந்து தரித்திரத் தாலு றும்பொருள்
நோக்க மின்றி........னுலைபோல்
எந்தநேரமும் துன்புறும் என்னுளத்
திருள்வி லக்கியெ ழில்கொடுத் தாளுவாய்
செந்தியோ ... ... ழமலை
திருத்தணிப்பதி தென்காவ ளூரென
வந்தித் தேத்தும் பரங்குணக் கதிரையில்
வந்த சுப்பிர மணியக் கடவுளே.

[எண்சீர்விருத்தம்]

170. .... .... .... மிழுசியாத செல்வம் பொன்னும்
பூணுறு பொற்பெனும் போதக மாகையால்
மொழிந்தேன் நின்னருள் சுரந் .... ... ...
........வெனையாளுவாய்
வாழைபலா ஞானி சண்பகம் புல்லுழ

........தேக்ககில்
பூமரப் பொதும்பர் பொழிலகமாக நீடி
.... .... வளர்க .... .... .... ...
............. வந்த சுப்பிர மணியக் கடவுளே.

தோற்றுவாய்

கண்ணப்பன் என்ற தமிழ்ச்செல்வன் ஒருவன் மகனாகிய தம்பிராயப் புலவனுடைய கவி வன்மையையும் கல்விப் பெருக்கையும் மற்றொரு புலவர் பாராட்டிப் போற்றுவதாக அமைந்துள்ளது இப்பாடல். பிற வரலாறுகள் புலனாகவில்லை.

[எண்சீர் விருத்தம்]

171. பாலுடனே முப்பழத்தைக் கருப்பஞ் சாற்றைப்
பாளிதத்தைத் தீந்தேனைப் பாகாய்க் காய்ச்சி
வேலையென நாடோறும் பொசித்துண் டாலும்
வேண்டாம் தெவிட்டிவிடும் மேன்மே லின்பம்
போலவிரு செவிக்கூட்டும் கவிதா சாரம்
புகலுவருன் போலிந்தப் புவிமீ துண்டோ?
ஞாலமது வேபுரக்கும் கண்ண னீன்ற
தம்பிரா யப்புலவா சதுர வேளே!

உலகத்தைக் காத்தருள் செய்யும் பெருவள்ளலாகிய கண்ணன் என்னும் பெருமகன் ஈன்றளித்த தம்பிராயப் புலவர் பெருமானே! சதுரப் பாடுடையவேளே! இனிய பாலோடு முப்பழச் சாற்றையும் கருப்பஞ் சாற்றையும் கலந்து பாளிதத்தையும் தேனையும் கூட்டிப் பாகாகக் காய்ச்சிக் கடலளவு உண்டாலும் வேண்டாம் என்பார், ஏனெனின் அச்சுவை உண்போருக்குத் தெவிட்டிவிடும். உண்ண உண்ண மேலும் மேலும் இன்பம் இருசெவிக்கும் ஊட்டும் உன்னுடைய கவிதா

சாரம் உன்னைப்போலப் புகன்றளிப்பவர் இப்புவிமீது வேறு யாரேனும் உளரோ இல்லை.

[பாளிதம்=கண்டசருக்கரை. வேலை=கடல். பொசித்து= புசித்து. போல என்பது ஈண்டு அசை. நாச்சுவையினும் செவிச் சுவை சிறந்ததெனினும் இவ்வளவும் சேர்ந்த பாகினும் இனியது எனக் கவிதைச் சிறப்புக் கூறப்பட்டது.

தோற்றுவாய்

இச்செய்யுளும் அடுத்த செய்யுளும் மேற்கூறப் பெற்ற தம்பிராயப் புலவரெனும் பெருமகனின் சிறப் பையும், அவன் கவிதைச் சிறப்பையும் கூறுகின்றன. இவ் இரு பாடல்களும் இடையே சில சீர்கள் சிதைந்து விட்டன

[எண்சீர் விருத்தம்]

172. வாலகவி அமிர்தகவி புல..............சென்னி
வையை .... கவி... த்திரகவி மண்டலேந்திரன்
மேலுமே லெனப்புறக்கும் கவிஞானை
விந்தகவி யிந்தகவி மேன்மை யான
'நாலுகவித் திறஞ்சே ராச .... கவி
........செல்கவி யென்ன அன்ன திறமா யோங்கு
பாலகவி கண்ணப்பன் பரிவாய் ஈன்ற
பாலதம்பி ராயகவி என்ப தாமே!

[பாடல் சிதைந்துள்ளமையால் இப்பாடலுக்கும் அடுத்த பாடலுக்கும் செவ்வையான பொருள் காணக்கூடவில்லை]

[அறுசீர் விருத்தம்]

173. அம்பிரா யசநடந்து பாற்கடலிற்
பள்ளிகொள்ளும் ஐயன் பாதம்
நம்பிரா யனைப்போல வளர்நிருபன்
........ ...........ப்ப னரிய பாலன்

**எம்பிரான் இமையவர்கள் தம்பிரான்**
**றனக்குரையே எய்து மெங்கள்**
**தம்பிரா யனைப்போற்றும் தம்பிரா**
**யப்புலவன் தரும வானே!**

தோற்றுவாய்

தகுபாடி என்னும் ஊரில் வாழ்ந்த வேங்கடபதி ராயன் என்னும் வள்ளலைக் கூடிமகிழ்ந்து அக்கிளர்ச்சி யோடிருக்கும் தலைவி ஒருத்தியிடம் அவள்தோழி அசதி யாடிக் கூறியதாக அமைந்துளது இப்பாடல்.

[எண்சீர் விருத்தம்]

174. **வால கோகில வஞ்சியை ரஞ்சித**
**வசன மோகன வல்லியைப் புல்லியே**
**நீல மாலையும் சேலையும் ஈந்தது**
**நேற்று வந்து நிகழ்த்தினர் கேட்டிகாண்**
**வேலை சூழ்புவி எங்கணும் காத்தருள்**
**வீர பத்ரன் வழங்கிய செல்வமோ?**
**கால காலரைப் போற்றுந் தகுவையிற்**
**கன்ன னேவேங் கடபதி ராயனே?**

என் அருமைத் தோழியே இனிய கோகிலம் போலும் வஞ்சியை சுவைமிக்க மொழிபேசும் மோகன வல்லியை நேற்றுவந்து நீலமணி மாலையையும் சேலையை யும் ஈந்து புல்லி அது நிகழ்த்தினர்(அவர்யார்)எனக்கேட் பாய் காண்! கடலாற் சூழப்பெற்ற இப்புவி முழுதையும் பேணிக் காத்தருள்புரியும் வீரபத்திர வள்ளல் இவ்வுல கிற்கு வழங்கிய செல்வமோ? சிவபெருமானை வழிபடும் சால்புடையோர் வாழும் தகுபாடியில் விளங்கும் கன் னனோ? (ஆம்) வேங்கடபதிராயனே?

[வாலகோகிலப் = இளங்கிளி, குயில். வஞ்சி=கொடி. ஈண்டு உவமஆகுபெயராய்த் தலைவியைச் சுட்டிநின்றது. ரஞ்சிதம் இரஞ்சிதம்: பிரியம்—இன்பம். வல்லி—கொடி: புல்லுதல்=கட்டியணைத்தல், அதுநிகழ்த்தினர் எனக்கூட்டுக. அது=கலவியினை காண்—முன்னிலையசை. வேலை = கடல். காலகாலர்=சிவபெருமான் தகுவை=தகுபாடி என்னும் ஊர்ப்பெயரின் மரூஉ. கன்னன் =கர்ணன்: அவனொத்த கொடையாளி என்பது உணர்த்திற்று. பிறநயங்களும் காண்க.]

தோற்றுவாய்

தகுபாடி வேங்கடபதிராயன்மேல் காதலுற்று அவன் கூடப் பெறுமையால் வருந்தியிருக்கும் ஒருதலைவி பால் அவள்தோழி வேங்கடபதியின் கூட்டச் சிறப்பை ஓதி, அதுகிட்டுதல் எளிதாகுமோ எனக்கூறுவதாக அமைந்துள்ள இப்பாடலில் அவன் வீரச் சிறப்பும் புலப்படுத்தப்படுகிறது.

[எண்சீர் விருத்தம்]

**175. பதினைந்திடம் அமுதங்கொள ஆலிங்கன மைந்தால்**
**பச்சைக்கொடி யிடையாள்மனத் திச்சைபடி தானே**
**மதிதங்கிய முகமேல்முக மதிவைத்தலர் மலர்மேல்**
**வண்டாமென வணையுந்தொழில் கொண்டாடவும் [எளிதோ?**
**முதிருங்கட கரிவெண்பரி பெறு........சொல் லெல்லாம்**
**[முட்காடும ரக்காடுமு ரிந்தோடவெ திர்ந்தே**
**சதுரம் பொலி விசையம்பெறு கருடக்கொடி யரசே**
**தமிழ்வேங்கட பதியேபுகழ் தகுபாடியினனே!**

உயர்ந்த மதயானைகளும் வெண்ணிறக் குதிரைகளும் உடைய படைகளோடு மன்னர்கள்பெற்ற பெரும் புகழ் எல்லாம் முள்நிறைந்த காட்டிடத்தும் மரங்கள்

அடர்ந்த காட்டிடத்தும் அப்பகை மன்னர்களோடுமுரிந்து ஓடுமாறு அவரை எதிர் நின்று பொருது தன் அறிவாலும் ஆற்றலாலும் வெற்றியைப்பெற்று விளங்குங்கருடக்கொடியை உடைய அரசனும், தமிழ் கமழும் வேங்கடபதி என்னும் பெயரினனும் தகுபாடியின் வேந்தனுமான அவனைக்கூடிப் பதினைந்து இடங்களில் அமுதம் பொங்க ஐவகையாலிங்கனத்தோடு பசுங்கொடி போலும் இளையாளாகிய உன் மனங்கொண்டவிருப்பப்படி மதிபோலும் முகத்திலே அவன் மதிபோலும் முகத்தை வைத்து அலர்கின்ற மலர்மேல் படியும் வண்டு போலப் படிந்து அணைந்து புரியும் தொழில் வல்ல இன்பத்தைக் கொண்டு துய்த்தல் என்பது எளிய செயலோ? (அத்துணை யருமைகாண் என்றாள்.)

[இனி அரசே! வேங்கடபதியே! பாடியினானே! என அவ்வள்ளலை விளித்துப் பச்சைக்கொடிபோலும் இடையுடைய இளையவளான இத்தலைவியை உன் உள்ளம்போல் துய்ப்பது என்பது அவ்வளவு எளிதோ? என்தலைவி அரியாளகாண் எனத்தோழி தலைவனிடம் கூறியதாகவும் பொருள் காணலாம். ஆலிங்கனம் ஐந்தும் அமுதநிலை பதினைந்தும் பின்னர்க் காண்க. அணையுந்தொழில் = கலவித்தொழில். சொல் = புகழ். இடையே இவ்வடி சிதைந்துள்ளது. சதுரம்=ஞானம்—நான்கு. விசையம்= விசயம்—வெற்றி. அமுதநிலை பதினைந்து :— தலைவியின் பெருவிரல், புறந்தாள்பரடு, முழந்தாள், நிதம்பம், நாபி, மார்பு, தனம், கை, மூலம், கழுத்து, கபோலம், வாய், கண், நெற்றி, உச்சியாகிய பதினைந்திடங்களும் அமுதநிலைகளாம். வளர்பிறையில் இடதுகால் பெருவிரல் முதலாக உச்சிவரைக்கும், தேய்பிறையில் உச்சி முதல் வலதுகால் பெருவிரல்வரைக்கும் ஒவ்வொரு திதிக்கும் ஒவ்வோரிடமாக ஏறியும் இறங்கியும் நிற்கும். அவ்வந் நாட்களில் அவ்விடமறிந்து இன்பூட்டிக் கலவி செய்யவேண்டுமென்பார் இன்பநூலார். இனிநூல்களுள் ஆலிங்கனம் எட்டென்பர்.

அவையாவன :— லதாவேஷ்டிதம், விருக்ஷாதி யாலிங்கனம், திலதண்டு வாலிங்கனம், க்ஷிரநீராலிங்கனம் உரூப்பிரகூடாலிங் கனம் சிகனேப சிலேக்ஷாலிங்கனம், ஸ்தனலிங்கனம், வாலாடி காலிங்கனம் என்பனவாம். இவற்றுள் ஐந்தே சிறப்புடையன எனக்கருதி ஆசிரியர், ஆலிங்கனமைந்தும் என்றார்போலும். இவற்றின் விளக்கத்தைக் காமநூலுட் காண்க.]

தோற்றுவாய்

செழுவாபுரி என்னும் செழுவூரில் கோயில்கொண் டெழுந்தருளியிருக்கும் செழுவேசர்மேல் பற்றுளங் கொண்ட புலவர் ஒருவர் அருள்வேண்டிப்பாடி அவ்வி றைவனைச் சிறப்பிப்பதாக அமைந்துள்ளன பின்வரும் நான்குபாடல்களும்.

[கட்டளைக் கலித்துறை]

176. அறியேன் பிறதுணை உன்துணை யேயென்
றறிவனுன்னைப்
பிரியேனென் பார்தனே நான்பிரி யேன்பின்னை
வேறுகண்ணிற்
குறியேனின் கோலங் குறித்துக்கொண் டேனன்பர்
கூறுந்தவ
நெறியே! சிவானந்த மே!செழு வாபுரி
நின்மலனே!

அறநெறி சான்ற பெரியோர்கள் கூறுந் தவநெறி யே! சிவானந்தமே; செழுவாபுரியில் விளங்கும் நின் மலனே! பிறதுணை ஒன்றையும் அறியேன், எல்லாம் உன்துணையே என்று அறிவேன்; உன்னைப்பிரியேன் என்று கூறும் அடியார் கூட்டத்தைவிட்டு யான்பிரி யேன் அதன்பின் என்கண்ணில்வேறு ஒன்றையும் குறியேன் உனது திருக்கோலத்தையே குறித்துக் கொண்டேன் அருள்வாயாக.

[கண்ணில் வேறுகுறியேன் என்றது பிறவற்றை நோக்கேன் என்பதாம். அஃதாவது சிறுதெய்வங்களை என்றபடி.]

தோற்றுவாய்

இதுவும் செழுவேசர்பற்றிய பாடலாகும் இதன் இரண்டாம் மூன்றும் அடிகளின் இறுதிச் சீர்கள் சிதைந்துள்ளன. பாடமும் தெளிவாகவில்லை.

[கட்டளைக் கலித்துறை]

177. மடப்பாவை கேள்வர் செழுவேசர்
பாதம் வணங்குவிர்போல்
நடப்பான் கருத்தினை யேயணங்
கேபல நாடொன்று ...............
தடப்பார் துளக்கென்று வெந்துயர்
தீர்த்தல் சுமந்து...........
படப்பான் முயற்சிச்சு ருள்நா
றியகொடும் பாலையிலே!

தோற்றுவாய்

இதுவும் செழுவேசரைப் பாட்டுடைத் தலைவராகக் கொண்ட அகத்துறையைச் சேர்ந்த பாடலாகும். பாடம் தெளிவாக வில்லை.

[கட்டளைக் கலித்துறை]

178. பாலையும் தேனையும் தாராம
லுங்கள் பவளமுமை
வேலையும் தேயுமென் றேபிரிந்
தீர்செழு வேசர்கொன்றை
மாலையும், தேயும் பிறையும்வைத்
தோர்வெற்பில் மாதர்குழல்
சோலையும் தேனல்ல வோவது
காணுஞ் சுவைபெற்றதே!

தோற்றுவாய்

பெற்றோர் முதல் எல்லாஉறவுகளும் நீயே! கல்வி முதலாய கலைகளும் நீயே எனச் செழுவேசரைப் போற்றியும் அவர்தம் பேரருளை வேண்டுவதாகவும் அமைந்துள்ளதிப்பாடல்.

[கட்டளைக் கலித்துறை]

179. பெற்றரும் நீ,குரு பீடமும்
நீ,பிறப் பேழினுக்கும்
உற்றரும் நீ,யுற்ற பாங்கரும்
நீ,யுரை யாதமொழி
கற்றரும் நீ,கற்ற பாடலும்
நீ,யெனைக் காதலிக்கும்
அற்றரும் நீ,யுமை பாகர்
செழுவை யரும்பொருளே!

உமையை நின் உடம்பின் ஒரு கூறாகக்கொண்டு செழுவையம்பதியில் விளங்கும் அரும்பொருளாகிய இறைவா! எனக்குப் பெற்றோரும் நீ, ஏழுபிறப்பினுக்கும் உற்றோரும் நீ, நெஞ்சு பொருந்திய நண்பரும் நீ, பிறரால் உரைக்க இயலாத வேதத்தைக் கற்றோரும் நீ, எல்லோரும் கற்றுணர்ந்து பாடும் பாடலும் நீ, எனைப் பேணிக்காதலிக்கும் அத்தகையோரும் நீயேயாவாய். ஆதலின் எனை ஆண்டருள் செய்வாயாக.

[உற்றார் = உறவினர். பாங்கர் = நண்பர். உரையாத மொழி = இறைவன் அருளிய வேதங்கள். பாடல் = நாயன்மார்களும் ஆழ்வார்களும், ஞானிகளும் திருவாய்மலர்ந்தருளிய அருட்பாடல்கள். அற்றாரும் = அத்தகையாரும் என இவ்விடத்திற்கேற்பப் பொருள் கொள்ளப் பெற்றது. உமை = பார்வதி.]

தோற்றுவாய்

இருளப்பன் என்னும் வள்ளலிடத்துச் சென்ற புலவர் ஒருவர் ஈயாத செல்வர்பால் என்னைச் செல்லவிடாமல் வழங்கியருளவேண்டும் என்னும் கருத்தில் தன் வேட்கையைப் புலப்படுத்தி அவ்வள்ளலைச் சிறப்பிக்கின்றது இப்பாடல்.

[அறுசீர் விருத்தம்]

180. பூண்டறிய உடைமையெல்லாம் இறுமாந்து
பூவையர்க்கே புகழ்ந்து சொன்னம்
வேண்டியதெல் லாமளிக்கும் புல்லரிடத்
(தேசெல்ல) வேண்டேன் கண்டாய்
மூண்டுவரும் சமர்க்கொருபஞ் சானனன்போல்
வந்துதித்த முதல்வா சித்தர்
ஆண்டியப்பன் தவத்தில்வந்த இருளப்ப
மகிபாலா அணங்க வேளே.

இகல்கொண்டு திரண்டுவரும் போர்களத்தே ஒப்பற்றதொரு சிங்க ஏறுபோல் வந்து தோன்றி விளங்கும் முதல்வா! சித்தர் ஆண்டியப்பன் என்னும் பெருமகனின் தவத்தினாலே பிறந்த இருளப்ப மகிபாலா! அனங்கவேளே! தாம்கொண்டிருக்கும் அரிய பொருள்களையெல்லாம் தம் செருக்கினாலே (இரவலர்க்கீந்து உவப்படையாமல்) சிற்றின்பத்தை வெஃகிப் பரத்தைப் பெண்டிர்கட்கே, அவர் விரும்புமாறு புகழ்ந்து பேசிப் பொன்னும் பொருளுமாக, அவர்வேண்டியவெல்லாம் அளித்துநிற்கும் புன்மையுடைய உலோபியர்களிடத்து யான் செல்லேன் அறிவாயாக.

[பூண்டு=தாமேதுய்த்து எனலுமாம். இறுமாந்து=ஆணவத்தால் செருக்குண்டு. சொன்னம்=(சொர்ணம்) பொன். புல்லர்=சிறியோர், (கயவர்). சமர்=போர். பஞ்சானனம் =சிங்கம்.

சித்தர் ஆண்டியப்பன் என்பான் இருளப்பனின் தந்தை எனத் தெரிகிறது. மகிபாலன்=உலகத்தைக் காப்பவன்: அணங்க வேள்=மன்மதன் (உடம்பில்லாதவன் என்பது பொருள்)]

---

தோற்றுவாய்

சின்னவ பூபாலன் என்னும் குறுநில மன்னவன் பால் வேட்கைகொண்ட ஒருத்தி தன் விரகத்தால் வண்டினைப் பார்த்துத் தன் துன்பத்தைக் கூறி அவனை அழைத்துவருமாறு கூறுவதாக அமைந்துள்ளது இப் பாடல். அகப்புறப் பெருந்திணையின்பாற்படும். வண்டு விடுதூது என்னும் துறையுள் அடங்கும்.

[அறுசீர் விருத்தம்]

181. ஆராயும் தமிழாளன் இராசைவரு
மன்னப்பன் அளித்த பாலன்
வாராரும் தனத்தார்வேள் சின்னவபூ
பாலனெனை மருவா நாளில்
•போராரும் சிலைமதவேள் கணையாலும்
நிலவாலும் பொங்கும் ஓத
நீராழி ஒலியாலும் வாடுவது
சொலிக்கொண ரீர்நீர் வண்டீரே!

யான் அணியும் மாலையிடத்துத் தேனைவிரும்பி வரும் வண்டுகளே! புலவர்கள் ஆராயும் தமிழை ஆளும் பண்பாளன், இராசை என்னும் ஊரிடத்தே திகழும் அன்னப்பன் தவத்தால் அளித்த பாலன், கச்சணிந்து விளங்கும் தனத்தினையுடைய மாதராருக்கு வேள் போன்றான் ஆகிய சின்னவபூபாலன், என்னை மருவி இன்புறுத்தாத நாளிலே பிரிந்தாரை வென்று துன் புறுத்தும் போரில் வல்ல கரும்புவில்லை உடைய மன்மத

ணின் மலரம்புகளாலும், (நெருப்பைச் சொரியும்) தண்ணிலவாலும் வாடித் துன்புறுகின்ற நிலையைச் சொல்லி அவரை என்பால் கொண்டுவரமாட்டீர்கள் நீங்கள். (உங்களால் பயன் என்ன?)

[தமிழாராய்வாளன் என மாறிக் கூட்டலுமாம். இராசை= ஓரூர். மன்னப்பன் =சின்னவபூபாலன் தந்தை எனத்தெரிகிறது. அன்னப்பன் எனவும் பிரிக்கலாம். அது பிரமனுக்கு ஒருபெயர். அன்னதானம் செய்பவன் என்றுமாம். மன்னப்பன் என்பதே பொருந்தும். அடுத்தப்பாடலில் மன்னபூபதி என்று காணப்படுகிறது. வார்=பெண்டிர் மார்பை மறைத்தணியும் கச்சு. மருவுதல்=அணைதல். சிலை=வில். கணை=அம்பு. ஓதநீராழி=கடல். கொணரீர்=கொண்டு வருவீர்களாக என ஏவல்வினையாக்கலுமாம். சின்னவன் பூபாலன் என்பது உயர்திணைப்பெயர். சந்தியால் விகாரப்பட்டு சின்னவபூபாலன் எனநின்றது. சின்னவன் =குமரனுக்கும், இளையபெருமாளுக்கும் பொதுவாகியபெயர்.]

---

தோற்றுவாய்

முதற்பாட்டுள் கூறப்பெற்ற மன்னனையே சிறப்பித்துப் பாடாண் பாட்டாகப் பாடப்பெற்றுள்ளது இச் செய்யுள். இதனுள் சின்னவபூபாலன் பெயர் சின்னத் தம்பி எனவும், இவன் தந்தையின் பெயர் மன்னபூபதி என்றும் காணப்படுகின்றன. இப்பாடல் முழுவதும் இவ்வள்ளலின் சிறப்பைக்கூறி விளிப்பதாகவே அமைந்துள்ளது. வினைமுற்றுப் பயனிலையோடு அடுத்து ஒருசெய்யுள் இருந்திருக்க வேண்டும். சுவடியில் காணப் பெறவில்லை.

[எண்சீர் விருத்தம்]

**182. பொங்குமுகில் செறிசோலை இராசைவரு வாழ்வே!**
**புவிராசர் கொண்டாட வருசிந்தா மணியே!**
**செங்கமல மாதுவளர் திண்புயா சலனே!**
**செந்தமிழுக் கருள்புரிய........தொருகரனே!**

**மங்கையர்கள் மோகனென வருமதன வேளே!**
**மன்னபூ பதிமகிழ வந்தருள்கு பேரா!**

**சிங்கமென மருவாரை வென்றரகு ராமா!**
**தீரனென வருசின்னத் தம்பியபி ராமா!**

மழைத்துளிகள் பொங்கி உலவும் மேகங்கள் செறிந்த சோலைவளம் மிக்க இராசை என்னும் மாநகரத்தில் விளங்கும், எங்களுடைய வாழ்வே! உலகத்து அரசர்கள் எல்லாம் போற்றிக் கொண்டாட வந்துவிளங்கும் சிந்தாமணியே! செந்தாமரை மலரின்கண் வாழும் இலக்குமி விளங்குகின்ற திண்ணிய மலைபோலும் தோளுடையாய்! செந்தமிழ் வாணருக்கு அருள்புரிய வந்து விளங்கும் ஒப்பற்ற திருக்கரங்களையுடையவனே! மங்கையர்கள் பேரவாக் கொள்ளும் தன்மையெனப் போற்ற வந்து திகழும் மாரவேளே! மன்னப் பூபதி(க்கு மகனாய்த் தோன்றி அவன்) மகிழ்ந்து உவப்பத் தோன்றி விளங்கும் குபேரா! பகைவர்களைப் போரில் அரியேறென வென்று திகழும் இரகுராமா! பெரு வீரன் என மறவர்கள் போற்ற விளங்கும் சின்னத்தம்பியாகிய அபிராமா! நீ பல்லாண்டு வாழ்வாயாக!

[இராசை =சின்னத்தம்பி என்னும் வள்ளலின் ஊர். சிந்தாமணி=நினைத்தவற்றை அளிக்கவல்லதோர் தேவலோகச் செல்வமணி. புயாசலன்=மலைத்தோளன் (அசலம்—மலை). இடையே ஒருசீர் சிதைந்துள்ளது. ' கரனே 'என்றது 'கண்ணுந் தோளும்' என்னும் சூத்திரவிதியால் கரங்களை உணர்த்தி நின்றது. மோகம் =இடையறாத பேரவா. பூபதி=அரசன். மதனவேள்=மன்மதன். மருவார்=பகைவர். வாழ்வே! என்பது முதலாக அபிராமா! என்பதுவரை அவன் பண்புச் சிறப்புத் தோன்றும் பெயர்களால் விளித்தார். ஆதலின் வாழ்க என்பதை இசையெச்சமாகக் கொள்ளப்பெற்றது.]

தோற்றுவாய்

'மாந்தை' என்னும் பதியில் விளங்கும் ஒரு பெருமகனுடைய மகனும், வயித்திமுத்து என்னும் வீரனின் நண்பனுமாகிய 'ஆதிரத்தினம்' என்னும் குரிசில் ஒருவனை ஒரு புலவர் அவனுக்கு வெற்றியுண்டாக! எனப் பலபடியாக வாழ்த்துவதாக அமைந்துள்ளது இப் பாடல்.

[எண்சீர்விருத்தம்]

**183. ஞாலமுழு தும்புகழ வந்தவா விசையம்!**
**நாகரிக அனுகூல ராசனே விசையம்!**
**சீலமாந் தையில்வேந்தன் மைந்தனே விசையம்!**
**செங்கண்மால் தலைவணங்கும் செல்வனே விசையம்!**
**வாலகோ கிலரம்பை மாரனே விசையம்!**
**வயித்திமுத்து வீரன்துணை மன்னனே விசையம்!**
**சூலபா ணியர்பாத நேயனே விசையம்!**
**துரைஆதி ரத்தினசுர தானனே விசையம்!**

உலகமுழுதும் புகழுமாறு தோன்றியவனே! உனக்கு வெற்றி யுண்டாகுக! கண்ணோட்டப் பேரருளுடையவனாய் யாவர்க்கும் நலம்புரியும் அரசனே! தூய புகழுடைய மாந்தையில் ஆளும் வேந்தனுடைய மைந்தனே! செங்கண்மால் திருவடியை வணங்கி மகிழும் செல்வனே! உலர்ந்த கோகிலம் போலும் அரம்பையர் மகிழும் மாரனே! வயித்திமுத்து என்னும் பெருவீரனின் துணையாகத்திகழும் மன்னனே! திரிசூலத்தைக் கையிலே உடைய சிவபெருமானின் திருவடிகளிடத்தே அன்புடைய நேயனே! துரையே! ஆதிரத்தினம் என்னும் திருப்பெயரையுடைய தேவனே! உனக்கு வெற்றியுண்டாகுக!

[அடுத்துவரும் பாடலால் ‘ஆதிரத்தினம்’ என்பது இப்பாட்டுடைத் தலைவன் பெயர் எனக்கொள்ளப்பட்டது. நாகரிகம்=கண்ணோட்டம். அனுகூலம்=துணையாயநலம். சீலம்=தூயநெறி. சூலபாணி=சிவன். சுரதானம்=தேவலோகம். செங்கண்மால்தலை வணங்கும் என்பதனாலும், சூலபாணியர் பாதநேயன் என்பதாலும் இருசமயத்தையும் ஒப்ப மதித்து ஒழுகியவன் எனத் தெரிகிறது.

---

தோற்றுவாய்

முற்செய்யுளுள் கூறப்பெற்ற ஆதிரெத்தினம் என்னும் குரிசிலைப் பேணியருள்செய்ய வேண்டுமெனத் திருப்புள்ளிருக்கு வேளூரில் கோயில்கொண்டெழுந்தருள்கின்ற வைத்தியநாதக் கடவுளை ஒரு புலவர் வேண்டுவதாக அமைந்துள்ளது இப்பாடல்.

[பதினான்குசீர் கழிநெடில் ஆசிரிய விருத்தம்]

184. காமனைப் புரத்தை எரித்தநா யகனே!
கரியுரிப் போர்வைநா யகனே!
கஞ்சனைச் சிரமே துணித்தநா யகனே!
காலனை உதைத்தநா யகனே!
பூமரு.........வியந்தச் சோலையே செறிபுள்,
ளூர்தனில் வந்தநா யகனே!
புனித வயித்திய நாதனே அடியேன்
புகலும் விண்ணப்பம்ஒன் றுளதால்
சோமனைத் தருவை நிகர்த்திடு கரனைச்
சொல்லரிச் சந்திரன் நிகராம்
துங்கனை யனுமன் கொடியுடை யவனைத்
துரந்தரீ கச்சுப முகிலை
வாமமே கலைமின் னார்கள்மோ கனனை
மாந்தையில் வந்தபூ பதிசொல்
வயித்திநற் றுணையை ஆதிரத் தினத்தை
மனமகிழ்ந் தினிதுகாத் தருளே!

மன்மதனைத் தன் நெற்றிக்கண்ணாலும், திரிபுரத்தைத் தன் திருவாய்ச் சிரிப்பினாலும் எரித்த நாயகனே! கயமுகாசுரனைக் கொன்றுரித்த தோலைப் போர்வையாக அணிந்த நாயகனே! செருக்குற்ற பிரமனின் ஐந்து தலைகளுள் ஒரு தலையைக் கொய்த நாயகனே! காலனைக் காலால் உதைத்த நாயகனே! பூக்களால் நறுமணந்திகழும் சோலைகள் சூழ்ந்த புள்ளிருக்குவேளூரில், ஆருயிர்கட்கெல்லாம் அருள்புரிய வந்துள்ள நாயகனே! புனித வயித்திய நாதனே! உன்பால் அடியேன் விரும்பிக் கூறும் விண்ணப்பம் ஒன்று உளது. யாதெனின்? சோமனையும் கற்பகத் தருவையும் ஒப்ப, அருளும் பொருளும் வழங்குகின்ற கையை உடையவனை, சத்தியச் சொல்லிற்கு அரிச்சந்திரனையும் ஒத்தவனை, மேலானவனை, அனுமக் கொடியை உடையவனை ஆற்றல் வாய்ந்த நலமே விளைக்கும் முகிலை ஒப்பவனை, அழகு பொருந்திய மேகலாபரணத்தைப் பூண்டு விளங்கும் மின்போன்ற சாயலையுடைய மகளிர் விரும்பும் மோகனனை, மாந்தையில் விளங்குகின்ற பூபதியாகிய புகழ்மிக்க வயித்தி என்பானின் துணைவனை, ஆதிரத்தினமாகிய குரிசிலை, உன் உளமகிழ்ந்து இன்புமிகக் காத்தருள் புரிவாயாக!

[இறைவனின் பேராற்றலும் பேருளும் விளங்க விளித்து ஆதிரத்தினத்தின் சிறப்புத்தோன்றக் கூறி அருள்புரிக! என வேண்டுதல் நயமாக உளது. 'வயித்தி' என்பவன் ஆதிரத்தினத்தின் உடன்பிறந்தான் எனக்கருதும்படி இப்பாடலும் முற்பாடலும் அமைந்துள்ளன. கஞ்சன் = தாமரையில் இருப்பவன் எனப்பிரமனுக்குப் பெயராயிற்று.]

---

தோற்றுவாய்

சடையபூபதி என்பவன் மகனாகிய முத்துக்குமார முதலியப்பன் என்னும் வள்ளலின் செயல், திறமை,

கொடைப்பண்பு, படைவீரம் முதலியவற்றைச் சிறப்பித்து ஒருபுலவர் பாடாண்பாட்டாகப் பாடியது இச்செய்யுள்.

[பன்னிருசீர் கழி நெடிலாசிரிய விருத்தம்]

185. கரணிகத் திட்டவட் டத்திலே மேருநிகர்
கனகாரி யங்களெல்லாம்
கணமதனி லேதுரும் பாக்கித் துரும்பையும்
கனகமே ரேயாக்குவாய்
சரணென வடைந்திடிற் பாதுகாப் பாயினிய
பைந்தமிழ்ப் புலவர்வந்தால்
தற்கால சண்டமா ருதமோ டிடிகூடித்
தரணிதனி லேசொரிவதோர்
சுரியமுகில் என்னவே கொடுத்தருளு வாயரிய
கருதலர்கள் முடிமீதிலே
கவனவாம் பரிதன்னை நடத்தியவர் தே........
..... ருத்திலுற வெற்றிகொள்வாய்
, முருகலரு மணிமார்ப சடையபூ பதியுதவும்
முத்துக்கு மாரதீரா
முளரியின்கண் மடமாது........ச......கு... ற வ....
ரிராம முதலியப்ப(ன்வாழ்கவே)!

ஒருசெயலைத் திட்டவட்டமாகக் கொண்டால் மேருமலையை ஒத்த பெரிய காரியங்களை எல்லாம் ஒரு கணப்போதில் துரும்பாக ஆக்கித் துரும்பு நிகர் சிறு செயலையும் பொன்மேரு மலையாகப் பெரிதுபடுத்துவாய்; அடியடைந்து அடைக்கலமாகப் புகுந்தவர்களைக் காத்தருள் செய்வாய்; இனிய பைந்தமிழ் வல்லபுலவர்கள் வரின் தற்காலத்து வீசும் சண்டமாருதம் இடியோடுகூடி உல

கெங்கும் சொரிவதோர் கார்முகிலை ஒப்பப் பொன்னை யும் பொருளையும் கொடுத்தருள்வாய். வெலற்கரிய பகைவர்கள் போருக்கு வந்தால் அவரைவென்று சாய்த்து அவர்தம் முடிமீதிலே விரைந்து தாவும் குதிரைகளை நடத்தி வாகை சூடுவாய். மணங்கமழ்ந்தலரும் மாலைகளையணிந்த அழகிய மார்பை யுடையவனே! சடையபூபதி என்னும் வள்ளல் அருளிய முத்துக் குமரதீரா! தாமரைமலர்மேல் விளங்கும் இலக்குமி (விளங்கும் புயத்தையுடைய இராமனே!) முதலியப்பனே! (வாழ்வாயாக.)

[ கரணிகம்=செயல்: இட்டவட்டம்=எண்ணியமைத்தல் மேரு=பொன்மலை. கனகாரியம்=அரியபெரிய செயல். கணம்=நொடிப்பொழுது. கனபேரே யாக்குவாய் என்பது கனக மேருவே யாக்குவாய் என்றிருந்திருக்கலாம்; பாடம் சிதைந்துள்ளது. இறுதியடி முழுதும் சிதைந்துள்ளது. சண்டமாருதம்=புயற்காற்று. கவனவாம்பரி=விரைந்து தாவும் பரி. கவனம்=ஆகாயம். முருகு=மணம். சடையபூபதி=முத்துக்குமார முதலியப்பன் தந்தை போலும். முளரி=தாமரை.]

---

தோற்றுவாய்

முதற்செய்யுளில் கூறப்பெற்ற சடையபூபதி மகன் முதலியப்ப வள்ளலின் தமிழ்ப் பற்றையும் கொடைக் குணத்தையும் கூறிப் பிற புல்லர்களைப் பாடி வறுமை யுறாமல், இவனைப்பாடி வளம்பெறுவீர்! எனப் புலவர்களை நோக்கி, ஒருபுலவர் கூறுவதாக அமைந்துள்ளது இப்பாடல்.

[அறுசீர் விருத்தம்]

186. முத்தமிழ்சேர் புலவீர்காள்! உண்மையென
ஒருவார்த்தை மொழியக் கேளீர்!
சத்துமறி வில்லாத புல்லர்தமை
யனுதினம்முத் தமிழ்பா டாமல்

**மித்துருபரி பாலனெங்கள் சடையபூ**
**பதியுதவும் விதர நீகன்**
**சித்தசனை நிகர்முதலி யப்பனையே**
**துதிக்கில்வரும் செல்வந் தானே!**

முத்தமிழ் வித்தகஞ்சான்ற புலமையடையவர்களே! யான் உண்மையெனக் கண்டதொன்றைப் பற்றி ஒரு வார்த்தை மொழிவேன் நீங்கள் கேட்பீராக! ஒரு சிறிதும் நூலறிவும் உலகியலறிவும் இல்லாத கீழ் மக்களைப் புகழ்ந்து நாள்தோறும் முத்தமிழாற் பாடாமல், (பகைவரை வென்று) தன் குடிமக்களைப் பேணுபவனாகிய எங்கள் சடைய பூபதி பெற்றுதவும், ஈகையுடையவனாகிய மன்மதனை ஒக்கும் அழகுடையவனாகிய முதலியப்பனை உங்கள் பாக்களால் போற்றிப் பாராட்டினால் எல்லாச் செல்வமும் தானே உங்கள்பால் வந்து சேரும்.

[சற்றுமறிவிலாத என்பது எதுகை நோக்கிச் சத்துமறிவிலாத எனநின்றது. புல்லர் = கீழ்மக்கள். மிதரு = நண்பர்கள்; ஈண்டுக் குடிமக்களையும் உறவினரையும் அடக்கிநின்றது; விதரநீகன் = அறிவுடையவன், கொடையாளி எனப் பொருள்தரும் வடசொல். சித்தசன் = மன்மதன். தானே என்பதை அசையாகவும் கொள்ளலாம்.]

---

**தோற்றுவாய்**

‘மாந்தை’ என்னும் ஊரில் வாழ்ந்த இராசப்பன் என்னும் வள்ளல் மீது காமுற்ற ஒருத்தி, அவனைக்கூடப் பெறாதநாளில் எல்லாம் தனக்கு வரும் துன்பத்தைப் பற்றிக் கூறுவதாக அமைந்த ஓர் பெருந்திணைப் பாடலிது.

[அறுசீர் விருத்தம்]

187. அக்கசா லேத்தலைவன் ஒட்டபூ
பதியுதவும் ஆதுலன், ஒன்னார்
மிக்கரண சிங்கமெனும் மாந்தையில்ரா
சப்பனெனை மேவா நாளில்
கொக்கிருந்து குயில்கூவும் அம்புலிவெம்
புலியாகிக், கொடுமை யான
இக்குமதன் கணைதூவ இராவொருகம்
ஆவதென்னே இயம்பு வீரே!

என் உயிரனைய தோழிகளே! அக்கசாலையை ஆளும் தலைவனாகிய ஒட்டபூபதி என்பான் உதவியளித்த ஒப்பில்லாதவனும், பகைவரை வென்று மிக்க ரணப்படுத்தும் சிங்கமென்று வீரர்களால் புகழப்பெறுபவனும், மாந்தை என்னும் ஊரில் வாழ்பவனுமாகிய இராசப்ப வள்ளல் என்னைப்பொருந்தி இன்பு தராத நாளில் மாமரத்தில் இருந்து (என் உயிர் நைய) குயில்கள் கூவா நிற்கும். தண்ணொளி வீசும் அம்புலியானது கொடுமைமிக்க புலியாகி வெப்பத்தை வீசாநிற்கும். வளைந்த கரும்பை வில்லாக உடைய மன்மதன் தான் மலர்க்கணைகளை (என் உளம் புண்ணாகத்) தூவாநிற்கும், இவற்றிற்கு மேலாக ஓர் இரவு ஒரு யுகமாக நீண்டு நிற்கும். இவற்றிற்குக் காரணம் என்ன என்பதைத் தெளிவாகக் கூறுவீர்களாக.

[அக்கசாலை—ஓர் ஊர் எனத்தெரிகிறது. ஒட்டபூபதி அக்கசாலையில் வாழ்ந்த ஒருபெருமகன். அடுத்தபாடலால் மாந்தையும் இவன் ஊர் எனத் தெரிகிறது. இவன் உதவும் இராசப்பன் என்பதால் அவன் மகனாக இருக்கலாம் அன்றி, அவன் தளபதியாகவும் இருக்கலாம்: ஆதுலன்=ஒப்பில்லாதவன். மாந்தை=ஓர் ஊர். கொக்கு=மாமரம். அம்புலி=நிலா. கொடுமை=வளைவு. இக்கு=கரும்பு. இச்செய்யுள் விரகத்தை மிகுவிக்கும் பொருள்களை நயமாகத் தொகுத்துச் சுட்டிய திறன் சுவைக்கத்தக்கது]

தோற்றுவாய்

முதற்பாடலுள் கூறப் பெற்ற இராசன் (இராசப்பன்) என்னும் வள்ளலைத் தான் விரும்பியாங்குக் கூடி மகிழ்ந்த ஒரு தலைவி, கிட்டப்பெறாத ஒன்று எனக்குக் கிடைத்தது மிகமிக வாய்ப்பேயாகும் எனக் கூறுவதாக அமைந்துளதிப் பாடல். இதுவும் பெருந்திணையைச் சேர்ந்ததேயாம்.

[எண்சீர் விருத்தம்]

188. **தருவி ருக்குங்கரன் நற்றமிழ் வாணர்க்குந்**
**தான ளித்திடும் சற்குண மேரு,பூந்**
**திருவி ருக்கும்புயன் மாந்தை ஒட்டன்சொல்**
**செல்வன் இராசன் சிலம்பின் மடந்தையீர்!**
**முருகு ருக்குமலர் கோதி புட்குரல்**
**முழக்கி ரஞ்சித முத்தாடிக் கொஞ்சியே**
**அநுகி ருத்தியநு ராக மீறவே**
**அணைந்த லீலை அதிசயங் காணுமே!**

கற்பகத் தருவானது குடிகொண்டிருக்குங் ரகத்தன், நல்ல தமிழ்வாணர்களுக்கு வரையாது அளித்திடும் சற்குணமேரு, செந்தாமரை உறையும் திருமகள் தங்கி வாழும் தோளன், மாந்தையில் வாழும் ஒட்டப்ப பூபதியின் புகழ்ச்செல்வன், இராசன் (என்னும் இராசப்பன்) மலையிடத்தே வாழும் மடந்தையீர்! நறுமணங் கமழும் மலர்களைத் தன் கையால் கோதியும், கூடுங்கால் பறவையின் குரல் காட்டிக் கலந்தும், சுவைமிக்க முத்தமிட்டு விளையாடிக் கொஞ்சி அணைந்த காமலீலை மிகமிக வியப்புக்குரியதாம்.

[தரு=கற்பகத்தரு: இதனால் கொடைச் சிறப்புக் கூறப்பட்டது. தான்=அசை. பூந்திரு=இலக்குமி. சிலம்பு=மலை. முருகு =மணம். ரஞ்சிதம்=இனிமை: புட்குரல் = கலவியிற்றோன்றும் ஒலிக்குறிப்பு. அநுராகம்=ஆசை. லீலை=காமச்செயல்கள்.]

தோற்றுவாய்

கொடையும் ஆற்றலும் ஆண்மையும் சிறப்பும் உடைய ஒரு தலைவனைப் புகழ்ந்து பாடும் பாடாண் பாட்டு இது. இதன் ஈற்றடி சிதைந்திருப்பதால் இப்பாட்டுடைத் தலைமகன் யார் எனப் புலப்படவில்லை. அடுத்த பாடலால் ஒருவாறு சிறிது வரலாறு புலப்படுகிறது.

[எண்சீர் விருத்தம்]

189. அய்ந்தருவை நிகரான செங்கண்மா முகிலே!
அண்டினர்கள் தாபரமும் ஆனசிறு பாலா!
வந்தமரு வாரெதிர்...... சிங்க மெனவே
வாள்வீசி வென்றஅச காய ......
கொந்துலவு சோலைசெறி சிறுகுடியின் வாழ்வே!
கோதையர்கள் மோகனெனும் வாலகுண சீலா
சுந்தரப்....புய....புலியுடைய....பூபதிசொல்....
...... மன்னனே .... பெருமாள் .... மகிபாலா....

[அய்ந்தரு = தேவலோகத்தில் உள்ள ஐந்து வகையான மரங்கள். தாபரம்=ஆதாரம். மருவார் = பகைவர். கொந்து= கொத்து.]

தோற்றுவாய்

சிறுகுடியென்னும் ஊரில் வாழ்ந்த புலியுடையான் என்பவனின் மகனாகிய பெருமாள் என்னும் வள்ளல் மேற் காமுற்று வாழும் ஒருத்தி அவனைக் கூடப்பெறாத நாள், யான் துன்புறுமாறு பிரமனாலே படைக்கப்பெற்ற நாளாகும் எனக் கூறுவதாக அமைந்துள்ளது இப்பாடல். இது பெருந்திணையைச் சார்ந்ததாம்.

[அறுசீர் விருத்தம்]

190. துங்கமுகில் செறிசோலைச் சிறுகுடியிற்
புலியுடையான் செல்வன், ஒன்னார்

**சிங்கமெனும் மால்அணைந்த பெருமாள்என்**
**இருதனத்தைச் சேரா நாளில்**
**திங்களும்வெம் பகையாகச் சீறுகுயில்**
**இசைக்கமனந் திகைத்து நொந்தேன்**
**அங்கசன்றன் கணைக்கிலக்காய் வாடுவதும்**
**வேதாவின் அருள தாமே?**

மேலான கார்மேகங்கள் செறிந்து விளங்கும் சோலைகளையுடைய சிறுகுடி யென்னும் ஊரில் வாழும் புலிஉடையான் பெற்றசெல்வன், பகைவர்களுக்குச் சிங்கம் என்று சொல்லப்படும் திருமாலை ஒத்த பெருமாள் ஆனவன் என்னுடைய தனங்களைச் சேராத நாளிலே தண்ணிய நிலாவும் வெம்மையை வீசும் பகையாகி நிற்க, குயில்கள் சீறி இசைக்க, அவற்றால் என் உள்ளம் திகைப்புற்று நொந்தேன். மன்மதன் மலர்க் கணைகளுக்கு இலக்காகி அந்நாளில் யான் வாடித் துன்புறுவது பிரமாவின் அருளே போலும்?

[துங்கம் = சிறப்பு. சிறுகுடி = ஓர் ஊர். புலியுடையான் என்பதே பெயரோ, புலி என்னும் பெயரையுடைய உடையாரினத்தைச் சேர்ந்தவன் என்னும் பொருள்படநின்றதோ புலப்படவில்லை. ஒன்னார் = பகைவர். அணைந்த என்பது உவம வாசகமாகக் கொள்ளப்பெற்றது. ஒருகால் அணைந்த பெருமாள் என்பதே பெயராக இருக்கவும் கூடும். அங்கசன் = மன்மதன்.]

—0—

**தோற்றுவாய்**

மெய்க்க பூபதி என்பவன் காதற்கிழத்தி ஒருத்தி. அவன் பிறளொருத்திபால் மையலுற்றானெனக் கொண்டு ஊடி மொழிவது போல அமைந்துள்ளது இப் பாடல்.

[எண்சீர்சந்தவிருத்தம்]

191. ஏந்தி ளந்தன மின்னுளொ ருத்திமேல்
இச்சை யாகி எனையறி யாமலோர்

சாந்து கூறைபொன் நூறும் ஈந்துநீ
சந்த னுப்புகைக் கேது சாற்றிடாய்!

மாந்தை யாதிப! உத்தம வாசக,
மன்ன னானநம் வாச்சா னளித்தமா

வேந்தர் போற்றும் அனுமக் கொடியுடை
மெய்க்க பூபதி வீராதி வீரனே!

மாந்தை மாநகருக்கு அதிபனே! உண்மையும் உயர்வுமுடைய மொழி பேசும் மன்னவனாகிய நம் 'வாச்சான்' அளித்த, பெருவேந்தர்கள் போற்றும், அனுமக் கொடியை உடைய மெய்க்கபூபதியே! நீ வாடாத தனத்தையுடைய மின்போன்ற இளைய பரத்தை ஒருத்திமேல் மையல்கொண்டு என்னையும் அறியாமல் அவளிடத்தே சந்தனத்தையும் புத்தாடையையும் நூறு பொற்காசுகளையும் கொடுத்து ஒருத்தியைத் தூதாகவும் அனுப்பியுள்ளனை அவ்வாறு தூது அனுப்பியதன் காரணம் என்னவென்று எனக்குச் சாற்றுவாயாக.

[மின்னாள் = பெண். சாந்து = சந்தனம். கூறை = சேலை. சந்து = தூது. ஏது = காரணம். மாந்தை = ஓர்ஊர். 'வாச்சான்" என்பது மெய்க்கபூபதியின் தந்தையின் பெயர் போலும்: மெய்க்கபூபதியைப்பற்றி முன்னும் சிலபாடல்கள் உள.]

தோற்றுவாய்

இச்செய்யுள் மெய்க்கபூபதியின் கொடையை ஏழு மாமுகிலோடு ஒப்பித்துச் சிறப்பிக்கின்றது. இதனுள் வாச்சான் என்பது அவன் தந்தையின் பெயரும் 'காளி' என்பது அவன் தாயின் பெயருமாகக் காணப்படுகிறது

[அறுசீர் விருத்தம்]

192. திக்கெலாம் புகழ்ந்தேத்தும் அனுமகே
தனமுடைய திருமால், இன்சொல்
மிக்கபா வலர்புகழும் வாச்சபூ
பதியுதவும் விதர னீகன்
அக்கசா லேயில்வளர் வோன்,காளி
பெற்றமுகில், அருள்சேர் மாந்தை
மெய்க்கபூ பதிகொடையும் சத்தமே
கமும்நிகரா விளம்ப லாமே.

எட்டுத் திசைகளிலும் உள்ளவர்கள் புகழும் கொடியை உடைய, திருமால் போன்றவனும், இனியசொல் மிக்க பாவலர் புகழ்ந்து சூழும் வாச்சபூபதி அருளால் தோன்றியவனும் ஆகிய விதரனீகன், அக்கசாலேயில் தோன்றி வளர்வோன், 'காளி' என்னும் பெருமகள் பெற்ற முகிலொப்பான், அருள்சேரும் மாந்தை மாநகரில் வாழும் மெய்க்கபூபதியின் கொடைக்கு ஏழு மேகங்களையும் ஒப்பாகக் கூறலாமே தவிர பிற அவன் கொடைக்கு ஒவ்வாது என்றுணர்க.

[கேதனம் = கொடி: 'காளி' என்பது இவன் தாயின் பெயரென ஊகிக்கப்படுகிறது. முகில் = கார்மேகம். சப்தம் = ஏழு' விளம்பலாமே என்னும் ஏகாரத்தை எதிர்மறையாக்கி வரையாது வழங்கும் இவனுடைய கொடைக்கு ஒப்பாகக் கூறலாமோ கூறத் தகாது என்றும் பொருள் காணலாம்.]

தோற்றுவாய்

இது முதல் நான்கு பாடல்கள் வேங்கடபதி நாயகர் என்பவர்மேல் பாடப்பெற்றவை. சுவடியில் நவரெத்

தினமாலை எனக் குறிக்கப்பெற்று, காப்புவெண்பா முத லாக நான்கு பாடல்களே காணப்பெறுகின்றன. மற்றை யவை மறைந்தோ, எழுதப்பெறுமலோ போயிருக்க வேண்டுமெனத் தெரிகிறது. இந்நான்கு பாடல்களின் வாயிலாக இப்பெருமகனின் வரலாறு ஒருசிறிதே புலப் படுகிறது. இவற்றுள் முதற்பாடல் விநாயகக் கடவுள்மீது பாடிய காப்புச் செய்யுளாக உள்ளது.

---

## வேங்கடபதிநயகர்மேல் நவரத்தினமாலை

[காப்பு–வெண்பா]

193. **வீறு தகுபாடி வேள்வேங் கடபதிமேல்**
**மாறு நவரத்ன மாலைக்குப் — பேறுர்**
**பவளா சலநேர் பரஞ்சுடரோ னீன்ற**
**கவளா சலமுகனே காப்பு.**

வீறு பொருந்தி விளங்கும் தகுபாடியில் வாழும் வேளாகிய வேங்கடபதிநாயகர்மேல் மாறிலாத சிறப் போடு யான் பாடும் நவரத்தின மாலைக்குப் பேறு நிறைந்த பவள மலைபோல் விளங்கும் பரஞ் சுடராகிய சிவபெருமான் ஈன்றளித்த, மதநீர் ஒழுகும் முகத்தை யுடையவனாகிய யானைமுகக் கடவுளே காப்பளித்தருள்க.

[வீறு + ஆ = வீறு: வீறு பிறவற்றிற்கில்லாத சிறப்பு மாறு = மாறுத. பேறு = அருட்செல்வம். அசலம் = மலை கவளாசலம் = கன்னமதம். காப்பு = காப்பாவான் எனலுமாம் இப்பாடலுள் " வேள்வேங் " கடபதி எனப்பிரித்தலால் யாப்பா னந்தம் என்னும் குற்றமுளது. இது பாட்டுடைத் தலைவனுக்கு லநமாகாதென்பர்.]

தோற்றுவாய்

நவரத்தின மாலையுள் ஒன்ருய கலித்துறைப் பாடலிது. இதனுள் பாட்டுடைத் தலைவனின் தந்தையின் பெயர் "வீரபத்திரன்" என்பதும் தன் செல்வமெல்லாம் இரவலர்க்கு அவர் விரும்பியாங்கு வழங்குபவன் என்பதும் புலப்படுத்தப் பெறுகின்றன.

---

[கலித்துறை]

194. மாலா யுயர்ந்த புகழ்வீர
பத்திரன் மைந்தனெங்கோன்
சேலாரும் வாவித் தகுபாடி
மேவிய செல்வனென்றுங்
கோலா கலம்பெறு வோன்வேங்
கடபதி கொண்டபொரு
ளாலா மெனச்சென்று கொள்வார்
புலவர் அவரவரே.

திருமாலே ஒப்ப உயர்ந்த புகழ்சான்ற வீரபத்திரன் என்னும் வள்ளலின் மைந்தனுகிய எங்கள் மன்னவன், மீன்கள் நிறைந்து விளையாடும் குளங்கள் சூழ்ந்த தகுபாடியில் விரும்பியமர்ந்திருக்கும் செல்வன், என்றும் கோலாகலம் பெற்று விளங்குவோனுகிய வேங்கடபதியானவன் கொண்டுள்ள பொருளை ஆலமரமாம் என்று கூட்டங் கூட்டமாகச் சென்று புலவோரெல்லாம் அவரவரே அள்ளிக் கொள்வார்கள்.

[இதனால் பயன்மரம் உள்ளூர்ப் பழுத்தற்று அவன் செல்வ மென்பது புலப்படுத்தப் பெற்றது. மால் = திருமால். சேல் = கெண்டை மீன்கள். கோலாகலம் = விழா: ஆல்ஆம் ஆலமர மரம் என்றபடி. ஆலமரம் பல்லாயிரக் கணக்கில் பழுப்பதோடு வந்துண்ணும் பறவைகளுக்கு இடமும் நிழலும் தருவதுபோல் இவனும் அளிப்பான் என்றபடி இதனுள்ளும் யாப்பானந்தம் உளது.]

தோற்றுவாய்

இப்பாடல் நவரத்தின மாலையுள் ஒன்றாகிய விருத்தம். இதனுள் பாட்டுடைத் தலைவனின் வென்றிச் சிறப்பும் வென்ற நாடுகளும், கொடைச் சிறப்பும் புலப்படுத்தப் பெறுகின்றன.

[விருத்தம்]

**195. அங்கதமும் கேகயமும் சோனகமும்**
**கன்னடமும் அச்சைநாடும்**
**சிங்களமும் கேரளமும் கொங்கணமும்**
**வாள்கொண்டு செயித்தோன் தானே**
**சங்கநிதி எனவுதவும் வீரபத்ர**
**மகிபாலன் தவத்தால் வந்தோன்**
**மங்கையர்வேள் தகுபாடி வளம்பதிவேங்**
**கடபதியாம் மன்னன் ஆமே.**

சங்கநிதி போன்று எல்லாப் பொருளும் ஈந்துதவும் வீரபத்திர மகிபாலன் தவத்தால் தோன்றிய, மங்கையர் தம் வேளாகிய தகுபாடி என்னும் வளம்பதியில் வாழும் வேங்கடபதியாகிய மன்னவனே, அங்கத நாட்டையும் கேகயத்தையும், சோனகநாட்டையும், கன்னட நாட்டையும், அச்சை நாட்டையும், சிங்களத்தையும், கேரளத்தையும் கொங்கண தேயத்தையும், வாள்கொண்டு வென்றவனவன் என்றறிக!

[சங்கநிதி = அளகாபுரியில் உள்ளதோர் செல்வம். அங்கத முதலாயவை நாடுகளின் பெயர்: மகிபாலன் = அரசன்: இதனுள்ளும் யாப்பானந்தக் குற்றம் உளது.]

தோற்றுவாய்

நவரத்தினமாலையுள் ஒன்றாகிய அகவற் பாடலிது. இதனுள் வேங்கடபதி மன்னன் செண்டலங்காரர் அருளால் வாழ்வானாக என வாழ்த்துக் கூறப்பட்டுள்ளது.

[அகவல்]

196. பாற்கடல் துயிலும் பசும்புயல் அனையார்
ஞாலமெத் திசையும் நலம்பெற உண்டோர்
மங்கைசெங் கமல வல்லிநா யகிசேர்
தொங்கல்வண் ளைபந் துலங்கு மார்பினர்
வண்டுவ ரைப்பதி மன்னனார் கருணைச்
செண்டலங் காரர் திருவருள் நோக்கால்
தகுபாடி யில்வாழ் தாட்டிக புருடன்
வெகுவாய் அதிக விற்பனம் படைத்தோன்
பார்வேள் வீர பத்திரன் பாலன்
வீரரா கவன்சீர் விளங்கிய துணைவன்
கோங்கடர் மாலை குலவிய புயத்தன்
வேங்கட பதியாம் விசயசெம் பீரன்
வேற்கண் டனைப்போல் மிகநிதி யோங்கி
மார்க்கண் டனைப்போல் மகிழ்ந்துவாழ்ந் தருளே!

பாற்கடலின் கண்ணே துயிலுகின்ற கார்மேகம் போன்றவர்; இவ்வுலகத்தையும் திசைகளையும் எல்லா உயிர்களும் அருள்பெற உண்டவர், செந்தாமரை மலர்மேல் உறையும் திருமகள் சேரும் வளமான துளப மாலை விளங்கும் மார்பினர், வளம்பொருந்திய துவாரகைப்பதிக்கு மன்னராகிய கருணையே வடிவான செண்டலங்காரப் பெருமானுடைய திருவருள் நோக்காலே, தகுபாடி என்னும் ஊரில் வாழும் தாட்டிக புருடன், மிக அதிகமான கலைஞானம் உடையவன், பார்புகழும் செவ்

வேளையொத்த வீரபத்திரன் தவத்தால் தோன்றிய பாலன்; கீர்த்திமிக்க வீரராகவனுக்கு விளக்கமிக்க துணைவன், மணம் நாறுகின்ற பல்வண்ண மாலைகள் திகழும் புயத்தன், வேங்கடபதியாம் விசயகெம்பீரன், வேற்கண்டனைப்போல மிக்க செல்வமானது ஓங்க மார்க்கண்டனைப் போல எந்நாளும் மகிழ்ந்து வாழ்வாயாக!

[பசும் புயல் = பச்சை மேகம்: பச்சை மாமலைபோல் மேனி என்றார் ஆழ்வாரும்: ஞாலம் = உலகம். கமலவல்லி = இலக்குமி. தொங்கல் = மாலை. துளபம் = துளசி. துவரைப்பதி = துவாரகை. வீரராகவன் இவன் உடன் பிறந்தான் போலும். கோங்கு = மலரின் தேன். வேற்கண்டன் = வேற்படையாற் சிறந்த சோழன். மார்க்கண்டன் = மிருகண்டுவின் புத்திரன்; சிரஞ்சீவி வரம் பெற்றவன். தாட்டிகன் = பலமிக்கவன். இந் நான்கு பாடல்களாலும் இவன் வரலாறு ஒருவாறு புலனாகும். செண்டலங்காரர் மன்னார்குடியில் கோயில் கொண்டு விளங்கும் பெருமாளின் பெயர். செங்கமலநாயகி நாச்சியார் திருநாமம்.]

தோற்றுவாய்

இராசையூரில் வாழ்ந்த செவ்வந்தியப்பன் என்பவன்மேல் காமுற்றதலைவி ஒருத்தி, செவிலி தன்னை இடித்துரைத்துக் காவல் செய்யும் நிலையைத் தோழிக்குக் கூறுவதாக அமைந்துள்ளது இப்பாடல். இச் செய்யுளுக்கும் அடுத்த செய்யுளுக்கும் செவ்வந்தியப்பபிள்ளை எனச் சுவடியில் தலைப்புக் காணப்படுகிறது.

[எண்சீர் விருத்தம்]

197. தெவ்வந்து பணிதாளன் எனச்சொன் னேனே
செயராச கோபாலன் எனச்சொன் னேனே
நவ்வந்து மணிகொழிக்கும் இராசை மேவும்
ராசனெனச் சொன்னேனே நாக ரீகப்

**பவ்வந்தித் துகிலணிந்து சோலைக் கேகிப்**
**பரிமளவா சனைபொருந்திப் பருவஞ் சேரும்**
**செவ்வந்தி தனையெடுத்துக் கண்ணோ டொற்றச்**
**சேடியரோ டன்னையெனைச் சினக்கின்**
**[ருளே!**

தோழியே! பகைவரெல்லாம் தம் ஆற்றலிழந்து வந்து அடைக்கலமெனப் பணியும் பாதங்களையுடையவன் எனச் சொன்னேனோ? (சொல்லவில்லை) செயராசகோபாலன் என்று சொன்னேனோ? (இல்லை) நத்தைகள் முத்துமணிகளை ஈன்று கொழிக்கும் வாவிகளையுடைய இராசையூரில் விரும்பி வாழும் இராசன் என்று கூறினேனோ? (இல்லை) நாகரிகம் பொருந்திய பொன் வரிசை பதித்த பட்டாடைகளையணிந்து பூஞ்சோலையிடத்துச் சென்று நறுமணம் பொருந்தி அலரும் பருவம் சேர்ந்த செவ்வந்தி மலரை எடுத்து என் கண்ணிலே ஒற்றிக் கொண்டேன். அவ்வாறு யான் மலரை ஒற்றிக் கொள்வதனைக் கண்ட என் தோழியரோடு சேர்ந்து அன்னையும் சினங் கொள்கின்றாளே! ஏன்?

[இதனுள் பாட்டுடைத் தலைவன்மேல் உள்ள விருப்பத்தை அவன் பெயர் பொருந்திய செவ்வந்தி மலரைக் கண்ணிலே ஒற்றிப் புலப்படுத்தினாளாக. அக்குறிப்பறிந்து தோழியரும் செவிலியும் சினக்கின்றார்கள். மலரின் பெயர் தலைவன் பெயராக இருப்பதை வைத்து நயம்பட அமைத்துள்ள சிறப்பு சுவையுடையது. தெவ் = பகை. நவ்வந்து = நந்து: நந்து என்ற சொல்லை எதுகைக்கேற்ப இவ்வாறு திரித்ததோர் சொல்நயம் என்க. வழக்கில் இவ்வாறு சொற்களை திரித்தல் இயல்பு: பந்தி என்பதும் பவ்வந்தி எனத் திரிந்து நின்றது. பந்தி = வரிசை. ஈண்டு சேலையில் திகழும் சரிகை முத்து முதலியவற்றை உணர்த்தி நின்றது. பரிமளம் = நறுமணம்: பருவம் = செவ்வி. செவ்வந்தி = ஒரு மலர். சேடியர் = தோழியர்: தொண்டு செய்வோர்.]

தோற்றுவாய்

இப்பாடல் முற் செய்யுளிற் கூறப்பெற்ற வள்ளலாகிய செவ்வந்தியப்பப் பிள்ளையிடம் ஒரு புலவர்சென்று குமண வள்ளலைப் போல் எனக்கு அளிக்க வேண்டு மெனக் குறிப்பாற் கூறியது. இக்குறிப்பால் தானும் பெருஞ்சித்திரனாரைப் போன்ற வறுமையுடையேன் என்பதைப் புலவர் புலப்படுத்தினாராகக் கொள்ள வேண்டும்.

[அறுசீர் விருத்தம்]

198. ஆசிலா முதியதமிழ் வாணர்நிறைந்
தருளுயிரா சைக்கதிபா
போசனா யகியர்க்கோ பாலன்செவ்
வந்தியப்ப! புகலக் கேண்மோ
நேசமா யொருபுலவன் குமணனைப்போய்
பாடிவெகு நிதியம் பெற்றான்
மாசிலா துனதிடத்தில் வந்தனம்யாம்
பரிசில்பெற மகிழ்ந்து தானே.

குற்றமில்லாத கல்வியையுடைய முத்தமிழ் வாணர்கள் நிறைந்து வாழும் இராசையூர்க்கு அதிபனே! போசனைப்போல் நாயகியர்க்கின்பஞ் செய்யும் கோபாலனாகிய செவ்வந்தியப்ப வள்ளலே! யான் கூறுவதை விரும்பிக் கேட்பாயாக! சங்க காலத்தே வாழ்ந்த ஒரு புலவன், மிக்க நேயத்தாலே முதிரமலை வள்ளலாகிய குமணனிடம் சென்று அவன் கீர்த்தியைப் பாடி பெருமை மிக்க பரிசுகளைப் பெற்றான், அவ்வாறே குமணனைப் போன்ற மாசில்லாத மனத்தையுடையை உன்னுடைய ராசையூரில் வந்து உன்பால் மகிழ்ச்சி மிக்க பரிசில் பெற யாம் வந்தேம் அருள்வாயாக.

[தலையையும் கொடையாக வழங்கிய குமணனை ஒப்புக் கூறவே கொண்டன்றி மீளேன் என்பதைப் புலப்படுத்தினர் புலவர். பிற வள்ளல்கள் இருப்பவும் செவவந்தியப்பப் பிள்ளையிடம் வந்ததற்குக் காரணம் கூறுவார்போன்று—மூவேந்தர்கள் இருக்கவும் குமணனிடம் பரிசில் பெறச் சென்ற புலவனைச் சுட்டினர். போசன் = வடநாட்டையாண்ட ஓர் பேரரசன். புலவன் கலைஞன். இப்பாடல் யாப்பினல் சிறக்கவில்லை.]

தோற்றுவாய்

இரிஞ்சிபுரம் என்னும் ஊரிலே வாழ்ந்த சுயம்புலிங்கம் என்னும் வள்ளலின் கொடைச் சிறப்பும் பிறவும் பற்றி, இதுவும் அடுத்த பாடலும் கூறுகின்றன. இப்பாடல், இத்தலைவன்மேல் விருப்புற்று நலியும் தலைவி ஒருத்தியின் பெருவேட்கையை ஒரு செவிலி கூறி, நீ மாலை தந்து அருள்வாயாக என வேண்டிக் கொள்வதாக அமைந்துள்ளது.

[அறுசீர் விருத்தம்]

199. **அஞ்சுகத்தின் மொழியான எனதுகுலக்**
**கொழுந்துநின்மேல் அளவி லாது**
**விஞ்சுகப்ப மனதாகி வாடவுநின்**
**புயக்குவளை விரும்பா தென்னே**
**இஞ்சொலுக்கே அருள்சேர்வாய் இரிஞ்சிபுரம்**
**வாழவந்த இராசர் கீர்த்தி**
**மஞ்சியப்பன் தவத்தில்வந்த சுயம்புலிங்க**
**மகிபாலா மன்ன ரேறே!**

புலவர் கூறும் இனிய சொற்களுக்கே உளமுவந்து அருள் செய்யும் தன்மையுடையாய்! இரிஞ்சிபுரம் வாழும்படித் தோன்றிய இராசர் புகழும் மஞ்சியப்ப வள்ளலின் தவத்தினலே பிறந்த சுயம்புலிங்கம்என்னும் மகிபாலனே! மன்னவர்களுள் ஏறு போல்வாய்! கிளி

போலும் இனிய சொல்லுடைய எனது குலக்கொழுந்தாகிய நங்கை உன்மேல் அளவில்லாத காதல் மேவி, அதனால் விஞ்சும் ஆசையுடைய மனத்தாளாகி, உன்னையடையப் பெருமல் வாடித் துன்புறவும், நீ உன் தோள் மீதணிந்திருக்கும் குவளைமலர் மாலையைச் சூட்டி (மணந்து) அருள் செய்ய விரும்பாமைக்குக் காரணம் என்னவோ கூறுவாயாக.

[அஞ்சுகம்=கிள்ளை. கொழுந்து = மகளை உணர்த்திற்று. விஞ்சுகப்ப மனம் என்பதை விஞ்சு+உகப்பு + மனம் என்று கொள்ளப் பட்டது. சொல்லமைப்புப் பொருத்தமாக இல்லை. இரிஞ்சிபுரம் = ஓரூர். மஞ்சியப்பன் என்பது இவன் தந்தையின் பெயரெனத் தெரிகிறது. மகிபாலன் = அரசன். ஏறு = உபசார வழக்கு.]

தோற்றுவாய்

இப்பாடல் சுயம்புலிங்கம் என்னும் அவ் வள்ளலின் கொடைச் சிறப்பைக் கூறிப் பிற கீழ்மக்களிடத்தே சென்று பாடியிளைக்கும் புலவர்களை, அவனையே பாடி வளம் பெறுவீர்களாக என ஒரு புலவர் கூறுவதாக அமைந்துளது.

[அறுசீர் விருத்தம்]

200. நயம்புலிங்க மெனவுரைக்கும் புல்லரிடத்
தனுதினம்பா நவிலும் நாவீர்!
வியம்புலங்கொண் டொருவசனம் விளம்புவம்யாம்
நும்மனமே விரும்பிக் கேளீர்!
செயம்புலன்கள் அறிவுபெற்றேன் இரிஞ்சிபுர
மஞ்சியப்பன் செல்வ னான
சுயம்புலிங்கந் துணைநமசி வாயமென்றாற்
கலியகன்று சுபமுண் டாமே!

ஊர்க் குருவியைப் போல (இல்லை இல்லை) நாளைக்கு என உரைக்கும் கீழ்மக்களிடத்தே நாள்தோறும் சென்று நயமான பாக்களை இனிமையாகக் கூறும்

நாவன்மையுடைய புலவீர்! பரந்த அனுபவ அறிவால் யான் கூறும் ஒரு வார்த்தையை உங்கள் உள்ளத்தே போற்றிக் கேட்பீர்களாக! வெற்றிமிக்க ஐம்புலன்களாலும், கலை முதலாய அறிவு யாவும் பெற்று விளங்கும், இரிஞ்சிபுரத்தில் வாழும் மஞ்சியப்பன் மகனாகிய சுயம்புலிங்கமே நமக்குத் துணையாவான் எனக்கொண்டு சுயம்புலிங்க நமசிவாயம் எனக் கூறினால் வறுமையெல்லாம் நீங்கி நல்ல வாழ்வின்பம் உண்டாகும். அறிவீராக.

[நயம்புலிங்கம் = ஊர்க்குருவி. நாகணவாய்ப்பறவைக்கும் பெயர். அது சொல்லிக் கொடுத்ததையே சொல்லுமாதலின் அதுபோலவே புல்லர்களும் இல்லையெனக் கூறியதையே கூறுவார் என்றபடி. வசனம் = வார்த்தை. நமச்சிவாயம் நமக்குச் சுயம்புலிங்கம் துணை எனக் கூறுக என்றபடி. கலி = வறுமை சுபம் = மங்களம்.]

தோற்றுவாய்

இப்பாடல் மன்னரு செட்டி என்னும் ஒருவனைச் சிறப்பிப்பதாக அமைந்துளது. பாட்டுச் சிதைந்து காணப்படுகிறது. சுவடியில் "மன்னரு செட்டி ஞானமூர்த்தி ஞானி" எனத் தலைப்புக் காணப்படுகிறது. அடுத்த பாடலில் ஞானி என்ற பெயர் வருகிறது. நல்ல பாடம் இன்மையால் வரலாறு புலனாகவில்லை.

[எண்சீர் விருத்தம்]

201. செகராசர் கொண்டாட வரும்விக்ர மாரு
செம்பொன்னால்.... .. சன்னதி மேயாத தீரா
நகமதனை நிறைகண்ட சுகவன்ன சத்திரா
நாவிரண்டா உரையாத சீல மலர் நேத்ரா
முகவசீ கரதிலக உத்தண்ட மிண்டா
முதல்வாபி ராமசுப மோகாசு தந்தரா
மகராச னுனவட மலை ... ... யுதாரா
மாராபி ராமனெனும் மன்னு .... ... தீரா.

[விக்ரமாரூ, அன்னசத்திரா; நாவிரண்டுரையாத சீலா, மலர் நேத்ரா; முகவசீகரா என்ற, அடுக்குக்களால் இவனுடைய ஆற்றலும் கொடையும் வாய்மையும் தோற்றப் பொலிவும் புலனாகின்றன. வடமலை என்னும் பெயர் இவன் தந்தை பெயராக இருக்கலாம்.]

தோற்றுவாய்

மாந்தையில் வாழ்ந்த ஞானி (ஞானமூர்த்தி) என்பவனின் பண்பு, கல்வி, தெய்வபக்தி முதலிய தன்மைகளைச் சிறப்பிப்பதாக அமைந்துள்ளது இப்பாடல். இவன் சிவபெருமானிடத்தில் மிக்க ஈடுபாடுடைய சைவன் என்பதும் அனுமக் கொடியை உடையவன் என்பதும் இப்பாடலால் புலனாகின்றன.

[எண்சீர் விருத்தம்]

**202. கொங்குவங் காளர்புகழ் அனுமகே தனனே**
**கொண்டலே செகத்குரு வாகவரு குணனே!**
**அங்கைதனின் மான்மழு அணிந்தசங் கரனார்**
**அன்பரின் பாதமனு தினமகிழு பவனே!**
**பொங்குபுகழ் பேரூராம் மாந்தையா திபனே**
**புவிராசன் வழி,ஆச்சி பூபனருள் சுதனே**
**நங்கையான் மோகனமுத் துக்குமர பூபன்**
**நண்புபெறு துணையான ஞானிமகி பாலா!**

கொங்கு நாட்டரசோடு வங்காள தேயத்தரசும் புகழும் அனுமக் கொடியை உடையவனே, கார்மழை போல் வழங்குபவனே! உலகிற்கு குருவாக வந்து விளங்கும் நற்குணத்தவனே! அழகிய கைகளிலே மானையும் மழுவையும் தரித்து விளங்கும் சங்கரனாரின் அன்பர்களின் இணையடிகளை நாள்தோறும் போற்றி மகிழுபவனே! புகழ் பொங்குகின்ற பெரு நகரமாகிய மாந்தையை ஆட்சி புரிபவனே! அரசர் பரம்பரையிலே வந்து விளங்கும் ஆச்சிபூபன் மகிழ்ந்தளித்தமைந்தனே! நம்முடையவனான மோகன முத்துக் குமார பூபன் நண்பனாகப் பெறும் துணைநலம் வாய்ந்த ஞானி மகிபாலா நீ பல்லாண்டு வாழ்வாயாக!

[கொங்கு=கொங்கு நாடு. கேதனம்=கொடி. கொண்டல்= மேகம். அங்கை=அகங்கையுமாம். "ஆச்சிபூபன்" ஞானியின் தந்தை என்பது ஆச்சி பூபனருள்சுதனே என்பதனுல் தெரிகிறது. நங்கையான் என்பதன் பொருள் இனிது புலப்படவில்லை. முத்துக்குமர பூபன் ஞானியின் நண்பனெனத் தெரிகிறது. இவனை ஞானி என்றும் ஞானமூர்த்தி என்றும் குறிப்பிடுவர் போலும்.]

தோற்றுவாய்

கலிச்சியப்பன் என்பவனிடம் சென்ற புலவர் ஒருவர் அவன் கையிலிருந்தும் தனக்கு உதவவில்லை என்று குறை கூறுவதாக அமைந்துள்ளது இப்பாடல். இப்பாடலின் தலைப்பில் கடம்பிகலிச்சி – சவளி வெங்கண்ணன் சேர்வை, வேங்கிடபதி என்னும் பெயர்கள் காணப்படுகின்றன. பாடல்களுள் சில சீர்கள் பிறழ்ந்து சிதைந்துள்ளன.

[அறுசீர் விருத்தம்]

203. பையரவு தும்பைகொன்றை முடிசூடும்
ஈசர்பதம் பணிவோன் நாளும்
பொய்வசன மில்லாத சற்புருட
மேருவெனும் போச ராசன்
கையிலிருந் தும்உதவார் அமரர்பணி
வளவனருள் காந்தன் ராசைத்
தையலான் துணையில்வந்த கலிச்சியப்பன்
எனக்கீயத் தயவி லுனே.

படத்தையுடைய நாகத்தையும் தும்பை மலரையும் கொன்றை மலரையும் தனது சடாமுடியில் சூடித் திகழும் ஈசனுடைய திருப்பாதங்களைப் பணிபவனும் நாளும் பொய்ம்மொழியே பேசாத சத்புருடர்களுள் மேருமலை யொப்பவன் என்று சொல்லப்படுபவனுமாகிய போசராசனை ஒப்பவன், அமரரைப் பணியும் வளவன் அருளிய காந்தன், இராசையூரில் வாழும்தையலான்

என்பவன் துணையோடு விளங்கும் கலிச்சியப்பன் எனக் களிப்பதற்கு வேண்டும் பொருள் கையகத் திருந்தும் தயவோடு எனக்கீய உதவ மாட்டாராக உள்ளார், என் செய்வேன்.

[பை = பாம்பின் படம். சத்புருடன் = நற்குணங்களமைந்த ஆடவன். வளவன் = சோழன் பெயர்களுள் ஒன்று. காந்தன் = தலைவன். தையலான் கலிச்சியப்பன் நண்பனுவான் போலும். தயவு = அருள்.]

தோற்றுவாய்

இப்பாடல், சவளி வெங்கணன் சேர்வையின் சிறப்புக்களை ஒரு புலவர் பலபடியாகப் புகழ்ந்து கூறுவதாக அமைந்துள்ளது.

[எண்சீர் விருத்தம்]

204. விருதரசர் பணிபாத வீரரண போசா
வெங்கணன் றுயிலில்வரு துங்கசெய வாசா
மருவுலவு புயன்வாலு துணையில்வரு வீரா
மாராபி ராமனென வருகூத்த தீரா
திருமருவு செயவாழ்வு பெற்றருள்கு பேரா
செங்கமல மாதுவளர் துங்ககுண தாரா
குருசுகுண ஞகவளர் தருமவனு கூலா
குஞ்சரபெ லாதிசெய வெங்கணர பாலா.

வெற்றி விருதுகள் பெற்ற அரசர்கள் பணியும் வண்ணம் போர் புரிந்து வெற்றி கொள்ளும் வீரரண போசனே! விருப்பமைந்த கண்கள் நன்கு துயிலாமல் மக்களைக் காத்துவரும் மேலான வெற்றி மணம் பொருந்தியவனே! நறுமணங் கமழும் மாலை யணிந்த தோள்களையுடைய "வாலு" என்னும் வீரனுடைய துணையோடு விளங்கும் வீரனே! மாரா, அபிராமன் என விளங்கும் கூத்தனே, தீரனே, போர்த்திரு மருவும் வெற்றி வாழ்வு பெற்று பெற்ற, செல்வத்தைப் பிறருக்

கும் அருளும்படியான குபேரா, செங்கமல மாது வளரும் சிறந்த குணங்களைத் தரித்திருப்பவனே, குருசுகுணனுக வளரும் தரும அனுகூலனே! யானை யொப்ப வலி வுடைய வெற்றிமிக்க வெங்கணனுகிய அரசே! நீ வாழ் வாயாக.

[விருது = வெற்றிக்காகக் கொண்ட சின்னம். ரணவீரன் என்பது வீரரணன் என நின்றது. 'வெங்கணன்றுயிலில்வரு' என்றபகுதி செம்மையாக இல்லை. ஒருவாறு பொருள் கொள்ளப் பட்டது. மரு = நறுமணம். புயன் = தோளையுடையவன். 'வாலு' வேலு என இருக்கலாம். அன்றி, வாலு என்பது ஒரு பெயரின் சுருக்கமாகவும் இருக்கலாம். மாரன் = மன்மதன். அபி ராமன = மிக்க அழகன. கூத்தன் = விநோதன். 'செங்கமல மாது, எனப் பின்னர் வருதலின் திருவென்றது போர்த்திருவை எனக் கொள்க. துங்கம் = மேன்மை. சுகுணம் = தூய பண்பு. அனு கூலம் = நற்றுணை. குஞ்சரம் = யானை. பலாதி = பலவான் வலியன். நரபாலன் = அரசன். மக்களைப் புரப்பவன் என்னும் பொருளது.]

---

தோற்றுவாய்

குருவபூபதி என்பவனுடைய வெற்றிச் சிறப்பையும் பண்புச் சிறப்பையும் கூறுகிறது இப்பாடல். இதன் இறுதியடி சிதைந்துளது. பாடல் யாப்பு வளமில்லை. இயைபுத் தொடைபட அமைந்துளது.

[எண்சீர் விருத்தம்]

205. வீராக ரப்பிரபல தீராவி ராமா
விசையரண முகசவுரிய வேலாவ பீமா
மாராதி மாரனென வருசித்திர ரூபா
மாநிலம் பெறுகவிஞர் மாகலிக் கோபா
சீராக ரச்செல்வ மேபெற்ற விந்த்ரா
செகராச னெனவந்த செயவதனச் சந்த்ரா
பாரான வருகுருவ பூபதீ......................

..........................................

[வீராகரம் = வீரக்கடல். (ஆகரம் = கடல்) பிரபலம் = புகழ் விளக்கம். விசையம் = வெற்றி. ரணமுகம் = போர்க்களம். சவுரியம் = சூளுரை. மாராதிமாரன் = மன்மதனுக்கு மன்மதன். மாகலி = பெரிய வறுமை. கோபா = வறுமையைக் கோபிப்ப வன் என அவன் வள்ளன்மை யுணர்த்தப்பட்டது. சீராகரம் = புகழ்க்கடல். செகராசன் = புவிமன்னன். வதனம் = முகம்]

—0—

தோற்றுவாய்

திருமாலின் சிறப்பை விளக்கும் அம்மானைப் பாட லிது. அம்மானையின் இயல்பு முன்பு காண்க.

[அம்மானை]

**206. மாதரசு செங்கமல வல்லிவளர் மன்னர் முன்னுள்**
**ஓதந் தனையெரித்த ஒண்சுடர்காண் அம்மானை**
**ஓதந் தனையெரித்த ஒண்சுடரே யாமாகில்**
**பாதமிசை கங்கை பரவுவதேன் அம்மானை**
**பரவாதோ மேகம் படர்ந்திருந்தா லம்மானை.**

பெண்மை யரசாக விளங்கும் செந்தாமரை மலர் மீது விளங்கும் திருமகள் உறைகின்ற மார்பையுடைய மன்னராகிய திருமால், முன்பு ஒரு காலத்தில் கடல்நீரை எரித்த ஒளி பொருந்திய கதிரை உடையவர் காண்பா யாக என ஒருத்திகூற, மற்றொருத்தி மன்னவர் ஓதத்தை எரித்த ஒண்சுடரேயாமானல் அவர் பாதத்தின் மேல் கங்கை படர்வதேன் என்று கேட்க அவர் மேல்மேகம் படர்ந்திருப்பது கண்டு பரவுகின்றது என உணர்வாயாக என்றாள்.

[ஓதம்=கடல். சுடர்=கதிரவன் (ஆழி) நீலமேக வண் ணன் என்பதை இவ்வாறு சிறப்பித்த நயம் காண்க. கங்கை திருமாலின் பாதத்தே தோன்றிப் பரவியது என்பார் ஒருசாரார். பரவுதல் என்பதற்கு வணங்கிப் புகழ்தல் என்றும் பொருள்.]

தோற்றுவாய்

காவையூரில் வாழ்ந்த பள்ளியப்பன் என்பானின் குமாரன் குப்பணபூபன் என்பவனுடைய எழுத்துத் திறனையும், ஓலையில் எழுத்தாணியால் அவன் எழுதும் இயல்பையும் சிறப்பிக்கின்றது இப்பாடல். இவன் அரசாங்கத்தில் ஓலைநாயகமாக விளங்கியிருந்தான் எனத் தெரிகிறது: இப்பணி புரிவோரைத் திருமந்திர ஓலை நாயகம் என்று கல்வெட்டுக்கள் கூறும்.

[அறுசீர் விருத்தம்]

207. கொழுத்தாணித் தருள்மேழிக் கொடியுடையோன்
பள்ளியப்பன் குமரன் பூமிக்(கு)
அழுத்தாணி எனப்புரப்போன் அழகப்பன்
துணையில்வந்த அழகன். நாவோர்
வழுத்தாணி(க்கா)வைவரு குப்பணபூ
பாலனறம் வளர்க்குஞ் செங்கை
எழுத்தாணி சுழற்றினனேல் மூவுலகுங்
கண்டுபணிந் திறைஞ்சுந் தானே.

கொழுவின் தாளாலே நித்தம் அருளும்படியான மேழிக்கொடியை உடையவனாகிய பள்ளியப்பன் அருளிய குமரன், புமியைத் தாங்கிச் செலுத்தும் அச்சாணி என மக்களைப் புரப்பவன் அழகப்பன் என்பவன் துணையோடு விளங்கும் அழகன், புலமையுடைய நாவலர்கள் போற்றும் ஆணிபோன்ற காவை என்னும் ஊரிலே திகழும் குப்பண்ணபூபாலன், அறமே வளர்க்கும் தன் செம்மை மிக்க கையால் எழுத்தாணி கொண்டு ஓலையிற் சுழற்றுவானானால் (அவ் எழுத்தாளும் வாசகத்தைக் கேட்டு) மூவுலகத்து வாழ்வோர் யாவரும் அதன் பொருளுணர்ந்து பணிந்து வணங்கி ஏற்பார்கள்.

['கொழு — தாள் — நித்தம் — அருள்' என்பது கொழுத் தாணித்தருள் என நின்றது போலும். பாடம் இவ்வாறே யுளது. மேழி=கலப்பை: இதனால் இவன் உழுவர்குலச் செம்மல் எனப் புலப்படுகிறது. பள்ளியப்பன், இவன் தந்தை போலும். அழுத்தாணி=அச்சாணி. அழகப்பன் இவன் உடன் பிறந்தானாகவும் இருக்கலாம். ஆணிக்காவை என்றது பல ஊர்களுக்கும் இது உரையாணி போன்ற சிறப்புடையது எனக் காட்டுகிறது. சுழற்றுதல் = எழுதுதலை உணர்த்திற்று. தான் = அசை.]

தோற்றுவாய்

இதுவும் முதற்பாடலிற் கூறப்பெற்ற குப்பண பூபனின் ஓலை எழுதும் சிறப்பையே விளக்குகின்றது.

[அறுசீர் விருத்தம்]

208 மணிக்கட்டுச் சுழலாமல் அங்குலிகள்
விரவாமல் வரிசே ராமல்
அணிக்கட்டு மட்டாகத் தொகைவகையால்
கணக்கிணையங் காய்ந்து பார்த்து
விணிக்கட்டாய்ச் சித்திரம்(சேர்எழுத்துப்) போல்
சட்டமிடும் விசயன் காவைப்
பணிக்கட்டாய்த் துயில்நெடுமால் பள்ளியப்பன்
குப்பணபூ பாலன் தானே.

பாம்பணையில் துயிலும் திருமாலை என்ன விளங்கும் காவையூரில் உள்ள பள்ளியப்பன் மகனும் வெற்றியையுடைய குப்பண பூபாலன்தான், தன் மணிக்கட்டுகள் (ஓலை எழுதுங்கால்) சிறிதும் சுழற்சியடையாமல் கைவிரல்கள் விரவாமல் ஒரு வரியோடு மற்றொரு வரி சேராமல் கயிறிட்டு அணிபெறக்கட்டும் அளவின் மிகாமல், தொகை வகையால் ஓலையையும் வாசகத்தையும் கணக்கிட்டுக் கொண்டு நன்கு ஆராய்ந்து பார்த்துக் கச்சினைப்போல அழகுறக் கட்டமையச் சித்திரம் போன்ற எழுத்துக்களால் ஓலையில் செம்மையாக எழுதும்.

[ மணிக்கட்டு = கையில் உள்ள மணிக்கட்டு: அங்குலி = விரல். மட்டி = அளவு. விணிக்கட்டு = மூலைக்கச்சு போல கட்டப் படும் கட்டு. சட்டம் = எழுதும் ஓலை. காவை = ஊர். பணி = பாம்பு. இப்பாடல் ஓலை எழுதுதற்குரிய இலக்கணத்தை அழகு பெறக் கூறுகின்றது. ]

தோற்றுவாய்

சோமனுதன் என்பவன் மகனுகிய அடைக்கலங் காத்தான் என்பவனைச் சிறப்பித்துப் பாடப்பெற்றது இப்பாடல். இதனுள் அவன் இன்மொழியுடையவன் வீரன், தோற்றப் பொலிவுடையவன், பாண்டிய மன்ன னோடு தொடர்புடையவன் என்பன போன்ற செய்திகள் புலப்படுகின்றன.

[எண்சீர் விருத்தம்]

209. அனசோம குணசீல அமிர்தவா சகனே
அசகாய ரணவீம அதிவிக்ர மாரு
வனசமலர் மேவிவளர் மாதுவளர் புயனே
மாராஒய் யாராவ சீகரகெம் பீரா
தென......... மனரி பதகமல நேய
தீரனென அருள்சோம நாதனருள் செய்யும்
கனகைபெறும் அரவுடையான் துணைச்சிறுபா
[லகனே
நீதியான் அடைக்கலங் காத்தமகி பாலா.

அன்னதானத்தில் சோமனை நிகர்க்கும் குணச் சிறப்பு வாய்ந்த நல்லோய்! அமிர்தம் போன்ற இனிமை பயக்கும் வாய் மொழியை உடையோய்! அசகாயனே போர்க்களத்தில் வீமனை ஒப்பவனே! மிக்கபராக்கிரமத் தில் பாண்டியனே! தாமரை மலரில் விளங்கும் திரு மகள் உறையும் தோள்களையுடையோய்! மாரனே! ஒய் யார வசீகர கெம்பீரா! பாண்டிய மன்னரின் இணையடி

களுக்கு நேயமுடைய பெருவீரன் எனப் புகழ் வாய்த் தருளும் சோமனுதனின் தவமகனாய் வந்து விளங்கும் கனகைபெறும் அரவுடையான் துணையாக விளங் கும் இளைய பாலகனே! அறநீதியால் எல்லோரையும் காத்தலால் அடைக்கலங் காத்த பெருமகன் எனப் புகழ் வாய்ந்த அரசே! நீ பல்லாண்டு வாழ்வாயாக!

[அன்னசோமன் என்பது தொகுத்தல் விகாரமாய் நின் றது. கொடைக்குச் சோமனைச் சொல்லுவது மரபு அமிர்தம் = இறவா மருந்து. அசகாயன் = துணையின்றி வெல்பவன். ரண வீமன் = போர்க்களத்தில் வீமனுடையவன். வனசாலர் = தாமரை. மேவி = பொருந்தி. ஒய்யாரம் = செருக்கு. வசீகரம் = கவர்ச்சி. கெம்பீரம் = வீறு. "கனகை பெறும் அரவுடையான்" என்ப தன் பொருள் விளங்கவில்லை. மகிபாலன் = அரசன்.]

-0-

தோற்றுவாய்

இது முதல் பத்துப்பாடல்கள் மாங்கையூரில் வாழ்ந்த நாச்சியப்பன் என்னும் வள்ளலுக்கு அருமை மிகு மகவாய்த் தோன்றிக் கொடை முதலிய நற்செயல் களும் நடை முதலிய நற்பண்புகளும் விளங்க வாழ்ந்த முத்துக்குமாரபூபதி என்பவன்மேற் பாடப்பெற்றனவா கத் தெரிகின்றன. இவையாவும் பிள்ளைத்தமிழ் என் னும் பிரபந்த வகையைச் சார்ந்தன. காப்பு முதலாகச் சிறுதேர்ப்பருவம் ஈறாக உள்ள பத்துப் பருவங்களுள் ஒவ்வொரு பருவத்திற்கும் ஒரு பாடலே காணப்படு கிறது. இவை முழு நூலிலிருந்து எடுத்தவையா; பாடப் பெற்றதே இவ்வளவு தாமா என்பது விளங்கவில்லை. எனினும் பிள்ளைத் தமிழின் இயல்பும் மரபும் தெளிவா வாகச் சுவையோடு அமைந்துள்ளன. இம் முதற் செய் யுள் காப்புப் பருவத்திற்குரியதாகத் திருமாலை வேண் டிக் காப்பாயாக எனக் கூறுகின்றது. ஒவ்வொரு பரு வம் பற்றிய செய்திகளை மெய்க்கண் பிள்ளைத்தமிழ் தோற்றுவாய்ப் பகுதியிற் காண்க.

## நாச்சியப்பன் மகன் முத்துக்குமரன்மீது பாடிய

## பிள்ளைத்தமிழ்

### காப்புப்பருவம்.

[எண்சீர் விருத்தம்]

210. பூமேவு செழுங்கமலச் செந்திருவாழ் புயனைப்
பொருவில்திரு வேங்கடஞ்சொற் பௌத்திரவற் புதனைக்
காமேவு மாந்தைவரு நாச்சியப்பன் உதவும்
கருணைமுத்துக் குமரனையிக் காசினியிற் புரக்க;
மாமேவு வள்ளியம்மைக் கினியமுரு கேசர்
மாமனெனத் துருவனுக்கோர் வசழ்வுகொடுத் தருளும்
தேமேவு தென்துவரைச் செங்கமல வல்லி
சேர்ந்தருள் கோபாலமன்னர் திருவடித்தா மரையே.

செந்தாமரை மலரின்மேல் திருமகள் எப்பொழுதும் வாழும் தோள்களை யுடையவனும், ஒப்பில்லாத சிறப்பினையுடைய திருவேங்கடமென்னும் புகழாளனின் பெயரனுமான அற்புதம் வாய்ந்தவனும், சோலைகள் சூழ்ந்த மாந்தையென்னும் ஊரில் வாழும் நாச்சியப்பன் என்னும் வள்ளல் மகனாக உதவியவனும் ஆகிய அருள் நிறைந்த முத்துக்குமரனாகிய இக்குழந்தையைப் பேணிப் புரந்தருளுமாக!, மான் வயிற்றிற் பொருந்திப் பிறந்தவளாகிய வள்ளியம்மைக் கினியவனை முருகப் பெருமானின் மாமனெனவிளங்கித் துருவனுக்கு (அரச) வாழ்வு கொடுத்தருளும், தேசங்களிற் சிறந்தவளம் பொருந்திய துவாரகையில் திருமாமகளோடு சேர்ந்து விளங்கும் கோபால மன்னராகிய திருமாலின் அழகிய பாதகமலங்களே.

[திருவடித் தாமரையே முத்துக்குமரனைப் புரக்க, என முடிக்க. பூ=பொலிவு. திருவேங்கடம் என்பது முத்துக்குமர பூபதியின் பாட்டனாக இருக்கும்போலும் பௌத்திரன்=பெயரன். கா=சோலை. உதவும்=பெற்றளிக்கும். காசினி=உலகம். புரக்க=காத்தருள்க! என வியங்கோள் முற்று. மா=மான்: கருமைநிறம்பொருந்திய எனினுமாம்: துருவன்குழந்தைப்பருவத்திலேயே திருமாலை எண்ணித் தவமியற்றி அருள்பெற்று விண்மீனாகத் திகழுபவன். தேம்=நாடு. துவரை=துவாரகை. கண்ணபிரான் திருநகர் பசுக்களைப் புரந்தவனாதலின் திருமாலுக்குக் கோபாலன் என்பது காரணப்பெயர். திருவடித்தாமரை=உருவகம்: அருள்புரிய அவ்விறைவன் திருவடிகளே சாலும் என்பதாம்.]

---

தோற்றுவாய்

இச்செய்யுளில் முத்துக்குமரனாகிய குழந்தையை நீராட்டிப் பாலூட்டி அணிபூட்டித் தொட்டிலிலிட்டுத் தாயும் செவிலியரும் பாராட்டி மகிழும் செயல் சுவையாகக் கூறப்படுகிறது.

## செங்கீரைப்பருவம்

[பன்னிருசீர் ஆசிரிய விருத்தம்]

211. வண்டாடு குழல்மாதர் இனியபுன லாட்டிநறை
மருவுதுகி லாற்பு லர்த்தி
மடிமிசை யிருத்திமுலை யமுதத்தை யொருசங்கில்
வார்த்துரையி னுலி றுக்கிக்
கொண்டாடி யிருதுடையி னுலிறுக்கித்தமிழ்கள்
கூறுமலர் வாய்பு கட்டிக்
கொழுமைபெற மூன்றுவிசை சுத்தியவ்வளை முத்துக்
கூவிலொரு துளிவி டுத்து
வண்டாவு நெற்றியில் திருநீலக் காப்பிட்டு
மருவுதிரு வேங்க டேந்த்ரன்
மகிழ்பேர னெனவுச்சி மோந்துநவ ரத்தினம்
வயங்குதொட் டிலில்வ ளர்த்திச்

**செண்டாடு முலைமாதர் கண்டாசை கொளும்நிருப**
**செங்கீரை யாடி யருளே!**
**சித்திரமத ரூபமுத் துக்குமர பூபனே**
**செங்கீரை யாடி யருளே!**

மலர் மணங்கருதி வண்டுகள் சுழலும் கூந்தலை யுடைய பணிசெய்மகளிர் மணங்கலந்த இனிய புனலால் நீராட்டி நறைபொருந்திய பஞ்சாடையால் ஈரத்தைப் புலரச்செய்து படிமிசை யமர்த்தி தாய்முலைப் பாலாகிய அமிழ்தத்தை ஒரு சங்கினில் வார்த்துக் கொஞ்சு மொழிகளால் நின் உளத்தை வயப்படுத்திக் கொண்டாடி இருதுடையினுலிறுக்கித் தமிழாகிய இனிய மழலை கூறும் நின்வாயிடைப்புகட்டி ஊட்டி வளம் பெறும் வண்ணம் சங்கினை மூன்றுமுறை வலமாகத் தலையைச் சுற்றி அந்தச் சங்கினிலிருந்து முத்துப் போலும் ஒருதுளிப் பாலை விரலாற்றொட்டு வண்மை பரவும் நெற்றியில் திருநீலக்காப்பாக இட்டுத் திருமருவும் திருவேங்கடேந்திரன மகிழ்ந்து பேணும் பெயரனே என உச்சிமோந்து முத்தமிட்டு, விளங்கும் நவமணிகள் பதித்துச் செய்த தொட்டிலிற் கிடத்தி கண்வளரச் செய்து, மலர்ச் செண்டுபோன்ற தனத்தையுடைய மாதர்கள் சீராட்டிப் பாராட்டி கண்களாற்கண்டு ஆசை கொள்ளும் அரசே! செங்கீரை ஆடியருள்வாயக! சித்திரமதரூப முத்துக்குமர பூபனே செங்கீரையாடி யருள் வாயாக!

[குழந்தையை நீராட்டிப் பாலூட்டித் திலகமிட்டுத் தோடஞ் சழிக்கும் மரபினை மிக அழகாகக் கூறியிருப்பது மிகவும் மகிழ் தற்குரியது: பாலூட்டிய சங்கினை மும்முறை குழந்தையின் தலையைச் சுற்றுவதும் அச்சங்கினிடத்து எஞ்சிய பாலின் துளி யாலே திலகமிடலும் வழக்கு. முதலடியில் "மருவுதுகிலாற் புலர்த்தி" என்பது "நறைமருவு மகிலாற் புலர்த்தி" என் பதன்பின் அகிற்புகையால் ஈரம் புலர்த்தி எனஇயைந்து நிற்கும் ஏடுகளில் "துகிலால்" என்றே காணப்படுகின்றது. கொழுமை=

ஈண்டு வளர்ச்சியைக் குறித்தது: கூவு=சங்கின் வயிறு: வேங்கடேந்திரன் இவன் பாட்டன்: பேரன்=பெயரை உடையவன் என்னும் காரணப் பெயர் பின்பு இடுகுறியளவாய் நின்றது: சித்திர மதரூபன்=மன்மதனைப் போன்ற உருவழகுடையவன்.]

---

தோற்றுவாய்

இச்செய்யுள் தாலப்பருவத்தைச் சேர்ந்தது. பாடல் மிகவும் சிதைந்து காணப்படுகிறது எனினும் தொடர்பு நோக்கி ஏட்டில் உள்ளவாறு தரப்பட்டுள்ளது. இது பதினுன்குசீர் அடிகொண்ட விருத்தம்.

## தாலப்பருவம்

212. மருவே சேற்றில் இழைத்த மணமே . மாலே
மாலோலா
மத்தக் கரியின்....வெற்றிப் புயனே மானூர்
சீராளா
குருவே கீர்த்தி மிக்க அரசே கோவே கூர் பாகே
கோததத்வனே புத்திப் பிரபலர் கூரார்
வேலோனே
திருவே நெற்றியிற் பணுளவரசே தூயோனே
சேற சொற சானேதிக்குப் புகழ் சோதிரா
பூராமா
தருவே நாச்சி யப்பன் மதலாய் தாலே தாலோ
தாலேலோ
சற்புத் திரனே முத்துக் குமார தாலே தாலோ
தாலே லோ
(0)

தோற்றுவாய்

இப்பாடல் சப்பாணிப் பருவத்தைச் சாச்ந்தது. இதனுள் பாட்டுடைத் தலைவனை ஆயர்பாடியில் வளர்ந்த கண்ணனுகவே வைத்து அக்கண்ணன் யசோதாப்

பிராட்டியிடம் வளர்ந்த நிலையிற் செய்த திருவிளையாடல்களை அமைத்துச் சுவையாப் பாடப்பெற்றுள்ளது.

## சப்பாணிப்பருவம்

[பன்னிருசீர் ஆசிரிய விருத்தம்]

213. பாடிவரு கோபாலர் மனைதனிற்
றயிரொடுநெய் பாலினைத் திருடியுண்டும்
பண்புபெற சோதகைத் தாம்பாலு
மடியுண்டு பாரவுர லோடிருந்தும்
வாடுமிடை மாதர்பதி னாயிரத்
தாரோடு மருவியுங் கூறைகொடுபோய்
வளர்குருந் தேறியும் கஞ்சன்வர
விடுபகையை மறுகிடப் பொடியாக்கியும்
நாடிவரு பேயினுயிர் உண்டும்வெகு
மாயையின் நலம்பெற்ற கிருஷ்ணனெனவே
நன்குபெறு நிருபனே தெட்சணா
மூர்த்தியருள் நற்பேரன் என்னஅடையார்
தாடொழவும் வருநிபுண நாச்சியப்
பன்புதல்வ சப்பாணி கொட்டியருளே
சற்புருட மேருமுத் துக்குமர
பூபனே சப்பாணி கொட்டியருளே!

உன்னுடைய திருநாமத்தையேபாடி வருகின்ற கோபாலராகிய ஆயர்தம் மனைகளிற் புகுந்து தயிரோடு நெய்யையும் பாலையும் அவர் அறியாமற்றிருடியுண்டு அதனால் பண்புடையாட்டியாகிய யசோதையின் கைத் தாம்பாலே அடியுண்டும் பெரியவுரலோடு சேர்த்துப் பிணித்தமையாலே அதனோடு கட்டுண்டிருந்தும் மெல்லிய இடையையுடைய ஆயச்சிறுமியர் பதினாயிரவரோடு கலந்து மருவியும் அவர் நீராடுங்கால் அவர்தம் ஆடைகளைக் கவர்ந்து கொண்டுபோய் உயர்ந்த குருந்த மரத்

தின் மேலேறிக்கொண்டு விளையாடியும், கஞ்சனாகிய பகைவன் ஏவலினால் வரும் அசுரப் பகைகளை அவரவர் மனம்மறுகி அஞ்சியிறக்கும் வண்ணம் பொடியாக்கியும் பாலூட்டி மாய்ப்பதற்காக வந்த பேயொத்த பூதகியின் உயிரையுண்டும் ஒப்பற்ற பல மாயவித்தைகளினால் நலம்பெற்ற கிருட்டிணன் நீயே என நன்குமதிக்கப் பெறும் அரசனே! தெட்சணாமூர்த்தியருளும் நன்மை யமைந்த பேரனென்று அஞ்சிப் பகைவர்கள் எல்லாம் நின் திருவடிகளைத் தொழுது வாழுமாறு விளங்கும் நிபுணனே! நாச்சியப்பன் தவப்புதல்வனே சப்பாணி கொட்டியருள்வாயாக! சிறந்த ஆடவர்களுக்குள்ளே மேருவெனத் திகழும் முத்துக்குமர பூபனே சப்பாணி கொட்டியருள்வாயாக!

[பாடி=ஆயர்பாடி எனவும் பொருள் கொள்ளலாம். பண்பு பெறு அசோதை என்றார் ஒப்பற்ற செல்வமகனாக இருந்தும் பிறர் பொருளுக்கு ஊறு செய்தமைக் கண்டு ஒறுத்ததனை எண்ணி. தாம்பு=கயிறு. இதிற்காணப்பெறும் கிருட்டிணலீலை களைப் பாகவதத்துள் விரிவாகக் காண்க. கூறை=ஆடை. குருந்து=குருந்தமரம்: கஞ்சன்=கம்சன். மறுகுதல்=கலங்கு தல். பொடியாக்கல்=உருவமில்லாதவாறு அழித்தல். பேய்= ஈண்டுப்பூதகியை உணர்த்திற்று: மாயை=வஞ்சனைவிளையாட்டு. தெட்சணாமூர்த்தி என்பவன் முத்துக்குமர பூபதிக்குப் பாட்டன் முறையினன் எனத்தெரிகிறது. நாச்சியப்பன் இவன் தந்தை: சத்புருடன்=சிறந்த ஆண்மகன்.

—

தோற்றுவாய்

முத்துக்குமர பூபதியின்மேல் பாடிய பிள்ளைத் தமிழின் ஐந்தாம் பருவமாகிய முத்தப்பருவத்தைப் பற்றியது இப்பாடல். இதனுள் முத்துப்பிறக்கும் இடம்பலவும் கூறி, அவையெல்லாம் நின்திருவாய் முத்தத்திற்கு ஒப்பாகா என நயம்படக் கூறுகிறார் புலவர்.

## முத்தப்பருவம்

[பன்னிருசீர் ஆசிரிய விருத்தம்]

214. துங்கக் கரட மதக்கவுட்டுத்
துதிக்கைக் களிற்றின் மருப்புமுத்தும்
தூய நளினம் சலஞ்சலத்தின்
துலங்கும் ஆணிப் பொலன்முத்தும்
வங்கக் கடலிற் சங்குமுத்தும்
மாக மேகம் ஈன்றமுத்தும்
மதிவாழ் முத்தும் கன்னல் முத்தும்
அரம்பை முத்தும் திறம்பெறவே
திங்கள் பரவும் இருநிலத்திற்
சேர இனிதுண் டானாலும்
செல்வம் வளர வளருநின்றன்
திருவாய் முத்தந் தனக்கிணையோ!
செங்கண் திருமால் நாச்சியப்பன்
செல்வா முத்தம் தருவாயே!
சித்தி பெறுமுத் துக்குமரா
திருவாய் முத்தந் தருவாயே!

சிறந்த மதநீர் பெருகும் மதத்தையுடைய கபோலம் பொருந்திய யானையின் கொம்புகளிடமாகத் தோன்றும் முத்தும், தூய தாமரை மலரில் தோன்றும் முத்தும் சலஞ்சலம் என்னும் சிறந்த சங்கினிடத்துத் தோன்றும் முத்தும், ஆணிப் பொன்னால் ஆகிய முத்தும், வங்கக் கடலிற்றோன்றும் சங்கிடத்தில் விளைந்த முத்தும், திக்குகளிற் பரவும் மேகங்களில் தோன்றும் முத்தும், திங்களிடத்தே விளங்கி நிற்கும் முத்தும், கரும்பின் முத்தும், வாழை மரத்தில் தோன்றும் முத்தும், நிலாவொளி பரவும் இந்தப் பெரிய புவியிடத்தே திறம்

பெற ஒரு சேரத் தோன்றி விளங்கினாலும், மழலைச் செல்வம் வளரவளர இன்பம் வளரும் உனது திருவாய் தரும் முத்தங்களுக்கு ஒப்பாகுமோ? (ஒப்பாகமாட்டா) சிவந்த அழகிய கண்களையுடைய திருமாலே என விளங்கும் நாச்சியப்பன் மகனாக வந்துள்ள செல்வனே! முத்தந் தருவாயாக. பெறும் பேறுகள் எல்லாம் பெறுதற்குரிய முத்துக்குமர வள்ளலே! நின் திருவாய் முத்தந் தந்தருள்வாயாக!

[துங்கம் = மேன்மை. கரடம் = மதநீர். கவுள் = கன்னம். மருப்பு = கொம்பு. நளினம் = தாமரை. சலஞ்சலம் = சங்கு (வலம்புரி ஆயிரம் சூழவிளங்கும் உயர்ந்த சங்கின் பெயர்சலஞ்சலம்) பொலன் = பொன். வங்கம் = கடலின்பெயர் அல்லது நாவாய் எனவும் கொள்ளலாம். மாகம் = திசை. மதி = சந்திரன். கன்னல் = கரும்பு. அரம்பை = வாழை. இவையாவும் முத்துப் பிறக்கும் இடங்களென நூல் கூறுகிறது. நாச்சியப்பன் முத்துக்குமரனின் தந்தை. சித்தி = பேறு.]

—0—

தோற்றுவாய்

இச்செய்யுள் முத்துக்குமர வள்ளலின்மீது பாடப்பெற்ற பிள்ளைத்தமிழில் அம்புலிப் பருவத்தைச் சேர்ந்தது. இதனுள் பாட்டுடைத் தலைவனுக்கும் சந்திரனுக்கும் காட்டும் ஒற்றுமை வேற்றுமைகள் நயமாக உள்ளன.

## அம்புலிப்பருவம்

[பன்னிருசீர் ஆசிரிய விருத்தம்]

215. மேருவின் உதித்தவன் நீ, இவன் செம்பொன்மக
மேருவென வேயுதித்தோன்
முதுகுகூன் அடையமெய் குறைந்தவன் நீ, இவன்
மேன்மைகுறை யாதபுகழோன்
கூடுமெயி றுளவரவு பகையுடைய நீவரின்
கோளினைக் கூறுசெயவே

குனிமந்திர வாளது கொடுப்பனிது தண்மைநீ
குறுகிடினு மீதுபெறலாம்.
வாரும்வர விலையாகில் இன்னமுன் போலவே
வளர்சாணை யிட்டுன்குலம்
மாற்றுவன் இவன் விசுவ கர்மாவின் மரபுசுப
வாழ்வுபெற் றவனுகையால்,
ஆரவயல் நிறைமாந்தை வருநிருப னுடனினியே
அம்புலீ யாடவாவே!
அத்திர மதனுன முத்துக் குமரனுடன்
அம்புலீ யாடவாவே!

அம்புலியே நீ பேருமலையில் தோன்றி இயங்குகின்றாய்; இவனே செம்பொன்மயமான மேருவாகவே தோன்றி இயங்குபவன். நீயோ முதுகு கூனடைந்து மெய் குறைந்தவன்; இவன் என்றும் மேன்மை குறையாத புகழுடையவன். கூர்மையான பற்களை யுடைய (இராகு கேதுவாகிய) பாம்புகளின் பகைமையையுடையவன் நீ. ஆதலின் நீ இவனை அடைந்து விளையாட வந்தால், அக்கோள்களைக் கூறுபடுத்தும் வளைவுள்ள மந்திர வலிமிக்க வாளினைக் கொடுப்பான். மேலும் நீ கொண்டுள்ள குளிர்ச்சி குறைய நேர்ந்தாலும் இவன் (அருளாகிய குளிர்ச்சியை) அளிக்க இன்னும் மேன்மையோடு பெறலாம். எனவே விரைந்து வருவாயாக! வரவில்லையானல், இப்பொழுது நீ முன்போலவே ஆக உன்னுடைய வளர்ச்சியைச் சாணையிட்டுத் தேய்த்துனது குலத்தையே இல்லையாக மாற்றிவிடுவான். எவ்வாறு எனின், இவன் விசுவகர்மாவின் மரபிற் சிறந்த வாழ்வு பெற்றவன் என்பதனல். ஆகையால் முத்துக்கள் கொழிக்கும் வயல் நிறைந்த மாந்தையில் தோன்றி விளங்கும் இம் மன்னனுடன் இப்பொழுதே விளையாடிமகிழ வருவாயாக. மலரம்புகளையுடைய மாரவேளான இந்த முத்துக் குமரனுடன் ஏ அம்புலியே ஆடவருவாயாக!

[மேரு = நிலநடுவில் இருப்பதாகப் புராணங்கள் கூறு கின்ற பொன்மயமான மலை; இதனில் தோன்றியே கதிரும் மதியும் இயங்கும் எனப் புராணங்கள் கூறும். முதுகுகூன் அடைய மெய்துறைந்தவன் என்றது பிறையையும் குறையையும் கருதி. இதனால் கதிரவனுக்குத் தோற்றுக்குறுகினாய் எனச் சுட் டப்பெற்றது. எயிறு = பல். அரவு = பாம்பு (ஈண்டு இராகு கேதுவாகிய கோள்களைக் கருதிற்று) குனி = வளைவு: தண்மை = குளிர்ச்சி: மீது = மேலாக: சாணை = சாணைக்கல் "இவன் விசுவகர்மாவின மரபு சுகவாழ்வு பெற்றவன்" என்ற தொடரால் இவ்வள்ளலின் குலம் ஒருவாறு விளங்குகிறது: ஆரவயல் = முத்துக்கள் திகழும் வயல்கள். ஆரம் = முத்து. நிருபன் = அரசன்.]

தோற்றுவாய்

இப்பாடல் அவ்வள்ளலின்மீது வருகைப் பருவமாகப் பாடிய பிள்ளைத்தமிழாகும், இதனுள் இவ்வள்ளலின் மூதாதையையும் பல்வேறு உறவினர்களையும் புலவர் புலப்படுத்துகிறார். எனவே இவன் வரலாறு அறிதற்குப் பெரிதும் துணையாக உள்ளது இப்பாடல்.

## வருகைப்பருவம்

[பன்னிருசீர் ஆசிரிய விருத்தம்]

216. தருவோங் கிடவே யுதவுகொடைத்
தருமன் வருக வல்லியந்தார்
தவழும் உரவோய் வருகமிக்க
சதுரன் தெட்ச ணாமூர்த்தி
திருவேங் கடத்தன் துணையான
திருமால் வேங்க டாத்திரியைத்
திறல் மூ தாதை யெனப்படைத்த
செல்வன் வருக இருளறெடும்
மருவோங் கியதிண் புயனாை

மன், ஆவுடைய நாயகனை
மருவுஞ் சிறிய தாதையென
வருவோய் வருக! கண்ணுளா!
மருவோங் கிடவாழ் நாச்சியப்பன்
மதலாய் வருக வருகவே!
மாலே முத்துக் குமரமகி
பாலா வருக வருகவே!

கற்பகத் தருவைக்காட்டிலும் ஓங்கி உதவும் கொடை சிறந்த தருமனே வருக! அல்லிமலர் மாலை விளங்கும் மார்பையுடையவனே! வருக! மிக்க அறிவாற் றலுடைய தெட்சணாமூர்த்தி, திருவேங்கடத்தன் ஆகிய இவர்களைத் துணையாகக் கொண்டு விளங்கிய திருமாலை யொத்த வேங்கடாத்திரி என்னும் பெரியோனைத் திறல் மிக்க நின் மூதாதையாகப் பெற்ற செல்வனே! வருக! இருளன் என்பவனோடு மணமிக்க மாலை தவழும் தோள் களையுடைய மன்னனான ஆவுடைய நாயகனைப் பொருந் திய சிறிய தாதை எனப்பெற்று விளங்குவோய் வருக! கண்ணுளனே! புகழ் ஓங்கிட வாழும் நாச்சியப்பன் பெறற மதலையே வருக! திருமால் போன்றவனே! முத் துக்குமர மகிபாலா வருக வருக!

[தரு = கற்பகம்: 'தருவோங்கிட' ஐந்தாவதன்தொகை அல்லியந்தார் = அல்லிமலர்மாலை. உரம் = மார்பு. சதுரன் = ஞானத்தையுடையவன் தெட்சணாமூர்த்தியும் திருவேங்கடத்த னும் வேங்கடாத்திரியின் உடன் பிறந்தவர்களாகலாம், அல்லது துணைவர்களாகவும் இருந்திருக்கலாம்: வேங்கடாத்திரி முத்துக் குமரனின் புகழ்மிக்க மூதாதை எனத் தெரிகிறது. இருளன், ஆவுடைய நாயகன் இருவரும் முத்துக்குமரனின் சிறிய தந்தை யர்கள், அல்லது அம்முறையுடையவர்கள் எனத் தெரிகிறது. மரு = மணம்: ஈண்டுப புகழை உணர்த்தும்: மதலை = மகன் மகிபாலன் = அரசன்—புவியைப் புரப்பவன் என்பதுபொருள்.]

தோற்றுவாய்

இச்செய்யுள் சிறுபறைப் பருவமாக அவ்வள்ளலின்மேல் பாடப்பெற்ற பிள்ளைதமிழாகும். இதனுள், முத்துக்குமர வள்ளல் குலமும், கொடியும் தெளிவு பெறப் புலப்படுத்தப் பெறுகின்றன.

## சிறுபறைப் பருவம்.

[பன்னிருசீர் ஆசிரிய விருத்தம்]

**217. மீனவற் குச்சமைத் திடுமகுட மதுமதுர**
**விஞ்சைக் களித்துமுனியை**
**வீறுதென் பால்மலை யிறுத்தியும் செகதகுரு**
**வாகமே தினியுதித்தும்**
**வானவ ருடனர னரிபிரம னுக்கினிய**
**வாய்மையி லிடங்கொடுத்தும்**
**வளரக்க சாலையர சென்னஅனு மக்கொடியை**
**மகமேரு முடியில்வைத்தும்**
**மோனமறை முதலான காளிகா தேவியருள்**
**முத்தியும் வெற்றிபெறவே**
**மூதறி வுடன்பொன் னெழுத்தாணி யதுகொண்டு**
**மூவுல களித்தகையால்**
**சீனம்வங் கந்துளுவம் இனியதிறை இடவும்நீ**
**சிறுபறை முழக்கியருளே!**
**(தேச)த்தி ரந்தருமுத் துக்குமர பூபனே**
**சிறுபறை முழக்கியருளே!**

மீனவராகிய பாண்டிய மன்னர்க்கென அமைத்த அழகிய மகுடத்தை, வித்தை வல்ல புலவர்களின் கலையைப் பாராட்டி வழங்கியும், இசையில் வல்ல அகத்திய முனிவரைத் தென்மலையாகிய பொதிய மலையில் நிலை பெறச் செய்தும், செகதகுருவென்று உலகோர் போற்றும் சிறந்த குலத்தில் தோன்றியும், தேவர்கள்

பிரம்மா, சிவன், திருமால் என்னும் தெய்வங்கட்கு இனிய தன் வாய்மையினிடங் கொடுத்தும், சிறந்தபுகழ் வளரும் 'அக்கசாலை' என்னும் பதிக்கு அரசனுகி அனுமக் கொடியினை மகா மேருமலையின் சிகரத்தில் நிலை நாட்டியும், மோன நிலையில் விளக்கும் வேதத்திற்கு மூலகாரணமாகிய காளிமாதேவியின் பேரருள் சான்ற முத்தியும் வெற்றி பெறக்கொண்டு, மூதறிவுடன் பொன்னாலாகிய எழுத்தாணி கொண்டு மூவுலகையும் அளித்த திருக்கரங்களால், சீனம், வங்கம், துளுவம் முதலான நாடுகள் இனிதாகத் திறையிடவும் நீ (வெற்றிமுரசாகிய) சிறுபறையை முழக்கி அருள்வாயாக. தேசத்தை நிலை பெறக் காத்தருளும் முத்துக்குமர பூபனே! சிறு பறையை முழக்கியருள்வாயாக!

[மீனவர் = பாண்டியர். மகுடம் = கிரீடம். விஞ்சை = கலை. முனி = அகத்தியன். விசுவகர்மா வகுப்பினரைச் செகத்குரு என வழங்குதல் மரபு. தேவருக்கும் மூவருக்கும் இனிய வாய்மை யினிடங் கொடுத்தும் என்பதன் கருத்துப் புலனாகவில்லை. முத் தொழிலும் வல்லவன் என்பது கருத்தாகலாம். அக்கசாலை = முத்துக்குமர பூபதியின் ஊர். ஸ்திரம் = திரமென நின்றது.]

—0—

தோற்றுவாய்

இப்பாடல் 'சிற்றில் சிதைத்தல்' என்னும் பருவத்தைச் சார்ந்தது. இதனை எட்டாவது பருவமாகவும் 'சிறு பறை' கொட்டுதலை ஒன்பதாவது பருவமாகவும் அமைப்பது வழக்கு. சுவடியில் இதனை ஒன்பதாவதாக எழுதப்பட்டுள்ளமையின் உள்ளவாறே பதிப்பிக்கப்படுகிறது. இதனுள் முத்துக்குமர பூபதியைத் திருமாலாக (கண்ணபிரானாக) வே வைத்துச் சிறப்பிக்கப்பட்டுள்ளது.

## சிற்றிற் பருவம்

[பன்னிருசீர் ஆசிரிய விருத்தம்]

218. நிருதர் இருக்கும் அரும்புரமோ?
நெடிய மருதோ? சகடிதுவோ?
நேசமி லாதோர் பகைஞரில்லோ?
நினக்கே அடங்காக் குறுமன்னர்
மருவும் வரையோ? மடமொழிசேர்
மழலைக் குதலைக் கிஞ்சுகவாய்
வனிதைச் சிறியேம் ஈழமதால்
மடைசெய் தினிய நற்பவளம்
எரிசெய் நெருப்பாத் தங்கமிட்(டு)
இழைத்த பானைச் சிறுசோற்றை
எண்சே ரமுதென் றெடுத்துவைத்(து)
எழிற்கோ மளத்தைக் கருணைஎன்ன
திருவுற் றிடவே யிழைத்தவிந்தச்
சிறியேம் சிற்றில் சிதையேலே!
தீரா முத்துக் குமரமன்னு
சிறியேம் சிற்றில் சிதையேலே!

ஆற்றல்மிக்க தீரனே! முத்துக்குமர மன்னு (யாங்கள் இழைத்துள்ள இது சிற்றில்தானே யன்றி) அரசர்கள்வாழும் அரிய ஊரோ, நெடிய மருத மரங்களோ, சகடமோ இது? மற்று உன்பால் நேயமில்லாதார் உறையும் பகைவர் இல்லமோ? அல்லது உனக்கு அடங்காத குறுநிலமன்னர்கள் அஞ்சிப் பதுங்கி வாழும் மலையிடமோ? (அல்லவே) மடப்பம் பொருந்திய இனிய மொழியாகிய மழலையும் குதலையும் பேசும் கிள்ளைபோலும் வாயினையுடைய சிறுமியராகிய யாங்கள், பொன்னால் அடுப்பு மடையமைத்து இனிய நல்ல பவளங்களையே எரியூட்டும் நெருப்பாகக் கொண்டு தங்கமிட்டு இழைத்த பானை

யிலே (பொய்யாக ஆக்கிய) சிறு சோற்றை எண்ணுதற்கரிய அமுதமென்று எடுத்து வைத்து அழகொளிமிக்க கோமளத்தை வியஞ்சனமாக அமைத்துச் செழிப்பு மிக்கதாக இழைத்துள்ள சிறுமியராகிய எங்கள் சிற்றிலைச் சிதைக்காதிருப்பாயாக! மன்னனே! சிற்றில் சிதையேலே!

[இப்பாடலுள் வரும் 'மருது' என்பது ஆயர்பாடியில் யசோதையினுடைய இல்லத்தின் பின்னின்ற அரக்கர்களாகிய இரட்டை மருதமரங்களையும், 'சகடு' சகடாசுரனையும் குறித்தன. இவற்றால் முத்துக்குமர பூபனைக் கண்ணனாகக் கருதிக் கூறியமை புலப்படும். இஞ்சுகம் = கிளி. மழலை = பொருளற்ற ஒலிகள். குதலை=பொருளுள்ள சொற்களின் சிதைவு. வனிதை = பெண். ஈழம் = பொன். அமுது = உணவு. சிறுமியர் மண்ணால் சிறு வீடுகட்டி மண் முதலியவற்றால் பொய்யாகச் சமைத்து விளையாடும் இல் சிற்றில் எனப்படும். இப்பாடலுள் சிறு சோறு அமைக்க அச்சிறுமியர் கொண்ட பொருளாகிய பொன், பவளம், கோமளம் இவை அந்நாட்டு வளத்தைக் குறித்துகின்றன.]

(0)

தோற்றுவாய்

• இப்பாடல் பிள்ளைத்தமிழின் பத்தாம் பருவமாகிய 'சிறுதேர் உருட்டுதல்' என்னும் பருவம் பற்றியது. இதனுள் முத்துக்குமர பூபனின் சுற்றமும் உறவும் பரம்பரையும் சுட்டப்பெறுவது வரலாறறிதற்குப் பெரிதும் பயன்படும்.

## சிறுதேர்ப் பருவம்

[பன்னிருசீர் ஆசிரிய விருத்தம்]

219. வல்லியந் தார்வாழ அனுமகே தனம்வாழ
வளரக்க சாலைவாழ
மால்வேங்க டாத்திரி சொல்லிருளன் ஆவுடை
[யான்
மகிழ்ந்தினிது நாளும்வாழ

**மல்லுலவு புயனுன திருவேங்க டேந்த்ரனருள்**
**மாமதலை நாச்சியப்பன்,**
**மகராச னென்னவே வங்கிச பரம்பரை**
**மார்க்கண்ட னென்னவாழ**
**சொல்லுயரும் அஞ்சுபஞ் சாளரெழு பத்துநாற்**
**சித்தர்கணத் தவர்கள்வாழ**
**துரைராச னெனவந்த தெட்சணு மூர்த்திமிகு**
**சுபமினிது பெற்றுவாழ**
**செல்லுலவு காமாந்தை வருநிருப குருசிலே**
**சிறுதே ருருட்டியருளே!**
**சித்ரமத ரூபமுத் துக்குமர பூபனே**
**சிறுதே ருரு டியருளே!.**

*முத்துக்குமர பூபனே! நின் அல்லியந்தார் வாழவும், அனுமக் கொடி வாழவும், புகழ் வளரும் அக்கசாலை என்னும் பதியில் விளங்கும் பெரியோனுகிய மால்வேங்கடாத்திரியும், புகழ் சான்ற இருளனும், ஆவுடையானும் நாணும் மகிழ்ந்து இனிது வாழவும், வளம்பொருந்திய தோளினையுடைய திருவேங்கடேந்திரன் என்னும் மன்னவன் அருளிய ஒப்பற்ற மகனுகிய நாச்சியப்பன் மாமன்னனுக வங்கிச பரமபரையாக மார்க்கண்டனைப் போல எப்பொழுதும் சிரஞ்சீவியாக வாழவும், பெரும் புகழ்சான்ற அஞ்சு பஞ்சாள தேசத்து மன்னர்களும், எழுபத்துநான்கு சித்தர் கணத்தவர்களும் வாழவும், அரசர்க்கு அரசனென விளங்கும் தெட்சணுமூர்த்தி மிக்க மங்களமெலாம் பெற்று இனிது வாழவும், கார் மேகங்கள் தவழ்ந்து இடியுடன் முழங்கியுலவும் சோலை சூழ்ந்த 'மாந்தை' என்னும் பதியிலே விளங்கித் திகழும் அரசர் குருசிலே! நீ சிறுதேர் உருட்டியருள்வாயாக! ஓவியம்போல வடிவழகுவாய்ந்த முத்துக்குமர பூபனே! சிறுதேர் உருட்டியருள்வாயாக!*

[வல்லியந்தார் = கொடியாலாகிய மாலை. கேதனம் = கொடி அக்கசாலை = ஊர். மால்வேங்கடாத்திரி, இருளன், ஆவுடையான். இவர்கள் இம்மன்னனின் உறவினர்கள். உடன்பிறந்தவர்கள் எனவும் கருதலாம். 'இருளனாவுடையான்' என்பது ஒருவரா இருவரா என்பது புலனாகவில்லை. மல் = வளம். திருவேங்கடேந்திரன் நாச்சியப்பன் நெருங்கிய உறவினன் போலத்தெரிகிறது, வங்கிசம = குலமுறை அல்லது பரம்பரை. அஞ்சுபஞ்சாளர். எழுபத்துநான்கு சித்தர்கணத்தவர். இவர்தம் தொடர்பு புலனாகவில்லை. செல் = இடி. கா = சோலை.]

–0–

# மெய்க்கன் பேரில் பிள்ளைத்தமிழ்.

தோற்றுவாய்

இது முதல் ஏழுபாடல்கள் இராசையூரில் வாழ்ந்த மெய்க்கபூபன் என்னும் வள்ளலின் மகனை கனகை மெய்க்கபூபதி என்னும் மெய்க்கன்மேல் பாடப்பெற்றவை இவை யாவும் 'பிள்ளைத் தமிழ்' என்னும் பிரபந்த வகையைச் சேர்ந்தவை. ஒருகால் இவன்மீது பாடிய பிள்ளைத் தமிழில் இருந்து பருவத்திற்கு ஒரு பாடலாக எடுத்துக் கோத்தனவாக இருக்கலாம்; அன்றி ஒரு பருவத்துக்கு ஒவ்வொரு பாடல் பாடியுமிருக்கலாம். அவற்றுள்ளும் ஏழு பாடல்களே உள. எட்டாவது பாடல் இரண்டடியில்லாமல் சிதைந்து காணப்படுகின்றது. இவை யாவும் பிள்ளைத் தமிழுக்குரிய பா மரபோடு விளங்குகின்றன. கிடைத்த பாடல்களால் ஒருவாறு இவன் வரலாற்றைச் சிறிதே அறியலாம். காப்புப் பருவம் முதலாக அம்புலிப் பருவமீறாக ஏழுபாடல்களின் நயத்தையும் அவ்வத்தலைப்புகளில் காணலாம். முதற்கண் மரபுப்படி திருமாலைக் காத்தருள்புரிகவென காப்புச் செய்யுள் கூறுகின்றது. பொதுவாகத் திருமாலைப் பற்றிக் கூறாமல் திருவேங்கடப் பெருமானைச் சிறப்பாகக் கூறுகின்றது. இதனால் இப்பெருமகன் திருவேங்கட நாதன்பால் ஈடுபாடு

டையவன் என்பதும் வைணவன் என்பதும் புலனுகின்றன. இப்பாடல் சந்தமும் சீரும் செவ்வையாக இல்லை; ஏடு எழுதுவோரால் நேர்ந்த குறையாக இருக்கலாம். எனினும் பொருட் சிறப்பு போற்றத் தக்கதாம்.

---

## *மெய்க்கன்பேரில் பிள்ளைத்தமிழ்:*

### காப்புப்பருவம்

### *திருமால்*

[எண்சீர் விருத்தம்]

**220. சீர்மேவும் தென்ராசை நாடனிசை பரவுஞ்செல்வன்**
**செந்தமிழுக் கைந்தருவாம் வளந்திகழும் நிபுணன்**
**கார்மேவு கரன்மெய்க்கன் பூபதிசெ............லே**
**கனகைமெய்க்க பூபதியைக் காசினிமேற்புரக்......**
**ஏர்மேவு துளபமலர் இலகியமார் பினர்நல்**
**எழில்வளங்கூர் வடமலைமேல்இன்புறவீற் றிருக்கும்**
**வார்மேவு முலையலர்மேல் மங்கைக் கிடப்பாகம்**
**மருவும் வேங்கடேசர் செய்யமல ரடிசரணே.**

எல்லாச் செல்வங்களும் பொருந்தித் திகழும் தென்ராசையூரையுடையவன், எங்கும் புகழ்பரவி விளங்கும் செல்வன், செந்தமிழுக்குத் தெய்வலோகத்து ஐந்து தருவை ஒப்ப வழங்குபவன், வளந்திகழும் கலைகளில் வல்லவன், கார்மழை போல வழங்குங் கைகளையுடையவன், மெய்க்க பூபதியின் செல்வக் குமரன், கனகை மெய்க்க பூபதியைக் காசினிமேல் வாழும்படிச் செய்ய எழுச்சி பொருந்திய துளவமலர்மாலை விளங்கும் மார்பினையுடையார் நல்ல அழகு வாய்ந்த வளமிக்க திருவேங்கட மலையின்மீது கோயில் கொண்டு இன்புற வீற்றிருக்கும், மார்புக் கச்சணிந்த தனங்களையுடைய செந்

தாமரைமலர் மேல் உறையும் மங்கை இடப்பாகத்தே விளங்கும் வேங்கடேசரின் சிவந்த தாமரை மலர் போலும் இணையடிகளே காப்பாம்: எனவே காக்க வேண்டுமென வாழ்த்தி வணங்குகின்றேன்.

[ஐந்தரு = கற்பகம் முதலிய தெய்வ விருட்சங்கள்: தமிழுக்கு எனவே புலவர்களைப் புரப்பவன் என்பதாயிற்று. நிபுணன் = வல்லவன். காசினி = உலகம். ஏர் = எழுச்சி. துளபம் = துளசி. எழில் = அழகு. 'அலர்மேலு மங்கைத் தாயார்' என்பது திருப்பதியில் விளங்கும் அம்மையின் திருநாமம். மருவுதல் = பொருந்துதல்: சரண் = அடைக்கலம், அஃதாவது காப்பு என்றபடி.]

—0—

தோற்றுவாய்

இப்பாடல் செங்கீரைப் பருவத்தைப்பற்றியது. செங்கீரையாவது ஒருதாளை யூன்றி ஒருதாளை எடுத்து ஆடுவது என்றும், கீர்கீர் என மழலைச் சொல் தோன்ற ஆடுவதென்றும் கூறுவார்கள்: இப்பருவம் பெற்றோர் மகிழ்ந்து முத்துமிட்டும் ஏந்தியும் தாய்ப்பாலூட்டியும் மகிழும் பருவம் ஆதலின் அதற்கேற்ப அமைந்துள்ளதிப்பாடல்.

## செங்கீரைப்பருவம்

[பன்னிருசீர் ஆசிரிய விருத்தம்]

221. நெற்றியிற் சுட்டியும் இருகுழை குண்டலமும்
நேருசலாடவம்பொன்
நிலவுகிண் கிணியோடு சிலம்பாட மார்பகத்(து)
எழில்வல்லி மாலையாட
பெற்றதாய் மடியில்வைத் திருதனத் தமுதூட்டிப்
பிரியமொடு முத்தமாடப்
பேரிசைப் பாவாணர் கொண்டாட எண்டிசையும்
புகழ்பெற்ற மெய்க்கபூபன்

**முத்தமிட்டுத் திருமுகத் தில்முகம் வைத்தினிய**
**முறுவல்செய் தங்கமெல்லாம்**
**உவகைபொங் கிடமருவார் தென்கடலில் மூழ்கிட**
**முதுமறையோர் ஆசிசொல்லச்**
**சித்திரமென வேவுவகை பொங்கிட உகந்துநீ**
**செங்கீரை யாடியருளே!**
**திரவசனன் மெய்க்கனருள் மெய்க்கபூ பாலனே**
**செங்கீரை யாடியருளே!**

அழகிய நெற்றியிலே சுட்டியும், இருகாதுகளிலும் குண்டலமும் நேரே ஊசல்போல் அசைந்தாடவும், அழகியபொன்னலான கிண்கிணியோடு சிலம்புகளும் பாதங்களிலே விளங்கியாடவும் மார்பின்கண்ணே அழகிய மணிமாலையாடவும், ஈன்றெடுத்த தாய் தன் மடிமீது வைத்து இருதனத்திலும் ஊறும் அமிழ்தமாகிய பாலை யூட்டிப் பிரியத்தோடு முத்தமிடவும், உனது பெரும் புகழைப் பாவாணரெல்லாம் இசைத்துக் கொண்டாடவும், எட்டுத் திசையிலும் வன்மையாலும் வண்மையாலும் புகழ்பெற்று விளங்கும் மெய்க்கபூபதியான உன் தந்தை வாரி எடுத்து முத்தமிட்டு, முகத்தோடு முகம் வைத்து இன்புற்று முறுவல் செய்து, தன் அங்கமெல்லாம் உவகை பொங்கவும், பகைவர்கள் அஞ்சித் தென்கடலிலே சென்று மூழ்கவும், பழமையான மறைவல்லவர் மகிழ்ந்து வாழ்த்தவும், நாங்கள் ஓவியம்போல அமைந்து உவகை பொங்கவும், நீ உளமுவந்து செங்கீரையாடியருள்வாயாக. நிலையான சத்தியமொழியை உடைய மெய்க்கனருளிய மெய்க்கபூபாலனே! செங்கீரையாடியருள்வாயாக.

[சுட்டி = நெற்றியில் தொங்குமாறு தலையில் அணியும் ஓர் அணிகலன். குழை = இட ஆகுபெயராய்ச் செவிகளைச் சுட்டி நின்றது. நேரூசலாட = நிகர்த்துஆட. கிண்கிணி = சதங்கை போன்றதொரு காலணி. சிலம்பு = ஒருகாலணி

'வல்லி' எனவே மணிமாலையாயிற்று. பிரியம் = அன்பு. முறுவல் = புன்சிரிப்பு. அங்கம் = உடம்பைக்கருதிற்று. மருவார் = பகைவர்—மறையோர் = அந்தணர். ஆசி = வாழ்த்து: திரவசனம் = ஸ்திரவசனம்: சொன்ன சொல் மாருதவன என்பது கருத்து; செவிலியரும் பிறரும் இவ்வாறு வேண்டியதாகக் கொள்க.]

---

தோற்றுவாய்

இப்பாடல் மூன்றும் பருவமாகிய தாலப்பருவத்தைப் பற்றியது தாலாட்டுதல் பருவம். தால் = நாக்கு: தாயரும் செவிலியரும் குழந்தை அமைதிகொள்ளவும் கண்வளரவும் தங்கள் நாவால் எழுப்பும் இனிய சந்த ஓசை. இதனுள் இக்குழந்தையைக் கண்ணபிரானுகவே வைத்துக் கண்ணன் ஆயர்பாடியில் யசோதை இல்லத்தில் நிகழ்த்திய லீலைகளுள் சிலவற்றைக் கூறுதல் சுவையுடையதாகவுளது.

## தாலப்பருவம்

[பன்னிருசீர் ஆசிரிய விருத்தம்]

**222.** **கொங்கைக் குவட்டில் விடமமைத்துக்**
**கோதை வடிவாய் வெகுமாயம்**
**கொண்டே யசோதைப் பிராட்டிமனை**
**குறுகிக் கஞ்சன் வஞ்சனையால்**
**செங்கைத் தளிரால் ஏந்தி மடி**
**சேர்த்துச் சிரித்து விளையாடல்**
**செய்து தனப்பால் எனும்விடத்தைச்**
**செய்ய கனிவா யதிலூட்ட**
**அங்கைத் தளிராற் பிடித்தவள்தன்**
**ஆவி முலையோ டருந்திவளர்**
**அரசாம் செண்ப காடவிவாழ்**

**அய்யர் மன்னர் அடிபரவும்**
**தங்கத் தகடே மாந்தைமெய்க்கன்**
**தனயா தாலே தாலேலோ**
**தருமா மெய்க்க பூபாலா**
**தரும தாலே தாலேலோ**

தன் இரு கொங்கை முகட்டிலும் நஞ்சைப் பூசிக் கொண்டு அழகுமிக்கதொரு பெண்வடிவத்தோடு பல வாய வஞ்சனைகளை மனத்தேயும் உருவத்தேயும் கொண்டு யசோதைப் பிராட்டியின் இல்லத்தை அடைந்து கம்சன் ஏவிய வஞ்சனையினாலே (பூதகிஎன்னும் அரக்கி) தனது சிவந்த கைகளிலே உன்னை ஏந்தி மடிமீது அமர்த்தி மார்போடு சேர்த்திச் சிரித்து விளையாடல்கள் புரிந்து முலைப்பால் என்னும் கொடிய விடத்தை உனது கொவ்வைக் கனிபோன்ற வாயினிடத்தே ஊட்ட (அவள் வஞ்சனையை அறிந்து அவள் மடியும் வண்ணம்) உனது அழகிய தளிர்போன்ற கைகளால் பற்றிப் பிடித்து அவள் தன் உயிரை முலைப் பாலோடு சேர்த்து அருந்தி வளர்கின்ற அரசான, செண்பகச் சோலையிலே வாழும் அய்யா மன்னர் அடி. பரவும் தங்கத்தகடே!, மாந்தையூருடைய மெய்க்கன் பூபதியினுடைய அரியமகனே! தாலே தாலேலோ தருமத்தின் உருவாக வந்த மெய்க்கபூபாலனே தருமனே தாலே தாலேலோ.

[குவடு – முலைக்காம்பு. விடம் = நஞ்சு. கோதை = பெண் மாயம் = வஞ்சனை. கஞ்சன் = கண்ணனின் தாய் மாமனாகிய கம்சன். ஆவி = உயிர். முலை = முலைப்பால். "செண்பாகடவிவாழ் அய்யர் மன்னர் அடிபரவும்" என்பதற்குப் பொருள் விளக்கமாகவில்லை. 'மாந்தைமெய்க்கன்' என்பதனால் இராசையூரோடு மாந்தையும் இவனுடைய ஊர் என்பது புலனாகிறது. தருமன் = அறவோன்.]

———

தோற்றுவாய்

இச்செய்யுள் நான்காவதாகிய சப்பாணிப் பருவத்தைச் சேர்ந்தது ச. பாணி = உடன் நிகழும் தாளம் ('ச' என்பது ஒரு வடமொழி உபசர்க்கம்) இஃது இரு கைகளாகலும் கொட்டப் பெறுவது. இதனுள் மெய்க்கபூபனாகிய இவன் தன்பெற்றோரின் பெருந்தவத்தாலும் அரிய நோன்பாலும் பிறந்தவன் எனச்சுட்டப்படுகிறது.

## சப்பாணிப்பருவம்

[பன்னிருசீர் ஆசிரிய விருத்தம்]

223. அரியதவ மேபுரிந் தர்ச்சனைசெய் தாயிரம்
அருமறையு ளோர்க்கு நித்தம்
அன்புடன் தானம தளித்துவிர தத்துடன்
அதிசெபம தாகவுன்னைப்
பிரியமுட னீன்றன்னை தந்தைமகிழ் வெய்திடப்
பேருல கனைத்து மகிழப்
பிறையாயி ரந்தொழுவை யென்றுபெரி
யோர்கள் மொழி
பெயராமல் வாழ்த்தநிதமும்
கரியநெடு மால்ராச கோபாலர் சந்ததங்
கருணைதர நினைதுகினோர்
கண்மலர் குளிர்ந்திடப் பாவாணர் தங்..........
....லங்கிடத் துட்டரென்னும்
தரியலர்கள் நெஞ்சந் துணுக்கிட மலர்க்கையால்
சப்பாணி கொட்டியருளே
தற்பரனை மறவாத மெய்க்கனே யக்குமர
சப்பாணி கொட்டியருளே!

அரும்பெருந் தவமியற்றி ஆயிரம் அர்ச்சனைசெய்து நாளும் ஆயிரம் அருமறை யந்தணர்களுக்குத் தான

மளித்து, விரதத்துடன் அதிக செபம் செய்து உன்னை ஆன்புடன் பெற்றெடுத்த அன்னையும் தந்தையும் மகிழ்ச்சிகொள்ள, உலகமெல்லாம் மகிழப், ஆயிரம்பிறை தொழுது வாழ்வாய் எனப் பெரியோர்கள் எல்லாம் மாறாமல் வாழ்த்துக்கூற, நாள்நாளும் இராச கோபாலனாகிய இறைவன் இடைவிடாமல் அருள்புரிய, உன் சுற்றத்தாரும் பிறரும் தங்கள் மலர்க்கண்கள் குளிர்ச்சியெய்த பாவாணர் தம்பாட்டின் பொருள் துலக்கமுற கொடியவரெனப்படும் பகைவர்கள் நெஞ்சிலே அச்சங்கொள்ள நின் மலர்போன்ற கைகளால் 'சப்'பென்னும் படித்தாளமிட்டருள்வாயாக! இறைவனை என்றும் மறவாத மெய்க்கன் என்பவனுடைய நேசக்குமாரனே! சப்பாணி கொட்டியருள்வாயாக!

[அருச்சனை = நீரும் பூவும் கொண்டு வழிபடும் இறை வழிபாடு. தானம் = கொடை. விரதம் = நோன்பு. செபம் = தியானம். ஈன்ற அன்னை என்பது விகாரமாய் ஈன்றன்னை என நின்றது. நூறாண்டு வாழ்க என வாழ்த்துவதுபோல ஆயிரம் பிறைதொழுக என வாழ்த்துதல் ஒரு மரபு. தரியலர் = பகைவர்: துணுக்கிடல் = அஞ்சுதல். தற்பரன் = இறைவன் மெய்க்கனாகிய குமரன் என்றுமாம்.]

### தோற்றுவாய்

இச்செய்யுள் ஐந்தாவதாகிய முத்தப்பருவத்தைச் சேர்ந்தது இப்பருவம் குழந்தையைப் பெற்றோரும் செவிலி முதலியோரும் முத்தந் தருமாறு அழைப்பதாக அமையும். இதனுள் குழந்தைதரும் முத்தத்திற்குப் பிற முத்தங்கள் (முத்து) ஒவ்வா என்று பல்வேறு வகையான முத்துக்களைஎடுத்துக் கூறுவர். அது புலவர் தம் கற்பனைக்கேற்பவும் அமையும்.

## முத்தப்பருவம்

[பன்னிருசீர் ஆசிரிய விருத்தம்]

224. மத்த கசரா சியின் முத்தும்
வார்கன் னலிற்செந் நெலின்முத்தும்
மாக மேகம் ஈன்றமுத்தும்
வங்கக் கடலிற் சங்குமுத்தும்
கொத்துங் குரண்டம் ஈன்றமுத்தும்
குளிர்வெண் மதியந் தந்த முத்தும்
குலவுங் கமுகின் சலஞ்சலத்தின்
கோக நகத்தில் மேவுமுத்தும்
அத்தி யெயிறுள் வேண்டு முத்தும்
அவனி தனிலுண் டானாலும்
அமுதம் பொழிநின் குதலைமொழி
அதரமுத்தந் தனக்கிணையோ ?
முத்து நகையார் மதவேளே
முத்தந் தருக முத்தமே
முகுந்த மெய்க்க பூபாலா
முத்தந் தருக முத்தமே

உலகில் உயர்ந்த முத்துக்களாகக் கருதப்படும் யானையினத்தின் மத்தகத்தில் தோன்றும் முத்தும் நெடிய கரும்பின் கணுக்களிற்றோன்றும் முத்தும் செந்நெல்லின் முதிர்ந்த முத்தும் திசை பரவும் மேகங்களிடத்தே தோன்றும் முத்தும், வங்கங்கடலிற் சங்குகளிடத்தே தோன்றும் முத்தும், கொத்தும் இயல்புடைய கொக்கினது தலையில் தோன்றும் முத்தும், குளிர்ந்த வெண்மதியிடத்தே தோன்றும் முத்தும் கமுக மரத்தின் முத்தும், சலஞ்சலமென்னும் சங்குகள் ஈன்ற முத்தும், தாமரையினிடத்தே விளையும் முத்தும், யானையின் தந்தத்தில் தோன்றும் முத்தும் என உலகத்துள் பல

வேறு அரிய முத்தங்கள் உளவாயினும், அமுதம் பொழிகின்ற குதலைமொழி விளங்கும் உன் அதரங்களிடையே தோன்றும் முத்தத்திற்கு அவை எல்லாம் ஒப்பாகுமோ? (ஆகா) ஆதலின் முத்துப் போன்ற முறுவலுடைய மங்கையர்க்கு மதவேளாக விளங்குவோய்! முத்தந்தருவாயாக அதுவே முத்தமாம். முகுந்தனை வந்து தோன்றிய மெய்க்கபூபாலனே முத்தந் தருக! முத்தந் தருவாயாக.

[மத்தகசராசி = மத்தகத்தையுடைய யானைக் கூட்டம். கசம் = யானை. மாகம் = திசை. குரண்டம் = பெருங்கொக்கு. கமுகு = பாக்குமரம். அத்தி = யானை. எயிறு = (பல்)தந்தம். அவனி = உலகம்: குதலை மொழி = செம்மை பெறாத இனிய சொற்கள்: அதரம் = வாயிதழ். முத்துநகையார் = முத்து போன்ற முறுவலையுவடய மகளிர். இனிய முத்துப் பற்கள் நிறைந்த மதவேளே எனலும் ஆம். முகுந்தன் = திருமால்: முத்தமே என்றது முத்துப் போன்றவனே என்றபடி: இப்பாடலுள் முத்துப்பிறக்கும் இடங்களாகக் கூறியவைசுவையயப்பன.]

—0—

தோற்றுவாய்

இப்பாடல் ஆறுவதாகிய வருகைப் பருவத்தைச் சேர்ந்தது வருகைப் பருவம் என்றும் வாரானைப் பருவம் என்றும் இதனைக் கூறுவர்: பெற்றோரும் மற்றோரும் நடைபயிலும் குழந்தையை அன்போடணைத்து இன்புற இருகை நீட்டி வருக வருக என அழைப்பது: தளர் நடை காண்டற்கினிதாகலின் உவகை பொங்க அழைப்பர்: இப்பாடலுள் இயன்குல முன்னோரின் கொடைச் சிறப்பு விளங்குகின்றது.

## வாரானைப்பருவம்

[பன்னிருசீர் ஆசிரிய விருத்தம்]

**225. அந்நா ளிற்செந் தமிழ் வாணர்க் (கு)**
**அன்பாய் மகுடந்தனையளித்த**
**அண்ணல் வருக அடைந்தவர்க்கோர்**
**அன்பன் வருக நிதிவருக**

தென்னூர் கமலத் துறைமடந்தை
தினமே வளர்திண் புயவருக
செகத குருவாம் மெய்க்கனருள்
செல்வன் வருக வருகமட

மின்னூர்க் கனங்கன் ஆகிவளர்
வீரன் வருக மன்னரருள்
மிகவும் வளர வளர்ந்தோங்கும்
விசயன் வருக கவிஞோர்கள்

மன்னு எனவும் கொண்டாடும்
மன்னன் வருக வருகவே
மருவார் கமல வல்லியந்தார்
மார்பா வருக வருகவே!

அக்காலத்தில் வந்து பரிசில் விரும்பி நின்ற செந்தமிழ் வாணராகிய புலவர்க்குத் தான்புனைந்திருந்த மகுடத்தையே அன்போடு பரிசாக அளித்த பெருவண்மையுடைய அண்ணலே! வருக! அடைக்கலமென வந்தடைந்த இரவலர்களுக்கேயன்றிப் பகைமாறி வந்தவர்க்கட்கும் அன்பனே! வருக எல்லோருக்கும் சேமநிதியாக விளங்குபவனே! வருக. இனிய செந்தாமரைமேல் உறையும் திருமகள் நாள்நாளும் மகிழ்ந்துறையும் திண்ணிய தோள்களையுடையாய் வருக! உலக குருவாக விளங்கும் மெய்க்கபூபதியருளிய செல்வனே வருக! வருக! மடப்பம் பொருந்திய மின்னற் கொடிபோலும் சாயலுடைய மகளிர்க்கு மன்மதனாக விளங்கும் வீரனே வருக. மன்னராகிய மெய்க்கபூபதியின் கொடையருள் நாள் தோறும் மிகுந்து வளருமாறு வளர்ந்தோங்கும் வெற்றியுடையாய் வருக! செஞ்சொற் கவிஞர்கள் மன்னனாகக் கொண்டாடும் மன்னனே வருக! வருக! மணம் பொருந்திய தாமரை மலரின் அகவிதழால் அமைந்த மாலையணிந்துள்ள மார்பனே வருக வருகவே!

[பிரிதொன்றைக் கொடுப்பதற்குரிய வாய்ப்பும் சூழலும் இல்லாதபோது தன்னைவந்தடைந்த ஒரு தமிழ் புலவருக்கு மிக்க அன்போடு தன்மகுடத்தையே அளித்தவன் இவன் முன்னோர்களில ஒருவன் எனத்தெரிகின்றது. அவன் செயலை இவன் மீது ஏற்றிப்பாடப்பெற்றுளது. இதுமரபு. இவ்வரலாறு புலனாகவில்லை: ஒருகால் இவனே தன் மணிமுடியைக் கொடையாக வழங்கியிருத்தலும் கூடும். யாவரதாயினும் இச்செயல் வியந்து போற்றிப் பாராட்டற்குரியது. நிதி = சங்கநிதி பதுமநிதியாயவற்றை உணர்த்தி நின்றது. தென் = இனிமை. செகத்குருவென்று குறுநில மன்னருள் சிலர் பாராட்டப்பெறுகின்றனர் எக்கருத்தால் என்பது விளங்கவில்லை. மின்னார் = மகளிர். அநங்கன் = அங்கமில்லாதவன் என்னும் பொருளில் மன்மதனைக் குறிக்கும். இவன் வளர வளர அம்மகிழ்ச்சியால் இவன் தந்தையின் கொடையருளும் நாள் தோறும் வளர்ந்தது என்னும் கருத்து மகிழ்தற்குரியது: விசயன = அருச்சுனனுமாம். அருச்சுனன் அழகிலும் வீரத்திலும் சிறந்தவனாகலின்: மரு = மணம். அல்லி = அகஇதழ்: தார் = மாலை. மார்பா = விளி.]

— 0 —

தோற்றுவாய்

இப்பாடல் ஏழாவதாகிய அம்புலிப் பருவத்தைச் சேர்ந்தது. நற்றாய் அம்புலியை (நிலாவை)க்காட்டி இவனோடு ஆடவருக என அழைப்பது. அழைக்குங்கால் குழந்தையாகிய இவன் சிறப்பையும் அம்புலியின் சிறுமையையும் கூறிச் சாம, பேத தான, தண்டம் என்னும் நால்வகையுபாயத்தாலும் அழைக்க வேண்டுமென்பது மரபு. அம்மரபை ஒட்டி இப்பாடலும் அம்புலியின் குறைபாடுகளையும் பாட்டுடைத்தலைவன் நிறைகளையும் முறையாகக்கூறி விளக்குகின்றது

## அம்புலிப்பருவம்

[பன்னிருசீர் ஆசிரிய விருத்தம்]

226 மருவுமுன் மெய்யிற் களங்கமுண் டிவன்சொல்
வளமெய்க் களங்க மில்லான்
மன்னுமுயல் மெய்யிற் றரித்தவன் நீ, இவன்

வாய்த்தபுக ழேதரித்தோன்
இரவிலே ஒளியுடையன் நீ, இவன் பகலிலும்
இரவினும் ஒளிபடைததோன்
ஈரெண் கலைக்குரியன் நீ, இவன் கல்விசேர்
எண்ணெண் கலைக்குரியனே
குரைகடல் விடத்தொடு பிறந்தவன் நீ, அமுத
குணத்தொடு பிறந்தவனிவன்
கூறுமம் புலியே நீ இவன்எதிர்த் துப்பொரும்
குறுகலர்க் கே சிங்கமே
அருள் பரவும் ராசையம் பதிமெய்க்க பூபனுடன்
அம்புலீ! யாடவாவே
அய்ந்தாரு எனமருவும் மெய்க்கனருள்
மதலையுடன்
அம்புலீ ஆடவாவே

ஏ! அம்புலியே உன்மெய்யிற் (உடம்பில்) களங்க முண்டு இவன் சொல்வள மெய்யிற் (வாய்மையிற்) களங்க மில்லாதவன், மேலும் நிலைபெற்ற களங்கமாகிய முயலை மெய்யிற்றரித்தவன் நீ இவனோ களங்கமில்லாத வெண்மையான புகழையேதரித்துள்ளான் நீ இரவிலேமட்டும் ஒளியுடையவனாகின்றாய் இவன் பகல் இரவு ஆகிய எப்பொழுதும் ஒளியுடையவனாக உள்ளான், நீயோ ஒளி சேரும் பதினாறு கலைகளையுடையன் இவனோ உன்னைவிட நான்குமடங்குயர்ந்து கல்வி சேரும் அறுபத்துநான்கு கலைகளையுடையவனாக இருக்கின்றான், நீயோ ஆரவார மிக்க கடலிலே நஞ்சோடு பிறந்தவன். இவனோ அமிழ்த மாகிய குணத்தோடு பிறந்துள்ளான். மேலும் கூறு மிடத்து நீ அம்'புலி'யேயாவாய் இவனோ தன்னை எதிர்த்துப் போரிடவந்த பகைவர் அஞ்சிமடியவெல் சிங்கமே யாவான். ஆதலால் அருள் எங்கும் பரவிவிளங்கும் இராசையம்பதி வாழும் இந்த மெய்க்கபூபனுடன் விளையாடற்கு வருவாயாக! அம்புலியே. தேவதருக்களாகிய ஐந்துதருக்

களையொப்ப கொடைவளத்தால் பொருந்தி விளங்கும் மெய்க்கபூபதியருளிய மதலையாகிய இவனுடன் விளையாட வருவாயாக.

['மெய்' என்ற சொல்லை—உடம்பு, வாய்மைஎன இரு பொருளில் வைத்துக் களங்கமுண்மையும், இன்மையும் காட்டிய நயம் காண்க. முயல் = களங்கம். குறைகடல் = ஆர்ப்பரவம் உள்ள கடல். திருப்பாற்கடலை அமிழ்தத்தின்பொருட்டுக் கடைந்த போது நஞ்சுதோன்ற அதன்பின் சந்திரன் தோன்றினன் என்பது புராண வரலாறு. அம்புலி என்ற சொல்லை நயமாக 'புலி' யாக்கிய சிறப்பு சுவையுடையது. குறுகலர் = பகைவர். இனி நீ களங்கமுடையாய் முயலுடையாய் என்பவற்றைப் பேதமாகவும் இரவிலே ஒளியுடையாய் என்பதைச் சாமமாகவும், இவன் கல்வி சேர் எண்ணெண்கலையுடையான் அமுதகுணமுடையான் என்பவற்றைத் தானமாகவும் இவன் குறுகலர்க்குச் சிங்கமே எனபதைத் தண்டமாகவும் கொண்டு நால்வகையுபாயமும் தோன்றப் பாடியதாகக் கொள்ளலாம்' இவற்றை விரித்துரைக்கின் மிகுமாதலின் பொருத்திக்கொண்டு காண்க.]

—ooഴ്oo—

தோற்றுவாய்

முன் மொழிந்த பாக்கள் நிற்க இனிச் சிற்றில், சிறுபறை, சிறுதேர் என மூன்று பருவத்திற்குரிய பாடல்கள் வேண்டும் அவை ஏட்டில் காணப்பெறவில்லை. இவற்றின் இறுதியில் முற்றுப்பெறாத குறையுடைய பாடல் ஒன்று காணப்பெறுகிறது. அஃது எப்பருவத்திற்குரியதென்பது புலனாகவில்லை ஏட்டில் உள்ளவாறு அப்பாடலைக் கீழே காணலாம்.

[ குறைப்பாடல் ]

227. வரையே போன்றிலங்கும் என்போ
மருதோ சகடந் தானிதுவோ
மயில் போய அந்நாள் நெடுங்கானில்
வளருங்கல்லோ நெடுந்தெருவோ
தரையோ அரவின் சீரமிதுவோ
தழைக்குங் குருந்தோ..........................
..........................................................

[இப்பாடலை உற்று நோக்குங்கால் திருமாலின் அவதாரங்களில் அவர் பாதங்களால் நிகழ்த்திய அற்புதங்களுக்குக் காரணமாய பொருள்களே காணப்படுகின்றன ஆதலின் சிற்றில் சிதைத்தலாகிய எட்டாவது பருவத்திற்குரிய பாடலாக இருக்கும்போலும். மிக்கநயமும் சுவையும் பொருந்திய இப்பாடல் சிதைந்தது ஒரு பெருங்குறையேயாம்.]

---

தோற்றுவாய்

இது முதல் ஐந்து பாடல்கள் முத்தப்பபிள்ளை என்னும் முத்தப்பபூபதிமேல் பாடாணடிணை வாழ்த்தாகப் பாடப்பெற்றுள்ளன ஒவ்வொரு பாடலிலும் இராமாயணக் கதை நிகழ்ச்சியைச் சுருக்கமாகத் தொடர்ச்சியாகக் கூறி இராசையூரில் கோயில் கொண்டருளும் செண்டலங்காரராகிய அப்பெருமானுக்கு விண்ணப்பம் செய்து இத்தகு சிறப்புடைய முத்தப்பபூபதி இன்று காத்தருளே என வேண்டப்படுகிறது. இவ் ஐந்து பாடல்களாலும் இராமயனக்கதை முடிவுறுமையின் மேலும் சிலபாடல்கள் இருந்திருக்க வேண்டுமெனத் தெரிகிறது.

இப்பாடலில் இராமபிரான் அயோத்தியிற் பிறந்து பரசுராமன் ஆற்றலைப் பெறுமளவும் கூறிக், காத்தருள்வாயாக என வேண்டப்படுகிறது.

[பதினான்குசீர் ஆசிரிய விருத்தம்]

**228. சீர்வளர் அயோத்தி நன்னகர் பிறந்து**
**செயமுனி வேள்வியைக் காக்க**
**சீறுதா டகையை வதைத்தக லிகைதன்**
**திறம்பெறு சாபமெய்ந் நீக்கி**
**ஏர்வளர் சனகன் மகள்தனை மணந்து**
**வன்மைசேர் பரசுரா மன்றன்**
**எழில்பெறு ராசை செண்டலங்கார**

இயம்பும்விண் ணப்பமொன் றுளதால்
பார்வளர்......................பங்க ஞவனே
பற்றலர் முற்றுற வணங்கும்
பரதனைத் திருமால் தனைவளர்த் தருள்கூர்
பண்பனை யன்பர்மா னதனைக்
கார்வளர் காவின் கச்சசிரா சையில்வாழ்
கனன்றனை முத்தபூ பதிசொற்
காந்தன் முத்தப்ப மகிபனை யுனது
கருணையால் இனிதுகாத்தருளே!

எல்லாச் செல்வமும் மன்னிவளரும் அயோத்திமா நகரிற்பிறந்து பின் விசுவாமித்திர முனிவர் செய்வேள்வியைக் காப்பதற்காக ஏகி ஆங்கு எதிர்ப்பட்ட தாடகையை வதைத்து அகலிகையின் சாபம் நீக்கிக் கல்லுருநீங்க மெய்யுருவளித்துப்பின் மிதிலை சென்று சனகன் மகளாகிய சானகியை மணந்து வருங்கால் வலிமைசான்ற பரசுராமனை வென்று கீர்த்திமிகும், இராசையூரில் விளங்கும் செண்டலங்காரப் பெருமானே! உன்பால் வணங்கிச் சொல்லும் விண்ணப்பம் ஒன்றுளது. அஃதாவது பாரினைகண் புகழ்கொண்டு வளரும் ........ .... ஒப்பற்றவனும், பரதன் என்பவனோடு திருமால் என்பவனையும் வளர்த்து அருள்புரியும் பண்பினனும், அன்பர்களுக்குச் சிறந்தவனும், மேகங்கள் தங்கி நிலவும் பெரிய மரங்களையுடைய கச்சிராசை என்னும் பெருநகரில் வாழ்பவனும் பெருமைமிக்கவனும் முத்தபூபதி என்று எல்லாரும் விரும்பிப் போற்றத் திகழ்பவனுமான முத்தப்பமகிபனை உனது பேரருளால் இனிது காத்தருள்வாயாக.

[உரைத்தொடர்ச்சிக்காக இடையே சில சொற்கள் கூட்டி எழுதப்பட்டுள்ள. செயமுனி = விசுவாமித்திரர் — வேள்வி = யாகம். சாபமெய்ந் நீக்கி என்பதனை 'மெய்ச்சாபம் நீக்கி' என மாறுக. பார்வளர் என்பதன்பின் இரண்டுசீர்கள் சிதைந்துள் ளன. பற்றலர் = பகைவர். முற்றுற = யாவரும், 'பரதன்'

திருமால்' இருவரும் முத்தப்பூபதியின் மக்கள் எனத்தெரிகிறது: மானதன் = மேலானவன். கனன் = பெருமையுடையவன். இவன் ஊர் 'இராசை'யென்றும் "கச்சிராசையென்றும்" வழங்கும்போலும். செண்டலங்காரர் = இராசையூரில் விளங்கும் பெருமானின் திருநாமம் ]

—0—

தோற்றுவாய்

இப்பாடலுள் இராமன் திருமணத்திற்குப்பின் அயோத்தி வந்தடைந்து கைகேயின் வரங்களால் முடிதுறந்து கானகம் ஏகிச் சித்திரகூடத்தில் தங்கியிருக்குமளவுக்குக் கதை கூறப்பட்டுள்ளது. பாட்டுடைத்தலைவன் சிறப்புக்களும் கூறப்பட்டுள.

[ பதினன்குசீர் ஆசிரிய விருத்தம் ]

229. நன்னக ரயோத்தி தன்னில் வந்தடைந்து
நங்கைகை கேயியின் வரத்தால்
நண்புறுமிளவல் சீதையும் பிறகே
நடக்கவக் குகனையும் கண்டு
பன்னியங் கங்கை நதியையுங் கடந்து
பாரத்து வாசனைக் கண்டு
பண்புடன் சித்திர கூடம்வாழ் மன்னு
பகருமவிண் ணப்பமொன் றுளதால்
வன்னமார் முலைமின் னூர்கள்வா கனனை
வண்டமிழ்க் குதவுமா தருவை
மண்டலத் தவர்கொண்டாடுசற் குணனை
வளம்பெறு கச்சியா திபனை
தன்னன தனனு என்றளி பரவும்
தடம்பணை இராசைமுத் தப்பன்
தனயன்முத் தப்ப பூபதி தனையுன்
தயவினுல் இனிதுகாத் தருளே!

சீதாப் பிராட்டியை மணந்து பின் நல்ல நகரமாகிய அயோத்தியை அடைந்து சிற்றன்னையாகிய கைகேயியின் வரத்தாலே, தன்பால் அன்புசால் நண்புகொண்ட இளவல் இலக்குவனோடும் சீதையோடும் அவர்கள் தம்பின்னர் வரக் கங்கை வேடனாகிய குகனோடு நட்புப்பூண்டு அலைகளால் பல்வேறு இன்னிசைகளை எழுப்பும் கங்கையைக் கடந்து சென்று பாரத்துவாசமுனிவரைக்கண்டு சித்திரகூடப் பருவதச் சாரலில் வாழுகின்ற மன்னனே! பெருமாளே! யான் உன்பால் பகரும் விண்ணப்பம் ஒன்றுளது. அஃதியாதெனின் அழகுபொருந்திய தனபாரங்களையுடைய மின்போலும் மாதர்கள் தாங்கும் பெருமையுடையவனும், வளமிக்க தமிழையும் தமிழ்ப்புலவர்களையும் புரக்கும் கற்பகத்தருவை ஒப்பவனும், மக்களும் குறுநில மன்னர்களும் கொண்டாடும் நல்ல குணங்கள் சான்றவனும் தன்னன தனனா என வண்டுகள் ஆளத்தி எடுத்தியம்பும் வளமிக்க கச்சிராசையின் அரசனும் இராசை முத்தப்பன் பெற்ற அரும்பெறற்புதல்வனுமான முத்தப்பபூதியை உன் அளவற்ற கருணையினால் இனிது காத்தருள்வாயாக.

[இளவல் ஈண்டு இலக்குவனைக் குறித்தது. பிறகு = பின். பன்னியம் = பல்வேறு வாத்திய ஒலிகள். வன்னம் = அழகு. ஒப்பனையுமாம் — தன்னன தனனா = ஆளத்தி இசைக்குறிப்பு. அளி = வண்டு. பரசுதல் = பாடுதல். தடம்பணை = வளமிக்க பெரிய வயல்கள். இவன் தந்தை பெயரும் மூத்தப்பன் என்பது, முத்தப்பன் தனயன் முத்தப்பபூபதி என்ற அடிகளால் தெரிகிறது.]

தோற்றுவாய்

இப்பாடலும் அவ்வரசனைப்பற்றியதே இதனுள் சித்திர கூடத்தில் இருந்த இராமபிரானைப் பரதன் தன்பரிவாரங்களோடு வந்தழைத்தது முதல் மாரீசனை வதைக்கச் சென்றதுவரை கூறப்படுகிறது.

[ பதினான்குசீர் ஆசிரிய விருத்தம் ]

230 அருந்துணைப் பரதன் வரவவன் றனையும்
அனுப்பிவல் லரக்கிமூக் கரிந்து
ஆண்மைசேர் கரதூ டணரையும் வதைத்து
ஐயிரண் டாம்சிரத் தரசன்
பொருந்திமேல் விடுத்த மாயமா ரீசன்
பொற்பினைக் களையவன் றேகும்
புனிதனே ராசைச் செண்டலங் கார!
புகலும்விண் ணப்பமொன் றுளதால்
திருந்திய கமலத் திருவுடன் அபயம்
செழித்திடும் முல்லைமார் பகனைத்
திரமெனநினது பாதமர்ச் சனைசெய்
செல்வனைக் கல்வி மா முகிலை
துரந்தரீ கனைத்தென் கச்சிரா சையில்வாழ்
சுமுகனை முத்தபூ பதிசொல்
சுதனைமுத் தப்ப பூபதி தனையுன்
துணைவிழி சுரந்துகாத் தருளே !

அருந்துணையான தம்பி பரதன் தன்னை அயோத்திக்கு அழைப்பதற்காக வந்து வேண்ட அவனையும் சுற்றத்தையும் காரணங்கூறித் தன்பாதுகையைத் தந்து அனுப்பியபின் தன்மாயத்தால் வஞ்சிக்க வந்த சூர்பணகையை இளவலைக்கொண்டு அவள் மூக்கினைச் சேதிக்கச் செய்து அவளுக்காகப் பரிந்து போரிட வந்த கரன் தூடணன் இருவரையும் அழித்து தசக்கீரீவனாகிய இராவணன் கட்டளையால் மாயமானாக வந்த மாரீசனை அவன் வஞ்சனையோடு களைய அவனைத் துரத்திச்சென்ற புனிதனாகிய பெருமாளே! செண்டலங்கார! யான் நின்பால் விரும்பிக் கூறும் விண்ணப்பம் ஒன்றுளது. அஃதியாதெனின் விளங்கும் செந்தாமரை மலரில் வீற்றிருக்கும் செல்வமகளோடு விளங்கி யாவர்க்கும் அபயமளித்

துக் காக்கும் முல்லைமாலை திகழும் மார்பனும், இதுவே நிலையானதென நின்பாதம் அருச்சித்து மகிழுபவனும் நற்குணச் செல்வனும், கல்வி கேள்விகளால் நிறைந்த மழையை ஒப்பவனும், பெருவல்லவனும் தென்கச்சிராசையில் வாழும்மேலானவனும் முத்தபூபதியின் திருமகனுமான முத்தப்பபூபதியை உன் இருவிழிகளாலும் அருள் சுரந்து காத்தருள்வாயாக.

[இலக்குவனை இளவல் என்ற இவ் ஆசிரியர் பரதனை அருந்துணை என்று கூறுகிருர் இதன் சிறப்பு எண்ணியுணர்தல் வேண்டும். அரக்கி ஈண்டு சூர்பணகை. ஐயிரண்டாம் சிரத்தாசன் = பத்துத் தலைகளையுடைய இராவணன். திரம் = ஸ்திரம் = நிலையானது ‡த்தியம். இவன் கல்விச் சிறப்புநோக்கி மாமுகில் என்ருர். மாமுகில் = கார்மேகம். துரந்தரீகன = வல்லபன்: பேராற்றலுடையான் என்பது கருத்து: சுமுகன் = செவ்வியான். சுதன் = மகன். சுரத்தல் = அருளால் சுரத்தல்.]

---

தோற்றுவாய்

இதுவும் அவ்வள்ளலைப்பற்றியதே. இதனுள் மாரீசனின் வஞ்சகக் குரல் கேட்டு இலக்குவன் சென்றது முதல் சீதை இராவணனல் கவர்ந்து செல்லப்பட்டாளெனச் சடாயு கூறி வீடுபெற்றதுவரை கூறப்படுகின்றது.

[பதினுங்குசீர் ஆசிரிய விருத்தம்]

231. ஆண்டையின் மாயக் குரல்தனை வினவி
அவ்வடி இளவல்பின் தொடர
அரக்கன்வந் தினிய திருவினைக் கொடுபோய்
அசோகமா வனத்திடை யமைக்க
மீண்டுவந் தவனைக் காண்கலா அளவில்
மெய்வனத் தேகவே சடாயு
விளம்பவே அருள்செய் செண்டலங் கார
விளம்புவிண் ணப்பமொன் றுளதால்

**வேண்டிய பரிமேல் தமிழ்தனக் களித்து**
**மேன்மைசேர் மூவெழுவள்ளல்**
**மேலுமோர் வள்ளல் எனவளர் முகிலை**
**விதரண சரசசற் குணனைத்**

**தாண்டிய பரிமேல் நகுலனைக் கச்சி**
**தழைத்திடும் ராசைமுத் தப்பன்**
**தனயன்முத்தப்ப பூபதி தனையுன்**
**தயவினு லினிதுகாத் தருளே!**

இராமனுடைய கணையால் மாரீசன் வீழ்ந்தபொழுது எழுந்த மாயக்குரலைச் சீதை கேட்டு வருந்தி இளவலை அனுப்ப அவ்விடத்தே இலக்குவன் சென்றபோது அரக்கனாகிய இராவணன் வந்து இராமனுக்கினியாளான சீதையைக் கவர்ந்து கொண்டுபோய் இலங்கையில் அசோகவனத்திடையே காவல் வைத்தான். இங்கே இராமனும் இலக்குவனும் மீண்டு வந்து சானகியைப் பர்ணசாலையில் காணாது வருந்தித்தேடிச் சென்றபோது சடாயு நிகழ்ந்தவையாவும் கூறி இறக்க அவனுக்குத் தன் தந்தையொப்ப ஈமச்சடங்குயாவும் செய்தருள் புரிந்த செண்டலங்காரப் பெருமாளே! யான் நின்பால் விளம்பும் விண்ணப்ப மொன்றுளது. அஃதியாதெனின் தமிழ்வாணருக்கு வேண்டிய பரிசில் அளித்து முன்னர் இருந்த, தலை, யிடை, கடை வள்ளலாகிய இருபத்தொரு வரோடு மேலும் ஓர் வள்ளல் என உலகம் போற்றும் வகையில் திகழும் முகில் போன்றவனும், நல்லறிவும் எளிமையும் வாய்ந்த பண்புடையவனும், விரைந்துசெல்லும் பரிமா இலக்கணக் கல்வியில் நகுலனை ஒப்பவனும், கச்சியூர் தழைக்க விளங்கும் இராசை முத்தப்பன் தனயனுமான முத்தப்பபூபதிதனை யுன்னுடைய ஒப்பற்ற கருணையாலினிது காத்தருள்வாயாக!

[ஆண்டை = அவ்விடத்து (நிகழ்ந்த நிகழ்ச்சியைச் சுட்டியது) மாயக்குரல் — 'சீதாலட்சுமணா' என்ற குரல் — வினவுதல் = கேட்டல். அவ்வடி = அந்நிலை. அரக்கன் = இராவணன். திரு = சீதை. சடாயு இராவணனை எதிர்த்துப் போராடியது முதல் யாவும் "சடாயுவிளம்பலே" என்ற சொற்களில் அடக்கிக் கூறியுள்ளார். 'மூவெழுவள்ளல்' வரலாறுகளை விரிந்த நூலிற் காண்க. விதரணம் = ஒப்புரவு சான்ற அறிவு. சரசம் = எளிமையை உணர்த்தும்: நகுலன் அசுவசாத்திரம் வல்லவனாதலின் பரிமேல் நகுலன் என இவனைச் சிறப்பித்தார்: தயவு = பேரன்பு.]

---

தோற்றுவாய்

இப்பாடலும் முத்தப்பபூபதியைப் பற்றியதே. இதனுள் இராமபிரான் கானகத்துள் எதிர்த்துவந்தவிராத, கவந்தர்களை அழித்ததுமுதல் சேதுபந்தனம் செய்தது வரை கூறப்படுகிறது.

[பன்னிருசீர் ஆசிரிய விருத்தம்]

232. விராதனைக் கவந்தன் றன்னையுங் கடிந்து
விமலராம் அனுமசுக்கிரீபர்
மேவிடக்கண்டு துந்துமி யுதைத்து
மேன்மையாம் மராமரம் துளைத்துச்
சராசல முகிலைத் துரா துரை மதிக்கும்
கனகசிந் தாமணி எனவே
காசினி புரக்கும் போசரா சன்னைக்
கடவுளர் அமிர்தவா சகனை
சராசரம் புகழி ராசையா தீபனைத்
தருமன்முத் தப்பபூ பதிசொல்
தனையன்முத்தப்ப பூபதி தனையுன்
தயவினால் இனிதுகாத்தருளே!

விராதனையும் கவந்தனையும் அழித்துக் குற்றமற்றவர்களாகிய அனுமனும் சுக்ரீவனும் தன்னுடைய அருள் வேண்டிப் பொருந்தியமை கருதித், துந்துமி என ஒலி

யுண்டாக்கி வலிமைசான்ற ஏழு மராமரங்களையும் ஒரு கணையாலே துளைத்துப்பின் சூரியன் மகனாகிய வாலியைக் கொன்று சுக்ரீவனுக்கு முடிசூட்டிப்பின் பிராட்டியைத் தேடிக்கண்டுவர மாருதியைத் தூதுவனாகப் போகச்செய்து சீதை, இலங்கையிலிருப்பதை யறிந்து கடலைக் கடக்க அணை எடுப்பதற்காக வாருதி சேர்ந்த தூய்மையானவனே! இராசையூரில் விளங்கும் செண்டலங்காரப் பெருமாளே! உன்னை வேண்டித் துதித்து வேண்டும் விண்ணப்பம் ஒன்று உளது. அஃதாவது கையாகிய மலைபிடத்து முகிலானவனை, மன்னாதி மன்னர்கள் மதிக்கும் கனகசிந்தாமணி என இவ்வுலகைப் புரக்கும் போசராசனைப்போன்றவனை, கடவுளுணர்வு ததும்பும் அமிர்தம் போன்ற வாய்மொழியாளனை உலகத்து உயிர்கள் யாவும் புகழும் இராசையூர் மன்னனை, தருமனையொத்த முத்தப்பபூபதியின் புகழ் மேவும் தனயனாகிய முத்தப்ப பூபதியை உன்பேரருளால் இனிது காத்தருள்வாயாக!

[விமலர்=குற்றமற்றவர், துந்துமி=வில்நாண். ஒலி துந்துபி என்னும் அரக்கனைக்கொன்ற வாலியை வதைத்து எனவும வலிந்து பொருள் காணலாம். சுராரிபன் = சூரியன் கர+அசல+முகில்=முகில் போலும் வள்ளன்மையுடைய கைகளையுடையவன் என்பார் இவ்வாறு உருவகம் செய்தார். துரை=அரசு. கனகம்= பொன் காசினி=உலகம் போசராசன = இன்பக்கலையில் சிறந்தவன் கலாவிநோதன் ஆதலின் அவனாக உபசரித்தார். கடவுளர் அமிர்த வாசகம் வேதாகமங்கள்: தேவார திவ்யப்பிரபந்தகளுமாம்.

–0–

தோற்றுவாய்

இப்பாடல் அம்பலவாணன் என்னும் ஒரு பெருமகனைக்கந்தமாபுரியில் விளங்கும் முருகக் கடவுள்காத்தருள் செய்க என வேண்டி ஒரு புலவர் பாடியதாக அமைந்துளது.

[ பதினன்குசீர் ஆசிரிய விருத்தம் ]

233\. அம்பிகா பதிக்கே பிரணவம் தன்னை
அன்றுப தேசமேயளித்த
அண்ணலே மலையாள் தனக்கரு மருந்தே
ஆனைமா மகள்குறமக ட்கும்
சம்பிரம கண்டா எனதுயிர்த் துணையே
சதுர்பெறும் கந்தமா புரிவாழ்
தானுவே முத்து வேலவா அடியேன்
சாற்றும்விண் ணப்பமொன் றுளதால்
பம்புவா ரிதிசூழ் உலகெலாம் பரிக்கும்
பாரின்வலானைவென் றவனைப்
பரிவுற உமையாள் சிலம்பினிற் பிறந்த
பாலனைச் சீலமா னதனை
இம்பர்மா நிதியைத் திருவருள் தனக்கோர்
இருமைமா மதலையை வளங்கூர்
இராசனம் பலவா ணனையுன தருளால்
எழில்பெற மகிழ்ந்துகாத் தருளே!

உமையாளை உடம்பிலொரு கூறுகக் கொண்ட இறைவனுக்கே பிரணவ மந்திரத்தின் பொருளை உபதேசித்தளித்த அண்ணலே! பார்வதிதேவிக்கு அரு மருந்தாக விளங்குபவனே!, யானை மாமகளாகிய தெய்வ யானைக்கும் குறமகளாகிய வள்ளிக்கும் மணமகனுக விளங்குபவனே! என் உயிர்க்குயிராக விளங்கும் துணைவனே! கந்தமாபுரியில் கோயில் கொண்டு விளங்கும் வள்ளலே! முத்துவேலவா! அடியேனுகிய யான் உன்னிடத்தில் சாற்றும் விண்ணப்பம் ஒன்று உளது அதனைக் கேட்பாயாக! அஃதியாதெனின் ஒங்கிவிளங்கும் கடல் சூழ்ந்த இவ்வுலகம முழுதும் புரந்துகாத்தளிப்பவனும், இவ்வுலகப் பகைவனுகிய 'வலான்' என்பவனை வென்றவனும், ஒழுக்கத்தால் உயர்ந்தவனும் உயர்ந்த

மானமுடையவனும், இவ்வுலகத்தார்க்கு நிதியை ஒப்பவனும் திருவருள்நாதன் என்னும் வள்ளலுக்கு இருமையின்பமும் அளிக்கப் பிறந்த மகனானவனும் ஆகிய இராசன் அம்பலவாணனை உனது பேரருளால் மகிழ்ந்து காத்தருள்புரிவாயாக.

[ அண்ணல்=தலைவன் அருமருந்து=அமிர்தம். சம்பிரமம்=கலியாணம் சதுர்=ஞானம். கந்தபுரி, கந்தமாபுரி என்னும் பெயர்கள் வைத்தீசுவரன்கோவிலில்உள்ள முருகத்தசத்திற்குப் பெயராக விளங்கும். பும்புதல்=உயர்ந்து பொங்குதல் வாரிதி=கடல் பரித்தல்=தாங்குதல் அடுத்து வரும் பாடல்களில் பார்ப்பதிதன் சிலம்பு, உமையாள் சிலம்பு எனவருதலின் உமையின் பெயரோடு தொடர்புடைய ஒரு மலைநாட்டில் இவன் பிறந்தானுதல் வேண்டும். திருவருள் என்பது இவன் தந்தையின் பெயரென்பது அடுத்தபாடலில் வரும் திருவனுதன் என்ற பெயரால் புலனாகின்றது. மதலை=மகன் ]

—0—

தோற்றுவாய்

இப்பாடலும் அவனைப்பற்றியதே, இதனுள் பழனியங்கிரியில் விளங்கும் முருகனிடத்தில் வேண்டுகோள் விடுத்தலைக் காணலாம்.

[ பதினான்குசீர் ஆசிரிய விருத்தம் ]

234. அருமறைப் பொருளே கறைமிடற் றவற்கோர்
அன்பனே பம்புவா ரிதியில்
அன்றுவேல் விடுத்த மன்றலம் புயனே
அரக்கரைத் துரக்குமா னதனே
குருபரா குமரா பழனியங் கிரிவாழ்
குருசிலே வரிசைமா தவனே
குமரனே சுப்பிர மணியனே அடியேன்
கூறும்விண் ணப்பமொன் றுளதால்

**தருவளர் கரனே வீரகா ரணனே**
**மால்நிகர் திருவளு தனுக்கோர்**
**மதலையை அம்பல வாணனே யுனது**
**மனமகிழ்ந் தினிதுகாத் தருளே!**

வேதங்களுக்குப் பொருளாக விளங்குபவனே! கறைமிடற்றண்ணலுக்கு ஒப்பற்ற அன்பு மகனே! பொங்குங்கடல் சுவறுமாறு அற்றைநாளில் வேலெறிந்த, மலர்மாலை விளங்கும் தோளையுடையவனே! பதுமன் முதலான அசுரர்களை வென்று விளங்கும் வீரனே! குருபரனே! குமரனே! பழனிமலையில் விளங்கும் செவ்வேளே! உயர்ந்த மாதவனே! குமரனே! சுப்பிரமணியனாகிய கடவுளே! அடியேன் உன்மாட்டு விடுக்கும் ஒரு விண்ணப்பம் ஒன்றுளது அஃதாவது கற்பகத்தருப் போன்ற கையை உடையவனும், வீர நாராயணனை யொப்பவனும், தனது பரந்த திருவடி ஓசையால் எல்லோர்க்கும் நலம்புரிபவனும் தன்னையே (வீரத்தாலும் ஒழுக்கத்தாலும்) காத்துக் கொள்பவனும் மணமிக்க மாலைகளையணிந்த தோளையுடையவனும், வலானை வென்றவனும், திருமாலையொத்த திருவளுதனுக்கு ஓர் ஒப்பற்ற மகனாக விளங்குபவனுமாகிய அம்பலவாணனை உனது மனமகிழ்ந்து இனிது காத்தருள்வாயாக!

[ கறைமிடறு = நீலகண்டம் உக்கிரகுமார பாண்டியனாகத் தோன்றிக்கடல் சுவறவேல் விட்டவன் முருகனாதலின் "அன்று வேல் விடுத்தமன்றலம் புயனே" என்றார். மன்றல் = மணம் மானதன்=வீரன் கிரி=மலை குருசில்=திறமுடையவன் (செவ்வேள்) தரு=கற்பகம் வளர்த்தல் = ஒப்புப்பொருட்டாய் நின்றது. மரு=நறுமனம் 'வலான்' என்பவன் இவனுடைய குலப்பகைவன் எனத்தெரிகின்றது. 'திருவளுதன்' என்பதே பெயரோ திருவருள் நாதன் என்பதன் மரூவோ, விளங்கவில்லை ]

—

தோற்றுவாய்

இப்பாடல் இராசகோபாலன் என்னும் பெயரையுடைய ஒரு பெருமகனை பழனியங்கடவுளை நோக்கிக் காத்தருள்க என வேண்டுவதாக அமைந்துளது இதனிறுதியில் இவன் மகன், வயித்தியநாதன் ஆறுமுகத்தவன் ஆகிய இவர்களையும் காத்தருள்க என முடிகின்றது. பின் இருவரும் இவன்உடன் பிறந்தார்களாகலாம் எனத்தோன்றுகிறது.

[பதினறுசீர் ஆசிரிய விருத்தம்]

235. அரவணைத் துயிலும் மால்திரு மருகா
அம்பிகா பதிதரு குமரா
அரியமா மயிலைப் பரியெனப் படைத்த
அத்தனே சுத்தவீரியனே
பரவும்நல் லெழில்மான் வள்ளிதெய்வானைப்
பண்புபெற் றினிதுறை கணவா
பழனியம் பதிவாழ் சுப்பிர மணியனே
பகரும்விண் ணப்பமொன் றுளதால்
கருணைமா முகிலை வலானைவென் றவனை
காளியைக் கைப்பிடித் தவனை
கன்னிபார்ப் பதிதன் சிலம்பினிற் பிறந்த
காரிசெங் குந்தையா திபனை
திருவளர் புயனை இராசகோபாலன்
செல்வனை வயித்திய ஞதனை
செய்யவேள் ஆறு முகத்தவன் தன்னை
திருவுளம் மகிழ்ந்துகாத் தருளே.

பாம்பணையின்மேல் துயில் கொள்ளும் திருமாலுக்கு மருகனே! அம்பிகாபதியாகிய சிவபெருமான் ஈன்ற மகனே! ஒப்பற்ற மயிலையே ஊர்ந்துசெல்லும் பரியாகக் கொண்ட அத்தனே! தூய வீரமுள்ளவனே! வணங்கத் தக்க நல்ல அழகையுடைய மான்போன்றவளாகிய வள்ளியையும் தெய்வ யானையையும் பண்போடு பெற்று இனிது விளங்கும் சுப்பிரமணியக் கடவுளே யான் கூறும் விண்ணப்பம் ஒன்றுளது; அஃதாவது, கருணை

யோடும் பெய்யும் கார்முகில் போன்றவனும் வலானை வென்றவனும் காளியென்னும் பெருமாட்டியை மணந்தவனும் கன்னி பார்வதியின் சிலம்பிற் பிறந்தவனும் காரி செங்குந்தைக்கு அதிபனும் திருமகள் விளங்கும் புயத்தையுடையவனும் ஆன இராசகோபாலனையும் அவன் செல்வனையும் வயித்தியநாதனையும் செவ்வேளாகிய ஆறுமுகத்தவனையும் திருவுளமகிழ்ந்து இனிதுகாத்தருள்வாயாக!

[ காளியைக் கைப்பிடித்த என்பதனால் காளி இவன் மனைவி எனத் தெரிகின்றது. காரி=காரணத்தையுடையவன். செங்குந்தை என்பது இவனுடைய ஊர் எனத்தெரிகின்றது. 'இராசகோபாலன் செல்வன்' என்பது இராசகோபாலனாகிய செல்வனென்றுமாம் ]

—0—

தோற்றுவாய்

இப்பாடல் தானப்பன் என்னும் பெருமகனை, சிவபெருமான் காத்தருள்புரிகவென வேண்டிக்கொள்வதாக அமைந்துளது. மூன்றாமடியிற் சில சீர்கள் சிதைந்துள்ளன.

[ பதினான்குசீர் ஆசிரிய விருத்தம் ]

**236. சங்கரா சிவனே அரவபூ டணனே**
**தளவநீ றணியுமே னியனே**
**சதுர்பெறக் காளி யுடனம் பலத்தில்**
**தாண்டவ மாடிய பரனே**
**துங்கமா தவர்சூழ் பரம்பையம் பதிவாழ்**
**சோதிசேர் பச்சைநா யகியார்**
**தோளிடம் மருவும் பாந்தள்நாயகனே**
**துதிக்கும்விண் ணப்பமொன் றுளதால்**
**மங்களா கரனே காளியைக் கைக்கொள்**
..............................................................
..............................................................
..............................................................

**துங்கமா மகனே குமரநற் றுணையை**
**தூயசெங் குந்தையா தீபனே**
**சுமுகதா னப்ப மகிபனே உனது**
**துணைவிழி மலர்ந்துகாத் தருளே!**

சங்கரனே! சிவபெருமானே! நாகங்களை அணிகலனாகப் பூண்டவனே! வெண்மையான திருநீற்றையணியும் மேனியையுடையவனே சதுரப்பாடு தோன்ற மாகாளியுடன் அம்பலத்தில் தாண்டவமாடிய பெருமானே! பரம்பொருளே! மேலான தவமுனிவர்கள் வாழும் 'பரம்பை' என்னும் பதியில் விளங்கும் பேரொளி பொருந்திய பச்சைநாயகியார் தோளின் இடப்பாகத்தைப் பொருந்திமருவும் நாகநாயகனே! உன்னை வணங்கிவேண்டும் விண்ணப்பமொன்றுண்டு; அஃதாவது மங்கலக்கடலாக விளங்குபவனும்.................. ....குமரனின் துணையாக விளங்குபவனும் தூய செங்குந்தை என்னும் ஊருக்கு அதிபனும் ஆன சுமுகன் தானப்ப மன்னனை உனது இணை விழிகள் மலர்ந்து காத்தருள்புரிவாயாக!

[அரவம் = நாகப்பாம்பு பூடணம் = அணி தவணம் = வெண்மை சதுர் = நாட்டியமுமாம் துங்கம் = சிறப்பு பரம்பை என்பது பரம்பூர் என்னும் ஊர் எனத்தெரிகிறது. பாந்தள் = பாம்பு]

—0—

தோற்றுவாய்

இப்பாடல் மங்கைபாகன் என்னும் ஒரு பெருமகனைச் சிவபெருமான் காத்தருள்புரிக என வேண்டிக் கொள்வதாக அமைந்துளது.

[ பதினான்குசீர் ஆசிரிய விருத்தம் ]

237. **வெண்பிறை யறுகு கூவிளை யெருக்கு**
**முடிபுனை சடிலநா யகனே**
**வெம்மதக் கரியை உரித்தநா யகனே**
**வேதமா மறைக்குநா யகனே!**

**பண்புசேர் பரம்பைப் பதிவளம் சுரக்கும்**
**பச்சைநா யகியிடத் துறையும்**
**பரமனே நாக வணியனே அடியேன்**
**பகரும்விண் ணப்பமொன் றுளதால்**
**மண்புகழ் குலஞ்சேர் வீரசெங் குந்த**
**வங்கிசோ தையனே (பண்பினுல்)**
**வருவல னென்னும் வலானைவென் றவனை**
**வலலமைக் கல்விமா னதனை**
**திண்புகழ் சேரும் அரியர புத்திரன்**
**செல்வனை (திக்கிலார்) துணையை**
**திருமலி நல்ல மங்கைபா கனையுன்**
**திருவுளம் மகிழ்ந்துகாத் தருளே!**

வெண்மை மிக்க பிறைமதியோடு அறுகம்புல்லும் கூவிளை மலரும் எருக்க மலரும் முடியின்கண் விளங்கும் சடாமகுடத்தையுடைய நாயகனே! கயமுகாசுரனாகிய மதம் பொருந்திய யானையைக் கொன்று அதன்தோலை உரித்த நாயகனே! வேதமென்னும் உயர்ந்த மறைகளின் தலைவனே! பண்புடைய சான்றோர் வாழும் பரம்பைஎன்னும் பதிவளம் சுரத்தற்குக் காரணமாகி விளங்கும் பச்சை நாயகியின் இடப்பாகத்தே ஓருருவாய் விளங்கும் பரமனே! பாம்புகளை அணியாகப் புனைந்து விளங்குபவனே! அடியேன் பகரும் வேண்டுகோள் ஒன்றுளது அதனைக்கேட்டருள் புரிவாயாக. இவ்வுலகோர் புகழும் ஒப்பற்ற குலத்துள்ளே வீரசெங்குந்தர் மரபிலே தோன்றியவனும் பகையாளனாகிய வலான் என்பவனை வென்றவனும் திண்மையும் உரனும் சான்ற கல்வியிற்சிறந்தவனும் வலியபுகழ்மிக்க 'அரியரபுத்திரன்' என்பவனின் அருமைச்செல்வனும் (திக்கற்றவர்களின்) துணைவனுமான திருமலிந்து விளங்கும் நன்மை சான்ற மங்கைபாகனை உன்திருவுளம் மகிழ்ந்து காத்தருள் புரிவாயாக.

[சடிலம்=சடாமுடி 'பரம்பை' மங்கைபங்கனின் ஊர்போலும் பச்சைநாயகி = உமாதேவி. வங்கிசம் = பரம்பரை ]

—0—

இப்பாடல் முன்னைய பாடலில் வந்த மங்கை பங்கனையோ அன்றி அவன் குலத்தவனையோ வாழ்த்திப் பாடப் பெற்றதாகத் தெரிகிறது பாடல் இடையே சிதைந்துள்ளமையால் தெளிவாகவில்லை. தொடர்சசி கருதி வெளியிடப்பெறுகிறது.

[பதினொன்சீர் ஆசிரிய விருத்தம்]

238. காரணப் பொருளே ஆதிமா லயனும்
காதலாற் றேடியுங் காணு
கருணையங் கடலே உமையிடத் தமைந்த
கங்கணு ... ....கரப்பிரபுவே
சீரணி ராசைப் பதியில்வீற் றிருக்கும்
தேவனே என்னையாள் பரனே
செயங்கொண்ட நாதா நின்னடிக்கடியேன்
செப்பும் விண்ணப்பமொன் றுளதால்
போரணி முருகன் துணையென நினது
பொற்பதத் திலுதித் தவனை
பூபனே .... தரச ...... புகழ்பெருகுத்
....... ........ .. .... துணையை
தாரணி வல்லான் தனைவெலக் காளி
தன்னையே கைப்பிடித் தவனை
ச...ரிய .... ததவன் தன்னையுன்
தயவினு லினிது காத்தருளே!

[இராசையூரில் விளங்கும் சிவபெருமானை வேண்டுவதாக அமைந்துளது இப்பாடல், முருகன் துணை என்றது வீரபத்திரக் கடவுளைக் குறிக்கும் எனத் தெரிகிறது. எனவே இவன் பெயர் வீரப்பன் எனத் தெரிகிறது. இஃது அடுத்த பாடலால் ஓரளவு தலனுகிறது. இப்பாட்டுடைத் தலைவன் மனைவியின் பெயர் 'காளி' எனப் புலப்படுகிறது. வலானை வெல்லக் காளியைக் கைபிடித்தவன் என்பது நயமானதாகும்.]

தோற்றுவாய்

இப்பாடல் முதற் பாடலிற் கூறப்பெற்றுள்ள வீரப்பன் என்பானின் மகன் வீரப்ப பூபதியைப் பற்றியதாகும். இவ்வள்ளலைக் காத்தருள் புரிகவென முருகப் பெருமானை வேண்டுகிறார் புலவர்.

[பதினான்குசீர் ஆசிரிய விருத்தம்]

239. சங்கமா முதல்வன் நற்கீரன் தனக்காச்
சடுதியில் வந்துகாத் தவனே !
தருக்குமாங் கனிக்காப் பொருக்கெனப் பொருப்பைச்
சடுதியிற் சுற்றிவந் தவனே
மங்கைதெய் வானை வள்ளிபங் காளா
மயில்வா சாவணோற் பவனே
மானவா முத்து வேலவா அடியேன்
வழுத்தும் விண் ணப்பமொன் றுளதால்
தங்குமா ... னியைச் சிலம்பினி லுத்த
தருமனை வீரநா ரணனூர்
தங்குல முகிலை வலானையென் றவனைச்
சதுரனைக் காளிகை பிடித்த
துங்கசெங் குந்தை யாளன் வீரப்பன்
சுதனைவீ ரப்பூ பதியை
சொல்லிய மகவும் செல்வமும் வயதும்
சுரக்கநீ மகிழ்ந்துகாத் தருளே

கடைச் சங்கப் புலவர்களின் ஒப்பற்ற தலைவனாகிய நக்கீரன் தன் பிழையுணர்ந்து வேண்டி யழைத்த போது மிகவிரைந்து வந்து (அவனையும் உடனிருந்த புலவர்களையும் பூதம் உண்ணாமல்) காத்தருள் செய்தவனே! நாரதன் அளிக்கும் மாங்கனியின் பொருட்டு 'பொருக்' கென எழுந்து வெள்ளிமலையோடு கூட

மூவுலகத்தையும் மிகவிரைந்து சுற்றி வந்தவனே! மங்கை தேவயானைக்கும் குறமகள் வள்ளிக்கும் கணவனாக விளங்குபவனே! மயில் வாகனனே! சரவணப் பொய்கை நீரில் உதித்தவனே! சிறந்தவனே! முத்து வேலவா! அடியேன் நின்பால் கொள்ளும் விண்ணப்ப மொன்றுண்டு அதனைக் கேட்பாயாக! நிலைபெற்ற மானத்தையுடையவனும் சிலம்பினில் தோன்றியவனும் அறத்தாறு ஒழுகுபவனும் ஆன வீர நாரணனின் குலத்திலே தோன்றிய மழையை ஒப்பவனும் வலானை வென்றவனும் நல்லறிவுடையவனும் 'காளி' என்னும் நங்கையை மணந்தவனும் செங்குந்தர் மரபிலுயர்ந்தவனுமாகிய வீரப்பனின் அரிய புதல்வனாகிய வீரப்ப பூபதிக்கு புகழ் மிக்க மகப்பேறும் செல்வமும் நீண்டவாணாளும் பெருக அகமகிழ்ந்து இனிது காத்தருள் புரிவாயாக.

[சங்கம் = கடைச்சங்கம். நக்கீரன் = கடைச் சங்கப்புலவர் தலைவன்: சடுதி 'விரைவு' என்னும் பொருள் தரும் உருதுச் சொல்லின் திரிபு. தருக்கு = செருக்கு. வனஉற்பவன் = வனோற்பவன் வனம் = நீர் ஈண்டு சரவணப் பொய்கையைக் குறித்தது. மானவன் = மேவானவன். சிலம்பு = ஓர் இடப்பெயர். முன்னைய பாடல்களில் வந்துளது. சதுரன் = சதுரப் பாடுடையவன். சுதன் = மகன். இதனுள் வீரநாரணன் — வீரப்பன் — வீரப்ப பூபதி என ஒருவாறு பரம்பரை கூறப்பட்டுள்ளது காணலாம்.]

---

தோற்றுவாய்

இப்பாடலும் முன்னவை போலச் செங்குந்தர் மரபில் வந்த 'சிதம்பரன்' என்னும் ஒரு வள்ளலை முருகப் பெருமான் காத்தருள்க எனப்பாடப் பெற்றதாகும். இதனுள் இவன் முன்னோர்களுள் ஒட்டக் கூத்தரும் ஒருவராகக் காட்டப் பெற்றுளது.

[பதினான்குசீர் ஆசிரிய விருத்தம்]

240. ஆதியே அருளே சோதியே சுடரே
அத்தனே நித்தனத் துவனே
அருமறைப் பொருளே ஐங்கரன் துணையே
ஆனைமா மகட்புணர்ந் தவனே
பூதலம் மதிக்கும் பழநியங் கிரிவாழ்
புண்ணியா என்னையாள் பவனே
புனிதனே முத்து வேலவா அடியேன்
புகலும்விண் ணப்பமொன் றுளதால்
கோதிலா துமையாள் சிலம்பினில் உதித்த
குரிசில் வலானை வென்றவனே
குலத்தமிழ் ஒட்டக் கூத்தர்வங் கிசனே
குலவுசெங் குந்தையா திபனே
மாதர்மோகனனே சோழகர் ஆண்டி
மதலையை ராமபூபதிதன்
மகிழ்துணை எனவாழ் சிதம்பரம் தனையுன்
மனமகிழ்ந் தினிதுகாத் தருளே

பொருள்களுக்கெல்லாம் முதற்காரணமாக இருப்பவனே! அருள் உருவாக விளங்குபவனே! ஒளியே பொருளாக விளங்குபவனே! உணர்தற்கரிய வேதப் பொருளாய் இருப்பவனே! ஐந்து கரத்தையுடைய விநாயகக் கடவுளுக்குத் துணையானவனே! தேவயானையாம் தேவியை மணந்தவனே! உலகெலாம் போற்றி வணங்கும் பழனிமா மலையின் மேல் உயிர்கள் உய்ய வாழும் புண்ணியனே! என்னை ஆட்கொண்டு அருள் புரிபவனே! தூயவனே! முத்து வேலவா! உன் அடியவனாகிய யான் விரும்பிக் கூறும் வேண்டுகோள் ஒன்றுளது அதனைக் கேட்பாயாக! குற்றமில்லாமல் உமையாளின் பெயர் சான்ற மலையினிடத்தே தோன்றிய குரிசிலும்,வலானை வென்றவனும் உயர்ந்த தமிழ்ப்

பெரியோனாகிய ஒட்டக்கூத்தர் மரபில் தோன்றிய வனும், விளங்குகின்ற செங்குந்தையூரின் தலைமகனும் பெண்டிர் மோகித்து விரும்பப்படுபவனும், சோழகர் ஆண்டி எனப்பெறும் வள்ளலின் மகனும் இராமபூபதிப் பெரியோன் மகிழும் துணையானவனுமாகிய சிதம்பரம் என்னும் குரிசிலை உன்மனமகிழ்ந்து அவன் வாழ் வினிது ஓங்க அருள் செய்து காப்பாயாக'

[ஆதி = முதற்பொருள். "அத்தன்" தந்தை என்றுமாம் அர்த்தம் = பொருள். அர்த்தன் அத்தன என மருவி வழங்கும் ஐங்கரன் = விநாயகன். துணை = உடன் பிறந்த இளவல் முருகனை ஐங்கரன் துணை என்றதற்கேற்ப இப்பாட்டுடைத் தலைவனை இராமபூபதியின் துணை என்று விளக்கிய நயம் போற்றத்தக்கது. ஆனைமாமகள் = தெய்வயானை. கிரி = மலை முத்துவேலன் என்பது அவ்வூர் முருகக் கடவுளின் திருநாமம் போலும். புகலுதல் = விரும்பிக் கூறுதல். "உமையாள் சிலம்பு' 'வலான்' இவை முன்னும் வந்துள. 'சோழகாண்டி,' என்பது இவன் தந்தையின் பெயர் போலும். இராம பூபதிஉடன் பிறந்த தமையன் போலும். அடுத்த பாடலில் இவன் உடன் பிறந்த கலிவிராயன் என்பவனை இவன் இளவவாக கூறுகின்றமையயின் இராமபூபதி தமையன் எனக்கொள்ள இடந் தருகின்றது.]

---

தோற்றுவாய்

இப்பாடல் முற்செய்யுளிற் கண்ட சிதம்பரம் என்னும் வள்ளலுக்குத் துணையாகப் பிறந்து விளங்கிய 'கலிவிராயன்' என்பவன் மேல் சிவபெருமான் காத்தருள் புரிய வேண்டுமென்று ஒரு புலவர் வேண்டிக் கொள்வதாக அமைந்துள்ளது. இவனும் முன்னவன் குலத்தில் உதித்து அக்குலப் பெருமைக் கெல்லாம் உரியவனாகக் கூறப்பெறுகிறான்.

[ பதினுன்குசீர் ஆசிரிய விருத்தம் ]

241 முப்புர தகனு சிற்பரா னந்தா
முழுமறைக் குரியநற் பொருளே
முரிவேங்கடமா வுரியத ஞடுத்த
முதல்வனே அதிகவல் லவனே
செப்பணி முலையாள் உமையிடப் புறஞ்சேர்
செல்வனே ராசையம் பதிவாழ்
செயங்கொண்டநாதா உனதடிக்கடியேன்
செப்பும்விண் ணப்பமொன் றுளதால்
தப்புரை புகலா விற்பன தருவை
சதுரவல் லாணைவென் றவனை
சண்முகன் துணையாச் சிலம்பில் வந்துதித்த
சரசனைத் தாண்டவன் சிதம்ப(ர)ன்
ஒப்புறு துணையாய் வந்தருள்............
உயர்ந்தசெங் குந்தையா திபனை
உலகமே புரக்கும் கலிவிரா யனையுன்
உளமகிழ்ந் தினிதுகாத் தருளே!

முப்புரங்களை எரித்தொழித்த சிற்பரானந்தனே! எல்லா வேதங்களுக்கும் பொருளாக விளங்குபவனே! வலிமை பொருந்திய கொடிய மதம் பாயும் யானை முக அசுரனை வென்று கொன்று அவன் தோலை உரித்து ஆடையாக உடுத்தியிருக்கும் முதல்வனே ஒப்பற்ற வலிமையுடையவனே செப்புப்போல விளங்கும் தனங்களை யுடைய உமாதேவியை இடப்பாகத்தே கொண்டு விளங்குபவனே! இராசையூர் என்னும் தலத்திலே உயிர்கள் உய்யும் பொருட்டு விளங்குகின்ற செயங்கொண்ட நாதனே! உன் இணையடிகளுக்கு அடிய வணுகிய யான் கூறும் விண்ணப்பம் ஒன்றுளது அத

லைக் கேட்பாயாக. வாய்மையன்றிப் பிறமொழியாத வித்தைவல்லவனும் கற்பகத்தருவை ஒப்பவனும், சதுரப்பாடுடைய வலானென்றவனும் சண்முகன் என்பவனுக்குத் தலைமையானவனும் (உமையாள்) சிலம்பினிடத்தே வந்து தோன்றியுள்ள காட்சிக்கு எளியவனானும் தாண்டவம் புரியும் இறைவன் பதிப்பெயரையுடைய சிதம்பரன் என்பவனுக்கு துணையாகப் பிறந்து விளங்குபவனும், உயர்ந்த செங்குந்தர் மரபிலே தோன்றிய தலைவனும் ஆகிய உலகெலாம் புரந்தருள் புரியும் கலிவிராயனை உன் உளமகிழ்ந்து இனிது காத்தருள்வாயாக!

[முப்புரம் = பொன். இரும்பு. செப்புவடிவாக மூன்று கோட்டைகளின் உருவாக விளங்கிய அசுரர்கள். சிற்பரம் = ஞானம் பொருள். மூரி = வலிமை. வேகம்+கடம்+மா = கொடியமதம் பொருந்திய யானை. கடாமுகசுரன். உரி = தோல் அதள் = பசுந்தோல். விற்பனன் = கலைஞன், தரு = கற்பகம். சதுரம் = (ஈண்டுப்) போர்த்திறம். சண்முகன் என்பவன் இவன் இளவல் போலும். சரசம் = எளிமை. அஃதாவது வேண்டினார்க்கு வேண்டும்பொழுது காட்சி தந்து அவர் தம் குறைகளைப் போக்கும் செவ்வியுடைமை. செங்குந்தை என்பது குலத்தை யுணர்த்திற்று. புரத்தல் = காத்தல்.

---

தோற்றுவாய்

[இப்பாடல் முதல் 15 பாடல்கள் தாள அமைதியோடு கூடிய இசைப் பாடல்கள இவை இடை இடையே சுவடிகளில இருந்தவற்றை ஈண்டு ஒரு சேரத்தொகுத்த மைக்கப்பட்டுள. இவை இசைப பாடல்களாகிய கீர்த்தனைக்குரிய இலக்கணங்கள் வழுவாமல் எளிய சொற்களால் தக்க யாப்பமைதியோடு காணப்படுகின்றன. இவற்றைச் சிந்து என்னும் இசைப்பாடற் பகுதியில் அடக்கலாம் ஒரோவிடங்களில் எதுகை இயைபு முதலிய தொடையியல்பு கருதிச் சில திரிசொற்கள் அமைந்திருப்பினும் முன்னும் பின்னும் வரும் சொற் பொருளமைதிகள் ஒருவாறு

பொருள் காட்டும். எனினும் கடுமையான பதங்களுக்குக் குறிப்புரை காட்டப்பட்டுள். பாடல் முழுதினுக்கும் பொழிப்புரை தரவேண்டிய இடர்ப்பாடுடையவையல்ல எனக் கருதித் தோற்றுவாயில் மட்டும் விளக்கம் செய்யப்பட்டுள. இக்கீர்த்தனைகள் சுவடியில் கெட்டும் திரிந்தும் பிறழ்ந்தும் பிழைபட்டும் இருக்கின்ற பகுதிகளைத் திருத்தாமல் ஒருவாறு செப்பனிடப் பெற்றுள. இவற்றைப்பாடினோர் யாரென விளங்காவிடினும் அப்புலவர்கள் நினைந்து கூறியுள்ள பொருளமைதிகள் அவர் தம் கருத்துக்களை நன்கு புலப்படுத்துகின்றன. ஒவ்வொரு பாடலின் உள்ளுறை கருத்துக்கள் ஓரளவு தோற்றுவாயில் எழுதப்பெற்றுள்ளன.]

தோற்றுவாய்

இச்செய்யுள் தான் விரும்பிய நாயகன்பால் சிறிதே புலவிகொண்ட தலைவியொருத்தித்தான் வெகுண்டாள் போல அவனிடத்து நின்றும் பிரிந்து சிறிது அயலே செல்ல அது கண்ட தலைவன் அவளை 'நிற்பாயாக!' என வேண்டுகிறான். அது போது என்னைப்பல்காலும் பல நிலையினும் இன்புறப் பேணுவதாக நீ நம்பிக்கை சொன்னால் நிற்கமாட்டேனோ? என எதிர்மறை ஓகாரத்தால் வினவித்தன் ஊடலைப் புலப்படுத்துவதாக அமைந்துளது.

எடுப்பு

242. நில்லேனோ நம்பிக்கை சொன்னால் - நில்லேனோ
நம்பிக்கை சொன்னால் வெல்லேனோ — (நில்)

முடிப்பு

வெல்லேனோ உன்னிலும் கல்வி
கல்லேனோ உனக்குத்தரஞ்
சொல்லேனோ காமன்கணையை
வெல்லேனோ உன்னுடன்கூட
வல்லேனோநான் கூடியிதழ்
மெல்லேனோ உன்னண்டைக்கொண்டு
நில்லேனோ நம்பிக்கை சொன்னால் — (நில்லே)

சூட்டுவாய் மயலாசைக்கண்ணிற்
காட்டுவாய் நீயலாட்சிங்கு
பூட்டுவாய்நீ பொய்கள்சொல்ல
மாட்டுவாய் நீ ஊருலகைக்
கூட்டுவாய் பின் தாலக்கத்திம்பலம்
ஆட்டுவாய் காரியங்கண்டால்
ஓட்டுவாயுன் சூதறிவேன் – (நில்லேனே)

சென்டு கொண்டு மிண்டாடிநீ
பண்டுவிண்ட செங்கைவளை
கொண்டணைய வேண்டிநகை
வெண்டையங் காலுக்கிப்போது
தண்டையும் முடிக்கமுத்துக்
கொண்டையும் இருகனகத்
தண்டிகையும் இட்டாலிங்கே — (நில்லேனே)

பாலையுந்தேன் சர்க்கரையும்
போலே யுடன் கூடியாடி
லீலையுங்கொண் டாடியாதி
மாலையும் மருங்குவண்ணச்
சேலையுங்கொந் தளகப்பொன்
ஓலையும்என் தோளில்ரத்ன
மாலையையும் ஈந்தாலிங்கே — (நில்லேனே)

---

தோற்றுவாய்

தலைவன் மீது மையலுற்ற தலைவி யொருத்தி அவ ரைக் கூடப்பெருமையால் ஊராரின் அலர் மொழிக்கு வருந்தி அத்தலைவன் வந்த காலத்துப் பேசுவதாக அமைந்துளது இப்பாடல். இப்பாட்டுக்குள் வரும்

தலைவன் இறைவனாகக் காணப்படுகிறான். "புவனைக் குளமன்றுள் ஈசரே' எனக்காணப்படும் தொடரால் புவனைக்குளம் என்பதொரு பதியின் பெயரெனக் கருதவேண்டியுளது. பாடல் சிறிதே சிதைந்து காணப்படுவதால் உறுதி செய்யக்கூடவில்லை.

எடுப்பு

**243.** **ஆச்சுக் காணும் பேச்சுக்கென்னதான் — வீணி லென்னை**
**ஏச்சுக் கிடமாக்கினீரே — எம்சபைவாணரே (ஆச்சுக்)**

முடிப்பு

**மெத்தவும் நண்புபாராட்டுவீர் – மெய்யன்றிருக்கக்**
**கைத்தலத்திற் சிக்கினாற்போல், —**
**சித்தவித்தை காட்டுவீர்**
**சித்தசனைச்சண்டை மூட்டுவீர் – உமக்கு**
**எத்தனைவித்ந்சொனாலும் நித்தமெனை வாட்டுவீர் — (ஆச்சு)**

**ஆதரவாய் வார்த்தைசொல்லுவீர் — சொன்ன சொற்படி**
**காதலைத் தணியாமலே,—**
**பேதகமாய்ச் சொல்லுவீர்**
**சாதனையி னாலேவெல்லுவீர் - உமக்கேற்ற**
**மாதரானால் அல்லோவெகு போதரவாய்ப்புல்லுவீர் — (ஆச்சு)**

**என்றுந் தீராமோகந்தந் தீரே — புவனைக்குள**
**மன்றுளீச ரேலீலையால்**
**இன்று சேர்ந்தே அணைத்தீரே**
**அன்றுசொன் னதும் மறந்தீரே – போம்போம்போம்**
**ஒன்றுமறி யாதவர்போல் இன்றுபெறவந் தீரே — (ஆச்சுக்)**

தோற்றுவாய்

கனகசபாபதி மேல் காமுற்ற தையலாள் ஒருத்தி தனது பிரிவாற்றாமைத் துயரைத் தன் தோழியிடம் கூறி அவர் இன்னும் வரவில்லையே என வருந்துவதாக அதமந்துளது இப்பாடல்

எடுப்பு

244. வந்தாரில்லையே பாங்கியே — மனதுநொந்து
சந்தாபமா நணுகியே — (வந்தா)

தொடுப்பு

கொந்தா ருங் கணைதூவ அந்தோமதனும்வந்தான்
செந்தா மரைப்பதத்தார் செம்பொனம் பல வாணர்
— (வந்தாரிலை)

முடிப்பு

உடனே வருகின்றேமென்றார் — ஊரைநினைந்து
நடவாமல் எதுக்கோ சென்றார்
மடவார் வசையால் வாதைப் படவே படாத
செய்வார்
அடவா ரணமுரித்த ஆனந்தத் தாண்டவராயர் —
(வந்தாரிலை)

ஏனோசொன் னதைமறந்தார் — எனைவருத்தத்
தானேபே ராசையைத்தந்தார்
ஊனே டுயிர்பதைக்க நானே தனியிருப்பேன்
வானோர்கள் போற்றுந்தில்லை மன்றுளாடும் நடராசர்
— (வந்தாரிலை)

மயலால் என் னைக்கூடினார் — மதிப்பில்லாமல்
அயல்மா தரையும் நாடினார்
செயலாவ தேதுசொலாய் தயவாய் இன்னமும்
மேவ
இயல்வாணர் தூதர்தில்லை ஈசர்கனகசபேசர் —
(வந்தாரிலை)

தோற்றுவாய்

தில்லையம்பலக் கூத்தன் மேல் காதலுற்ற அடியார் ஒருவர் அவனைக் காணவேண்டுமென்ற பேரவாவால் தன்னெஞ்சிற்கு அவன் சிறப்பெல்லாங்கூறிக் காண நினைவாயாக என அறிவுறுப்பதாக அமைந்துளது இப்பாடல்: இதனுள் அருஞ் சொற்கள் சிலவுள.

எடுப்பு

245. காண நினை மனமே — தினமும்
காண நினை மனமே — (தினமும்-காண)

தொடுப்பு

வாணனை யாண்ட நிர்வாணனை நெருப்புரு
வாணனை யம்பல வாணனை யேமுனம் — (காண)

முடிப்பு

அம்பரமே யாடை யாகவிருந்தோனை
அம்பர மென்று சருமமணிந்தோனை
அம்பர மான விழியுமையாள்விர
கம்பர வும்புயனை யம்பகத் தால்மத
னம்படை செய்துசயம்பண்ணு மீசனை
அம்பர மகங்கண்ட நம்பனை வேணியின்
அம்பர வும்புயனை அம்பலவாணனை — (காண)

ஆயர் பதிதோறும் வெண்ணெய் அருந்துது
ழாயவனும் வேதனும் தேடும்வி னோதனை
ஆயறி யாதவோர் பரமனை வேதங்கள்
ஆயவு யர்ந்தோனை ஆயமயங்கியுள்
ஆயனை யென்கைவி டாயருளுங்கனி
வாயனை ஒருகயி லாயனை நேயனை
ஆயவு ..................................நடாயனை — (காண)

**வல்லியம் தன்னை உகிரால் வகிர்ந்தோனை**
**வல்லிய தால்சென்ம வாதையைத் தீர்த்தோனை**
**வல்லி கொழுநனைத் தந்தருள் தூரதொரு**
**அல்லில் நடந்தோனை வல்லிருகொந்தள**
**வல்லிரு கொங்கை செவ் வல்லியிதழ்தரு**
**வல்லிதமாகிய வல்லி மருங்கினும்**
**வல்லி சிவகாம வலலிமணாளனை — (காண)**

---

தோற்றுவாய்

*திருவாரூர் தியாகப் பெருமான் மீது மையலுற்ற தலைவி ஒருத்தி தன் வேட்கை மிகுதியால் கனவிலே அவ்விறைவனைக் கண்டு அவரோடு மகிழ்ந்து பின் விழித்தபோது யாவும் பொய்யெனக் கண்டு மனம் நொந்து முறையிடுவதாக அமைத்துளதிப்பாடல். இதனுள் கனவொடு மயங்கல் என்னும் அகப்பொருட் டுறை நயமாகக் கூறப்பட்டுளது.*

---

எடுப்பு

246. **அமையாதோ பட்ட தொல்லைதான் — ஆனாலும்**
**சித்தப்பிரமை யாரைவிட் டதல்லவே — (அமையா)**

தொடுப்பு

**சமயத்திலே தனிவிட்டுப்பிரிந்தீரே**
**கமலா லையம்மை பங்கா விமலாவீதி விடங்கா**
**— (அமையா)**

முடிப்பு

**திருவரந்தைக் கெதிர்வரந்தையோ — தேவரீரென்றும்**
**ஒருவார்த்தைக் காரரல்லவோ — நிதம்**
**வருவீர் வருவீர்என்று வழிபார்த்திருந்ததிந்தத்**
**தெருவார் அறிவாரையா திருவாரூர் தியாகேசரே!— (அமையா)**

கையோடு கையிறுகவே — தழுவிக்கூடும்
சையோக லீலைவேளையில் — மெய்போல
பொய்யோதிப் பொய்க்குத்தக்க பொருளோதிப்
புதைசூதை
மெய்யாயெண் ணினேனென்கண் விழித்தேன்
கனவ தாச்சே —(அமையா)

கழுத்தோடு கழுத்திறுகவே — கனரத்ன
முழுத்தோடு காதிலிலங்க - நைந்து
பழுத்த பழம் நழுவிப் பாலில்விழுந் தாற்போல்
சந்த்ர
முழுத்தமும் நாளுமின்னும் காண்பேனோ
தியாகேசரே! (அமையாதோ)

---

தோற்றுவாய்

தஞ்சையில் எழுந்தருளியிருக்கும் இறைவன்பால் மையல் கொண்ட தலைவி ஒருத்தி அவர் வருகைக்காகக் காத்திருந்து அவர் வராமையால் ஏங்கி மொழிவதாக அமைந்துளதிப்பாடல்.

எடுப்பு

247. வரக்காணேன் எனைக்காதல் வருத்துவ தென்செய்
வேன்
சரக்காமன்றனை வென்ற தஞ்சை நாயகனார் (வரக்)

தொடுப்பு

நேற்றிரவு தனில்நல்ல நிலவெரிய இளந்தென்றல்
காற்றுலவ வீற்றிருந்து கலவிசெய்தவுடனே
தேற்றவெனைக் கழுத்தறுத்துத் திரும்பி வாரோ
மென்று
ஆற்றுத மயல்தந்தே அழகேசர் தாம்பிரிந்தார் —
வரக்

இந்துமதி குடைபிடிக்க இளங்குயில்கள் விருதூதப்
பந்துமுலை மடமாதர் படைத்தலைவர் சூழவந்து
வந்துதென்றற் றேரேறி மகராசன் மதவானி
சிந்தியிட எனநினைந்து சேராத முனைவரினும் —
(வரக்)

–0–

தோற்றுவாய்

சிவபெருமான் மீது மையலுற்று அவன் நினைவாகவே வருந்தியிருக்கும் தலைவி ஒருத்தியை அவள் தாய் இடித்துரைப்பதாக அமைந்துளது இப்பாடல் இதனுள் தலைவிகாதல் கொண்ட தலைவன் செல்வமில்லாதவன் மேலும் அவன் ஆடையணி முதலிய யாவும் விரும்பத்தக்கனவல்ல என்று அத் தாய் கூறுவதாகப் பழிப்பது போலும் புகழ் புலப்படுத்தும் பான்மையால் பேசுவது நயமும் சுவையும் பயக்கின்றன.

எடுப்பு

248. எந்தத் திராணி கண்டவன்மேல்
இச்சை கொண் டாய்மகளே? — நாளும்
கந்தைத் துணியை உடுக்கும் பயித்தியக்
காரன்கங் காதரன்மேல் — (எந்தத்)

முடிப்பு [இசை வேறு]

ஓடே யொழிய கலமென்ற சத்தம்
ஒருநாளுங் கேளானடி — ஒரு
மாடே யொழிய அரைக்காசு தானும்
வகையில்லை என்பானடி — சுடு
காடே யொழிய ஒருகாலவன்வீடு
கூடியறியானடி — இந்தப்
பாடேன் உனக்கு அவன்கையிலேநீ
பலனேது கண்டாயடி? — (எந்தத்)

நச்சரவும் வெள் ளெலும்பும் அணிந்தவன்
நாணமில் லாதவன் டி — வேடன்
எச்சிலை யுந்தின்றப் பூத்தன் கைக்கல்லால்
எறியப் பட்டவன் டி — அவன்
மச்சினனுந் தாத வேடங்கொண்டுறங்கும்
வாரிக் குடிப்பானடி எங்கும்
பிச்சை எடுத்தே இரந்துண்ணியதனில்
பிச்சாட்டம் ஏதுக்கடி — (எந்தத்)

தல்லியும் தந்தையும் இரண்டுமிலாத
தறிதலையானவன் டி — கொள்ள
வில்லா லடியுண்ட வேடனைக்கூட
விதியோ மகளேயடி — அவன்
கல்லிலே நாரை யுரிக்கும் உபாயங்கள்
கற்ற திருடனடி — மோக
வல்லியைப் பாகத்தில் வைத்தே உலகெங்கும்
வாழும் கங்காதரன்மேல் — (எந்தத்)

— 0 —

தோற்றுவாய்

தில்லைவனம் என்னும் சிதம்பரத்தின் சிறப்பைப் பலவகையானும் பாராட்டிப் புகழ்ந் துரைப்பதாக உள்ளது இப்பாடல்.

எடுப்பு

249. பூலோக கயிலாயகிரி சிதம்பரம் வாரி
புவனத்தில் வேறுமுண்டோ — (பூலோக)

தொடுப்பு

சாலோக சாமீப சாரூபர் பணிகனக
சபைவாணர் ஆனந்தத் தாண்டவம புரிதலால்
(பூலோக)

முடிப்பு

நாலுமக மேருவெனும் நாலுகோடி நிரையும்
நவரத்ன மணிகளால் சுவர்வைத்த மதிலும்
மேலுலகை யளவிடுதல் போலுயர்ந்தே
வெயில் விரித்த கம்பத் திரள்களும்
காலுலவு மாயிரக் காலின்மண்டபமும் — நவ
கங்கையும் நிறைந்தசிவ கங்கையின் விசா
லமும்
மாலு மயனுலும் முடியாதபோம்பல
..... வருக்கே அற்புதம் தருதலால் —
(பூலோக)
வேத முதலென்னும் மூலநாத தூவியும்
மேருவில்லியார் சிவகாம வல்லியார்
கோவிலும்
மாதவர்கள் விண்ணவர்கள் போதவியாதார் — திரு
மாளிகைகள் சூளிகைகள் ....... .......
ஏதமொரு சற்றும் அணுகாத கட்டளைகளும்
இரவி போலிலங்கும் இந்த்ர விமானங்
களும்
காத லித்தேகண்ட நலத்தோர் எல்லாரும்
காணநூ ருயிரம் கண்வேண்டுமென்கையால்
— (பூலோக)

மேவார் தொழுந்தில்லை மூவாயிரம் புனிதர்
வீதியும் சைவர் வீதியும் மடங்களும்
தாவாது பசிதவிர அரஅரா வென்னும்
சத்திரசாலையும் பலபல சோலையும்
பூவாவி களும்வயலும் ஒவாமலே பெருகும்
பொன்னி நதியும்சூழ் மண்ணின் வளங்
கண்டு
தேவார மூவர்முதல் நாவாணர் அனைவோரும்
தேசத்தின் இணையில்லைத் தில்லைவனம் என்
கையால் — (பூலோக)

— 0 —

தோற்றுவாய்

அம்பலவாணர் மீது பேரன்பும் பக்தியும் கொண்ட அடியார் ஒருவர் அவன் திருவருளை வேண்டிப் பாடியதாக அமைந்துள திப்பாடல்.

எடுப்பு

250. நம்பினேன் உனை அம்பலவாணா
அம்பலவாணா திகம்பர ரூபா — (நம்பினேன்)

தொடுப்பு

நடம்புரி பாதா வனங் ...... ......
இடும்பை வினோதா கனக சிதம்பரநாதா — (நம்பினேன்)

முடிப்பு

வேண்டலர் மூவரும் மாண்டிடவே — தழல்
மூண்டசெவ் வாயா, விண்ணவர்தம்மை
ஆண்டசகாயா, சங்கரதில்லைத்
தாண்டவ ராயா — (நம்பினேன்)

எனது வினையகல நினதருள் பாலியாய்
தனபதி நேசா சங்கரா தில்லை
வனநட ராசா குஞ்சித பாத
கனகுச பேசா — (நம்பினேன்)

அந்தகன் வீழ உதைத்தஅ கோரவ்
வந்தபி னுகா எந்நாளும் நிறைந்தவை
போகா சிவகாமி சுந்தரி பாகா — (நம்பினேன்)

தோற்றுவாய்

ஐயாற்றில் எழுந்தருளியிருக்கும் பஞ்சநதீசுவரர் பால் காதல் கொண்ட தலைவி ஒருத்தி வண்டினைப் பார்த்து காமமிக்க கழிபடர் கிளவி என்னும் துறை யமையப் பாடுவதாக அமைந்துள்ளது இப்பாடல். இதனை வண்டுவிடு தூதாகவும் கொள்ளலாம்.

எடுப்பு

251. கஞ்சன்மால் தேடிய பஞ்சநதீசரைக்
கண்டாயோ? வண்டரசே!
என்செய்வேன் நானவர் இன்னும் வரக்காணேன்
எவர்மாயமோ வறியேன் — (கஞ்சன்)

முடிப்பு

காவின் மலகிரி பாடும்வண் டேயென்றன்
காதலை என்சொல்லுவேன் — என்
ஆவிக் கொருதுணை இல்லையுன் னுணையீ
தாரறி வாரென் செய்வேன் — என்
பாவி விதிவச மோஅறி யேனிந்தப்
பாவையர் ஏசஉய்யேன் — முனம்
மேவிய லீலைக னவின் நனவின்
வினவி மனது நைவேன் — (கஞ்சன்)

தென்பட்டார் காண்மெத்த அப்போதே நானவர்த்
தேர்ந்தறிந் தாற்பொருந்தேன் — யார்
கண்பட்ட தோஇது முன்னு னுடையாளி
கற்பனையோ பிரிந்தேன் — என்
பெண்புத்தி யாலே பிழைமோசமாய் அவர்
பேச்சைநம் பாதிருந்தேன் — நான்
கும்பிட்ட கோயில் குலதெய்வமானக்காற்
கூடாரோ இப்போ துவந்தே — (கஞ்சன்)

ஆறையில் மேவும் அறம்வளர்த் தாளென்றும்
அம்மைதன் பங்கர் முன்னே - ஆசை
கூறிவரப் போன வண்டும் வரக்காணேன்
கேதைநான் என்சொல்லுவேன் — முடி
யாறணி செஞ்சடை ஐயாற சுவாமியென்
ஆசையெல் லாந்தவிர்க்க
வீருன இந்திரன் விமானத்துமேல்வந்து
மேவினனை யணைந்தார் —(கஞ்சன்மால்)

தோற்றுவாய்

இதுவும் தில்லையம்பலவாணர் மேல் காதல் கொண்ட தலைவியொருத்தி அவ்விறைவனைக் கனவிலே கண்டு கனவை உண்மையென நினைத்துக் களவொழுக்கத்தில் நீர் என்னை அடைவது பொருந்தாது சுற்றத்தார் முன் சேலை கொடுத்து மாலையிட்டு மணந்து கொள்வீராக அப்போது என் இல்லத்தே உமக்கு இரவும் பகலும் இன்பளிப்பேன் எனக் கூறுவதாக அமைந்துள்ளதிப்பாடல். சில தொடர்கள் பிறழ்ந்துள்ளனவின் பொருள் தெளிவாகவில்லை.

எடுப்பு

252. வேண்டாம் ஈதெல்லாம் காரியமல்ல
தீண்டாதே நல்லீர்! — தாய்தமர்கண்டால்
அண்டார் என்றும்பயப்படார் — தில்லைத்
தாண்டவராயரே — (வேண்டாம்)

முடிப்பு

காவீலே வந்தவென்னை மல்லிகைப்பூவினாலே
எறிந்து மருவித்
தாவி வலியப் பிடித் (தென்பால்) பண்ணாத
சரசம் பண்ணுறீர்

கோவி லாத ஊரோ அய்யகோ பாவியேன்
இது ஆர்செய்வார்கள்
சேவிலேறும் திருத்தில்லை நாதரே—(வேண்டாம்)

இன்னார் இனியாரென் றெண்ணாமல் முன்னாள்
உறவாய் இருந்தவர்போல்
பின்னாலேவந்து தழுவினாற்கண்ட
பேரென்ன சொல்லுவார்கள்
சொன்னாலுஞ்சற்றும் அறியீர் இல்லைமின்
னாருமதோவருகிறார்
பொன்னின் நாடர்பணி பரதரேதிருப்
புலியூரீசரே — (வேண்டாம்)

ஆகுமி லாதவி டந்தேபி டித்தால்
சேர்வாளெனப் பார்க்கிறீர்
தாருகாவன மாதரீ போலல்ல
சமத்தி நான் ஐயா
ஊரும் உலகும் அறியச் சேலை தரும்
இரவும் எரிபகலும் வீடே
வாரும் கூடி யிணங்குறேன் செம்பொன்
மன்றுள் ளீசரே ! (வேண்டாம்)

---

தோற்றுவாய்

திருக்குடந்தை ஆராவமுதப் பெருமாள் மேல் மையல்கொண்ட தலைவி யொருத்தி அவர் தன்னைக் கூடப் பெருமையால் அவர்பால் பரத்தைமைக் குற்றம் கற்பித்துப் பிணங்கிப் பேசுவதுபோல் அமைந்துள திப்பாடல்.

எடுப்பு

253. செய்வதேது மோசம் போனால் நீர் — (செய்வ)

தொடுப்பு

செய்வ தேதுதான்நீரே - திரிந்த மோகமும்....ரே
அய்வர் சகாய ணரே — ஆராவமுதனரே (செய்வ)

முடிப்பு

பாலிருக்க நஞ்சைவுண்டீர் — பழகிய என்னை
விண்டீர்
வாலிபம் பொல் லாதுகண்டீர் — மானின்பின்
னேதுவண்டீர் (செய்வதேது)

வேசிக்குண் டோவிசுவாசம் மெத்தவுண்டுமக்கு
நேசம்
ஆசைக்கங் கேதவ காசம் - யாருக்கும் வாராதோ
மோசம் —(செய்வதேது)

காமமெவரையும் கொல்லும் — கலந்தது
யாரெமக்குச் சொல்லும்
கோமள வல்லிமிகப்புல்லும் — குடந்தை
யமுதனரே சொல்லும் —(செய்வதேது)

---

தோற்றுவாய்

*திருநாறையூர் நம்பி என்பாருக்கு உரிமையுடையா ளொருத்தி, அவர் தன்னை எள்ளிக்கூறியதாகக் கேட்டு வருந்தி இனிப் பொறேன் எனத் தோழியிடம் நொந்து கூறுவதுபோல அமைந்துள்ளது இப்பாடல்.*

எடுப்பு

254. ஒருநாளோ பொறுப்பேன் — மின்னே
திருநாறை யூர் நம்பியென்
அருமை யறிந்தும் சொன்னது — (ஒருநாளோ)

முடிப்பு

ஆசை தனைமனத்தில் அடக்க அறியாமலே
(ஈசும ரோசமும் போகப்) பேசிவந்தேனே
வாசலில் வருவதும் ரோசமாகவேஎண்ணி
வேசியர் முன்னே என்னைப் பேசின நிந்தை
கேட்டும்
—(ஒருநாளோ)

முள்ளென்று மதியாமல் முத்தென்றும்
அணியாமலே
உள்ளொன்றும் புறம்பொன்றும் கள்ளமும்
செய்யாமலே
என்னென்றால் எண்ணெய் நீட்டி மென்ன
இதங்கள்காட்டி
உள்ளஞ்சி நடந்தேனைத் தள்ளென்றநிந்தை
கேட்டும்
—(ஒருநாளோ)

திரவிய மும்மெனக்குச் சீவனும் அவராசை
இரவும் பகலும் சேர்ந்து காணலாம்
என்றிருந்தேன்
அரவின் உறவுபோலக் கரவின் மனதுவைத்து
வரதனி ராசநம்பி விரகம்வேறாகச் சொன்னது
—(ஒருநாளோ)

---

தோற்றுவாய்

இப்பாடல் இறைவனை அருளை வேண்டி ஒரு அடியார் கூறுவது. அல்லது ஒரு தலைவி தன்னை ஏற்று அருள்புரிந்து ஆளுவாய் என வேண்டிக்கொள்வதுமாம்.

கல்யாணி

255. நீதய வாயெனை யாளாய்—ஒரு
மாதவர் தேடுங்கங்காளா
ஆத்தி சூடிய தோளா —உமை
காதல் குஞ்சித தாளா —— நீதயவாய்

மூவர்பரவுறுவி னோதா —திரு
நாவ லூரான்விடு தூதா
யாவரும் நம்பின பாதா – மக
தேவ கனகசபை நாதா —— (நீதயவாய்

—0—

தோற்றுவாய்

இப்பாடல் அம்பலத்திற் கூத்தியற்றும் பெரு மானின் ஆடலைச் சிறப்பித்து அவர் ஆடுங்கால் உட னசைந்தாடும் பொருள்களை யெல்லாம் சுட்டி அவ்வாட லுக்கு ஏற்ற தாளக் குறிப்புக்களோடு அமைந்துள்ளது. இதன் தலைப்பு "தாளகிரி சிந்து" எனச் சுவடியில் வரையப்பட்டுளது. தாளகிரி என்பது ஊர்ப் பெயரா மலைப்பெயரா; அல்லது தாளங்கள் அமைந்துள்ள இச் சிந்து தாளங்களால் விளங்கும் மலையொக்கும் என விளக்கும் காரணப் பெயரா என்பது விளங்கவில்லை.

தாளகிரி சிந்து

256. ஆடல் புரிகுவது பாராய் — பொன்னின்
நாடரொடு தேடசபை நாடகவினோதா —
(ஆடல்)

பஞ்சவர் இறைஞ்சவரு மஞ்சயன துஞ்சனெனுஞ்
— — — செய்பதஞ்சலிகள் தொழவே
வெஞ்சமனு மிஞ்சமுய லுஞ்சரிதை விஞ்சமிக
வுஞ்சதிநிறைந்தபுலி நெஞ்சகமுருக

தரிகிட தக்கிட்டத் தாந்தோம் தாந்தித்தாந்தோம்
திரிகிட திக்கிட்டத் தீத்தோம் — தீந்தீந்தீந்தோம்
திரிகிட தக்கிட்டத்தாம் —திரிகிட தீக்கிட்டத்தீம்
திரிகிட தக்கிட்டதரி திக்கட்டத்ததிமிதிமிதித்திமி
ஏனுஞ்சதியுமிகவதிரவே —(ஆடல்)

கையமரும் நெருப்பதுடிப் பையலி செய்யமுதிர்
வெய்யகனல் பெய்யஒளி தரவே
வையகமும் ஐயன், பவ நையஉல குய்யஉயிர்
உய்யமலர் பெய்ய ஒரு தையலான்

தக தக தக தகத் தாத்தோம் — தாந்தித்தாந்தோம்
திக திக திக திக தீந்தோம்-தக தக தக தக தாந்தாம்
திக திக திக திகத்தீம்—தக தக தக தகத்தீம்
திகதித்தந் ததிமிதமிதித்திமிஎனுஞ் சதியுமிகவதிரவே
(ஆடல்)

தினகரர் எகினர்புலி சாசன காசுகர் புனலரசர்
அனலனு தினமுமெதிர் புகழவே
வனசமிசை தினமயிலும் மனமருவின் புலிசையினர்
தழைய உனதருள் கனக சபை வாணு

தந்தந்தன தந தந தாத்தித்தோம்—தாத்தித்தாத்
தோம்
திந்திநதி நதி நதிருதிந்தோம் — தீந்தத தீந்தோம்
தந தந தத் தாம்தீந்தீந்ததீம் — தந்தநதநதாந்தி
நதித்ததி
நத ததி மிநமி தித் திமி எனுஞ் சதியுமிக வரதிவே—
(ஆடல்)

[இப்பாடலுள் பலவடிகள் பிறழ்ந்துள்ளன. தாளவொத்துக்களும் பிழைபட்டுள்ளன. ஏட்டில் உள்ளவாறே இங்கு அமைக்கப்பட்டுளது. நல்ல பாடம் கிடைப்பின் சுவைதரும்]



# தனிப்பாடற்றிரட்டு II-ஆம் பாகம் பாடல் முதற் குறிப்பு

## அகராதி

